# கலைஞரின் புலப்பாட்டுத் திறன்

அழகப்பா பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக
வழங்கப்பட்ட ஆய்வேடு

ஆய்வாளர்

**திருமதி வெ.திருவேணி,** எம்.ஏ.,எம்ஃபில்.,

நெறியாளர்

**முனைவர்.இரா.பாலசுப்பிரமணியன்,** எம்.ஏ.,எம்ஃபில்.,பிஎச்.டி.,டி.ஜி.டி



**தமிழ்த் துறை**

அழகப்பா பல்கலைக்கழகம்

காரைக்குடி - 630 003

**செப்டம்பர் - 2007**

**முனைவர்.இரா.பாலசுப்பிரமணியன்,** எம்.ஏ.,எம்.ஃபில்,,பிஎச்.டி.,டி.ஜி.டி
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள் : 5.09.07.

## நெறியாளர் சான்றிதழ்

**கலைஞரின் புலப்பாட்டுத் திறன்** என்னும் தலைப்பில் திருமதி **வெ.திருவேணி** அவர்கள் செய்துள்ள இவ்வாய்வேடு அழகப்பா பல்கலைக்கழகத்தில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும், இவ்வாய்வின் மீது வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

இடம் : காரைக்குடி

தேதி : 05.09.07.

முனைவர் இரா.பாலசுப்பிரமணியன்
நெறியாளர் கையொப்பம்.

05.09.07

துறைத்தலைவர்
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003

**திருமதி வெ.திருவேணி, எம்.ஏ.,எம்.ஃபில்,,**
முனைவர் பட்ட ஆய்வாளர்
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி - 630 003.

நாள் : 5 .09.07.

# ஆய்வாளர் உறுதிமொழி

**கலைஞரின் புலப்பாட்டுத் திறன்** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக (பிஎச்.டி) செய்யப்பட்ட இவ்வாய்வு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேட்டினை நான் அளிக்கவில்லை என்று உறுதி கூறுகின்றேன்.

வெ.திருவேணி 05.09.07.

இடம் : காரைக்குடி — **வெ. திருவேணி**

தேதி : 05.09.07. — ஆய்வாளர் கையொப்பம்.

உறுதிக் கையொப்பம்

முனைவர் **இரா.பாலசுப்பிரமணியன்,** எம்.ஏ.,எம்ஃபில்.,பிஎச்.டி.,டி.ஜி.டி.,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

# நன்றியுரை

ஆய்வு செய்ய வாய்ப்பு நல்கிய அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும் துறைக்கும் உளம் நிறைந்த நன்றி.

என்னை ஈன்ற அன்னை திருமதி இந்திரா வெங்கடாசலம் அவர்கட்கும், நினைவில் வாழும் தந்தைக்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வுக்கு ஒப்புதலளித்தும், ஆய்வு நெறியாளராக அமைந்து, ஆய்வுத் தொடக்கத்திலிருந்து முடிவு வரை எல்லாநிலைகளிலும் ஆய்வு முறைகளை நெறிப்படுத்தி இவ்வாய்வு சிறப்புற அமைய பல்லாற்றானும் உறுதுணை புரிந்த ஆய்வு நெறியாளர் அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் முனைவர் இரா.பாலசுப்பிரமணியன் அவர்களுக்கும், திருமதி கவிதா பாலசுப்பிரமணியன் அவர்களுக்கும் இதயங்கனிந்த நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

வாழும் திருவள்ளுவர், முத்தமிழ் வித்தகர், டாக்டர் கலைஞர் முதல்வர் மு.கருணாநிதி அவர்களின் நூல்கள் அனைத்தையும் வழங்கி, "கலைஞரின் புலப்பாட்டுத்திறன்" என்ற தலைப்பில் ஆய்வு செய்ய ஆலோசனைகள் கூறிய முன்னாள் அழகப்பா பல்கலைக்கழக ஆட்சிக்குழு உறுப்பினர், சென்னை உயர்நீதிமன்ற (மதுரைக்கிளை) மூத்த அரசு வழக்கறிஞர் திரு.வே.காசிநாதன்,எம்.ஏ.,பி.எல்., அவர்களுக்கு நன்றி கூறுவதில் பெருமையடைகிறேன்.

ஆய்வுத் தொடர்பான அறிவுரைகள் கூறிய முனைவர் மு.பாண்டி, முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை, முனைவர் சு.இராசாராம் ஆகியோருக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு செம்மையுற ஊக்கமளித்து, பலவகையிலும் உதவிபுரிந்த என் அன்புக்கணவர் அரசு வழக்கறிஞர் திரு.க.பொன்முடி அவர்கட்கும், என்னுடன் பிறந்த அன்புச் சகோதரர்கள் திரு.வெ.விஸ்வநாதன், திரு.வெ.குமார், திரு.வெ.இரமேஷ், சகோதரிகள் இந்துமதி, ரஞ்சனி, கவிதா, என் மகன் செல்வக்குமார், என் மகள் காவ்யா ஆகியோர்க்கு என் பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வு நிறைவேற உதவி புரிந்த நான் பணியாற்றும் அழகப்பா மாதிரி மேல்நிலைப்பள்ளித் தலைமையாசிரியர், ஆசிரியப் பெருமக்கள், அலுவலக நண்பர்கள், அன்புத் தோழிகள் அனைவருக்கும் நெஞ்சார்ந்த நன்றியைச் செலுத்துவதில் மகிழ்ச்சி அடைகின்றேன்.

ஆய்வு சிறப்புற அனைத்து உதவிகளையும் நல்கிய முனைவர் பழனி இராகுலதாசன் அவர்கள், முனைவர் சோ.முத்தமிழ்ச்செல்வன், முனைவர் சொல்லேருழவன் ஆகியோருக்கும் அன்பு கலந்த நன்றி.

ஆய்வேட்டைச் செம்மையாகக் கணிப்பொறி வாயிலாக வடிவமைத்துத் தந்த கணிப்பொறி வரைவாளர் தஞ்சை திருவள்ளுவர் கணினி மைய உரிமையாளர் திரு. R.தங்கையன் அவர்களுக்கு என் நன்றி.

**திருமதி.வெ.திருவேணி**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| எழு | - | எழுத்ததிகாரம் |
| கா.தா.கா | - | கார்க்கியின் தாய் காவியம் |
| தொ.பூ | - | தொல்காப்பியப் பூங்கா |
| தொகு | - | தொகுதி |
| நூ.பா. | - | நூற்பா. |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| ப. ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பொரு. | - | பொருளதிகாரம் |
| மெய் | - | மெய்ப்பாட்டியல் |
| மே.நூ. | - | மேலே சுட்டிய நூல் |

# பொருளடக்கம்

# முன்னுரை

இலக்கியக்கலை கலைகள் அனைத்திலும் சிறந்த இடத்தைப் பெறுகிறது. வாழ்வியலுக்கும் இலக்கியத்திற்கும் நெருங்கியத் தொடர்பு இருப்பதால் இலக்கியக் கலை மேன்மையுறுவதாகக் கருத இடமுண்டு. மக்களின் வாழ்வியல் சூழலுக்கும், தேவைக்கும் ஏற்ப இலக்கியங்கள் பல்கிப் பெருகி வருகின்றன. மக்கள் மத்தியிலும் வரலாற்றிலும் பயன்பாட்டிலும் இலக்கியங்கள் வெற்றி பெற்றால், அவை ஆற்றல் இலக்கியங்களாகின்றன. (Power of Literature)

ஐரோப்பியர் வருகைக்குப் பின்னும், பல இலக்கிய இயக்கங்களின் ஆக்கத்திற்குப் பின்னும் உருவான இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்கள் மாற்றமும், ஏற்றமும் புதுமையும் பெற்று இலங்குவதைச் செயல்முறை வரலாற்றில் உணரலாம். இச்சூழலுக்கு வகை (Genre) வடிவம் (form), பொருள் (content) சோதனை முயற்சிகள் போன்றவை ஆக்கக்காரணிகளாக உள்ளன.

இந்நூற்றாண்டு இலக்கியங்கள் வகையாலும், வடிவாலும் பொருளாலும் புதுப்புதுச் சோதனை முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. படைப்பாக்க உலகில் சிறுகதையில் சிறப்புற்றவர்கள் நாவல் கலையில் வெற்றி பெறுவதில்லை. புதுக்கவிதை இலக்கியத்தில் சிறப்புற்றவர்கள் உரைநடை இலக்கியத்தில் சிறப்புறுவதில்லை. புதுமைப்பித்தன் சிறுகதை இலக்கியத்தில் பெற்ற பேற்றினைப் புதுக்கவிதைப் படைப்பாக்கத்தில் பெற்றிருக்கவில்லை. இலக்கியத்துறை அனைத்திலும் சாதனை படைத்தவர் ஒருசிலர். அச்சிலரில் கலைஞரும் இடம்பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது. நாடகம், சிறுகதை, நாவல், புதுக்கவிதை, கட்டுரை, மேடைப்பேச்சு ஆகிய அனைத்துக் கலைகளிலும்

கால் பதித்து வெற்றி பெற்றவர். இவையனைத்தையும்விட, அரசியல் மேதையாகவும் விளங்குவது குறிப்பிடத்தக்கது.

மேலே குறித்த சாதனைக் கலைஞர் உரையாசிரியராகவும் காவிய ஆசிரியராகவும் விளங்கித் தமிழ் இலக்கிய வரலாற்றில் தடம்பதித்த நிலை கருதுதற்குரியது. பல்திறன் படைத்தக் கலைஞரை மையமிட்டு பின்வருமாறு ஆய்வுத்தலைப்பு அமைத்துக்கொள்ளப்பெறுகிறது.

**ஆய்வுத் தலைப்பு** (Topic)

கலைஞரின் பல்திறன் விரிந்த நிலையில் இருக்கும் நிலையில் வரையறை கருதி உரைத்தன்மையும், காவிய ஆசிரியத்தன்மையும் மையமிட்டு மதிப்பிடப்பெறும் நிலையைக் கருத்தில் கொண்டு கலைஞரின் புலப்பாட்டுத்திறன் என்ற தலைப்பு அமைத்துக்கொள்ளப் பெற்றுள்ளது.

**ஆய்வு முன்னோடிகள்**

கலைஞரின் படைப்புகள் பல்வேறு நிலைகளில் ஆய்வியல் அறிஞர் பட்டத்திற்கும், முனைவர் பட்டத்திற்கும் ஆய்வு பொருளாக வெளிவந்துள்ளன. கலைஞரின் உரைநடைத்திறனை வெளிக்கொணரும் நோக்கில் கலைஞரின் கருத்துப் புலப்பாட்டு நெறியை வெளிப்படுத்தும் முறையில் திருநெல்வேலி மனோன்மணி சுந்தரனார் பல்கலைக்கழக மாணவர் அ.ஜோதி ரவீந்திரன் என்பவர் 2002 ஆம் ஆண்டு கலைஞர் மு.கருணாநிதியின் கருத்துப் புலப்பாட்டு நெறி என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வு செய்துள்ளார். இவ்வாய்வில் சங்கத்தமிழ், குறளோவியம்,நெஞ்சுக்கு நீதி ஆகிய நூல்கள் முதன்மை ஆதாரங்களாக அமைந்துள்ளன. தொல்காப்பியப்பூங்கா, தாய்காவியம் ஆகியவற்றில் அமைந்த கலைஞரின் புலப்பாட்டு நெறிகளைத் தொகுக்கும் முதல் முயற்சியாக இவ்வாய்வு அமைந்துள்ளது.

**முதன்மை ஆதாரம்**

கலைஞரின் இலக்கண உரை விளக்கம் சார்ந்த தொல்காப்பியப்பூங்காவும், தாய்காவியமும் மிகுந்த புலப்பாட்டுத் திறன்களைப் பெற்றுள்ளன. இதனைக் கருத்தில் கொண்டு ஆய்வுத்தலைப்பு ஆய்வாளரால் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**கருதுகோள்**

படைப்பாளரின் வாழ்வியல் வரலாற்றை உணர்ந்த நிலையில் அவர்தம் படைப்புக்களை மதிப்பிடுதல் ஆய்விற்குரிய முதன்மைக் கருத்தாக்கங்களை தெளிவாக்குதல், புலப்பாட்டுத் திறன் பற்றிய கோட்பாடு மற்றும் அறிஞர் தம் சிந்தனைகளைத் தெளிவுபடுத்துதல், தொல்காப்பியப்பூங்காவில் அமைந்துள்ள புலப்பாட்டுத் திறன்களை மதிப்பிடப்பெறுதல், தாய்காவியத்தில் அமைந்துள்ள புலப்பாட்டு நெறிகளை இனம்காணுதல், படைப்பாளரின் பிற தனித்திறன்களை அறிவதின் வாயிலாக முப்பரிமாணத்தை உருவாக்குதல் மேற்குறித்த நோக்கத்திற்கு உரியதாகக் கருதுகோள் அமைந்துள்ளது. (hypothesis)

**அணுகுமுறை** (Research approach)

பொதுவாக ஆய்வின் விளக்கமுறை கூறுகளை (Descriptive approach) அடிப்படையாக இவ்வாய்வு மேற்கொண்டுள்ளது. கலைஞரின் வரலாற்றுப் பின்னணியில் அவர்தம் படைப்புக்களை மதிப்பிடும்வகையில் வாழ்க்கை வரலாற்று அணுகுமுறை (Biographic approach)யும் ஆய்வில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**ஆய்வுமூலம்** (Research Source)

கலைஞரின் தொல்காப்பியப் பூங்கா, தாய்காவியம் ஆகிய நூல்கள் முதன்மை ஆதாரங்கள் (Primary sources) அவர்தம் நூல்கள் பற்றிய

கட்டுரைகள், பேட்டிகள், கருத்தரங்கச் செய்திகள், பாராட்டுரைகள் போன்றவை துணை ஆதாரங்கள் (Secondary Sources).

**ஆய்வுப் பகுப்பு**

| | |
|---|---|
| இயல் ஒன்று | : தமிழும் கலைஞரும் |
| இயல் இரண்டு | : உள்ளீடுகள் |
| இயல் மூன்று | : புலப்பாட்டு வரைவிலக்கணம் |
| இயல் நான்கு | : இலக்கணப் புலப்பாட்டுத் திறன் |
| இயல் ஐந்து | : காவியப் புலப்பாட்டுத் திறன் |
| இயல் ஆறு | : பிற திறன்கள் |

முதல் இயல் தமிழும் கலைஞரும் என்னும் தலைப்பில் அமைந்துள்ளது. கலைஞரின் வாழ்க்கை வரலாறு, கல்வி பெற்ற நிலை, இளமைக்கால இலக்கிய ஆர்வம், அரசியல் ஆர்வம், கலைஞரை கவிஞர்கள் தமிழாகக்கூறிய திறன், அறிஞர்களின் பாராட்டுரை, கலைஞர் தமிழோடு கொண்ட தொடர்பு, கவிஞராக விளங்கும் நிலை, தமிழைக் கலைஞர்கையாண்டுள்ள விதம், தமிழின மக்களுக்குக் கருத்துப் பரிமாற்றம் மொழியால் வெளியிட்ட திறம், தமிழையும் தமிழினத்தையும் காக்கும் திறம் ஆகியவற்றைப் பற்றிய கருத்துரைகள் தொகுக்கப்பட்டுள்ளன.

இரண்டாவது இயல், உள்ளீடுகள் என்னும் தலைப்பில் அமைந்துள்ளது. ஆய்வு நூல்களான தொல்காப்பியப் பூங்கா, தாய் காவியம் ஆகியவற்றின் அமைவு, நூல்கள் எழுந்த சூழல், கலைஞரின் எண்ணம், உள்ளீட்டுப் பகுப்புகள் தொகுக்கப்பட்டுள்ளன.

இயல் மூன்று புலப்பாட்டு வரைவிலக்கணம் என்னும் தலைப்பிலமைந்துள்ளது.

புலப்பாட்டு நெறியின் சொற் பொருள் இலக்கணம் இந்நெறி தோன்றிய நாடு, கருத்து கூறிய மேல்நாட்டறிஞர் கொள்கைகள், தமிழில் புலப்பாட்டு நெறியமைந்த நிலைகள் ஆகியவற்றைப் பற்றிய கருத்துரைகள் தொகுக்கப்பட்டுள்ளன.

இயல் நான்கு இலக்கணப் புலப்பாட்டுத் திறன் என்னும் தலைப்பிலமைந்துள்ளது.

தொல்காப்பிய நூற்பாக்களை எளிமைபடுத்தி வெளியிட கலைஞர் கையாண்டுள்ள நாடக வடிவு, குட்டிக்கதை அமைவு, விரிவுரை அமைவு, தன் கவிதை கூறல், தன் கவிதையால் உரை விளக்கம் கூறல், உரையாசிரியரின் கருத்துக்களை வெளியிடல், உலக வரலாற்றுச் செய்திகளோடு பொருள் விளக்கம் கூறல், சமகாலத்தவர்களின் வாழ்வியலோடு இணைத்து விளக்கம் கூறல் ஆகியவற்றைப் பற்றிய கருத்துரைகள் தொகுக்கப்பட்டுள்ளன.

இயல் ஐந்து காவியப் புலப்பாட்டுத் திறன் என்ற தலைப்பில் அமைந்துள்ளது. உரை விளக்க அமைவில் நாடகப் பாங்கு, ஆசிரியப் பாங்கு, தன்னுணர்வுப் பாங்கு, கதைச் சொல்லும் பாங்கு, விரிவுரை அமைவு, அகத்துறை உணர்வு, காட்சி விளக்கம், பாத்திரத்தின் வாயிலாக உரை விளக்கம் செய்யும் நிலை உலக வரலாற்றைச் சுட்டல், சமுதாயக் குறையைச் சுட்டல், ஓவியக் காட்சி, உரையாடல்திறன், சீர்திருத்தக் கருத்து, திருவிழா அமைவு, அறிவியல் புலப்பாடு, எளிய விளக்கம், பழைய நாடகத்தைச் சாட்டல், எழுச்சிநடை, ஆரிய மறுப்பு, தமிழ் வழி, உயர்வு தாழ்வு மறுப்பு, விளக்கக் குறிப்பு, வாழ்வியல் தத்துவம், எதிர்நிலைப் பாத்திரத்தைப் போற்றல், நகைச்சுவை, மரபு மற்றும் திறம், வரலாற்று விளக்கம், நடப்பியல், புதுமை விளக்கம், தன் படைப்பை இணைத்தல், தன்னை உயர்த்தும் தன்மை, தலைப்பு, தெய்வப் புலப்பாடு

முன்னோர்களைச் சுட்டும் திறம், பழைய இலக்கியங்களைச் சுட்டல், வடசொற்கள்அமைந்தவிதம் ஆகியவற்றைப் பற்றிய கருத்துக்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

இயல் ஆறு கலைஞரின் பிற திறன்கள் என்னும் தலைப்பில் அமைந்துள்ளது. படைப்பிலக்கிய நிலைக்கு அப்பாற்பட்ட திறன்களான மதிநுட்பம், சொல்லாற்றல், எழுத்தாற்றல், நகைச்சுவை உணர்வு, கவிநயம், கொள்கை உறுதி, செயலாக்க முறை, அரசியல் திறன், வெற்றித்திறன், தன் வரலாறு எழுதியத் திறன், பகையைப் பாராட்டும் திறன், மனித நேயத்திறன் முன்னோர்களைப் போற்றும் திறன் ஆகியவற்றைப் பற்றிய கருத்துரைகள் தொகுக்கப்பட்டுள்ளன.

முடிவுரையில் ஆய்வு முடிவுகள் தொகுக்கப்பட்டுள்ளது.

பின்னிணைப்பில் கருத்து விளக்கத்திற்காகப் பயன்படுத்திய படங்களின் ஒளிப்படநகல்கள் இணைக்கப்பட்டுள்ளன.

துணை நூற்பட்டியலில் ஆய்விற்குப் பயன்பட்ட நூல்களின் அகரவரிசை தொகுக்கப்பட்டுள்ளது.

# இயல் - 1

# தமிழும் கலைஞரும்

கலைஞர் கருணாநிதியின் இலக்கியப்பணி மிக விரிந்த அளவினதாகும். தமது கவிதைகளால் - கட்டுரைகளால் - புதினங்களால் - சிறுகதைகளால் - நாடகங்களால் - திரைப்படங்களால் - அரசியல் வரலாற்று நூல்களால் தமிழுக்கு அணிசேர்த்தவர் கலைஞர். தமிழோடு கலைஞர் இணைந்துள்ள திறத்தினைத் தொகுப்பது இவ்வியலின் நோக்கம்.

"உலக நாட்டு முதல்வர்களுள் ஒருவர் கவிதை - நாடகம் - கட்டுரை - திரை உரை இத்தனையும் எழுதவல்லவர், மாற்றாரும் மருள மேடைத்தமிழ் மகுடி வாசிக்க வல்லவர் ஒருவர் உண்டென்றால் அவர் மாண்புமிகு கலைஞர் அவர்களே"[1]. புலவர் பட்டமோ வித்வான் மகுடமோ பெற்றவரல்லர் கலைஞர். பட்டம் பெறுபவர்களுக்குப் பட்டமளிப்பு உரையாற்றும் அறிவாண்மை பெற்றவர். "இலக்கிய உலகின் விடிவெள்ளியாகப் பளிச்சிடும் அவருக்குத் தனித்தன்மை உண்டு. பாணி உண்டு, பாதை உண்டு."[2] எழுச்சிமிகு எண்ணங்களின் ஊற்றான கலைஞர் உள்ளத்து உணர்வைத் தாமுணர்ந்தவாறு பிறரை உணரச்செய்யும் ஆற்றல் பெற்றவர்.

**கலைஞரின் பிறப்பு**

தஞ்சை மாவட்டத்தில் திருவாரூர்க்கருகில் திருக்குவளை என்ற சிற்றூர் இருக்கிறது. இவ்வூரில் 1924 ஆம் ஆண்டு ஜூன் திங்கள் மூன்றாம்

நாள் கலைஞர் மு. கருணாநிதி பிறந்தார். "தந்தை முத்துவேலர், சிறந்த வித்துவான், தமிழில் கவி எழுதும் ஆற்றல் பெற்றவர், தாயார் அஞ்சுகத்தம்மாள்"[3].

கலைஞரின் தந்தை முத்துவேலர் ஊரில் புராணக் கதைகளைச் சொல்லும் ஆற்றல் படைத்தவர். அவர் சிறந்த மாந்திரிகர் என மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டவர். மருத்துவமும் செய்வார். முத்துவேலர் ஒரு பழுத்த கடவுள் பக்தராக இருப்பினும், ஊரில் நிகழும் அநீதிகளை எதிர்த்துக் குரல் கொடுக்கும் வன்மையுடையவர்.

**பிறப்புச் சூழல்**

கலைஞரின் பெற்றோருக்கு நெடுநாட்களாகக் குழந்தை இல்லை. பின்னர் பெருநாயகம், சண்முகசுந்தரம் என்னும் இரண்டு பெண்குழந்தைகளைப் பெற்றார்கள். பின்னர் திருத்தலங்களுக்குச் சென்று தீர்த்தங்களாடி, கடும் விரதங்களை மேற்கொண்ட பின் பிறந்தவர் கலைஞர். 'பெற்றோர் அவருக்கு இட்டபெயர் தட்சிணாமூர்த்தி'[4] என்பதாகும்.

**இளமை வாழ்க்கை**

பன்னிரெண்டாவது வயதில் திருவாரூர் உயர்நிலைப் பள்ளியில் சேரும்வரை கலைஞரின் கல்வி, திருக்குவளையில் தான் நடைபெற்றது. திருக்குவளைக் கிராமப்பள்ளியின் தலைமையாசிரியரிடம் கலைஞர் தனியாகவும் பாடம் பயின்றார்.

பன்னிரெண்டாம் வயது வரையில் திருக்குவளையில் பயின்ற கலைஞர், பின்னர் திருவாரூரில் உயர்நிலைப் பள்ளியில் படித்தார்.

இளமையில் இசைக் கல்விக்குத் தந்தையார் ஏற்பாடு செய்தாலும்; கலைஞருக்கு அதில் நாட்டமில்லை. ஐந்தாம் வகுப்பில் துணைப்பாட நூலாக இருந்த ‘பனகல் அரசர்’ என்னும் ஐம்பது பக்க நூலை ஆழ்ந்து கற்றுத்தெளிந்தார்.

அரசியல் ஈடுபாடு காரணமாகக் கலைஞர் கல்வியில் கவனம் செலுத்தாமல் பள்ளி இறுதித் தேர்வில் மூன்று முறை தோல்வி கண்டார். மூன்றாவது முறை தோல்வியைத் தழுவிய பின், வேதனையைப் பொறுத்துக்கொள்ள இயலாமல் வீட்டை விட்டு ஓடிவிடுகின்றார். பின்னர் தம் நண்பர் தென்னன்மூலம் வீட்டுக்குத் தெரிவித்து, அவருடன் வீட்டுக்குத் திரும்பினார். பள்ளியிறுதித் தேர்வில் தேர்ச்சி பெறாமல் போய்விட்டது கலைஞரின் மனதில் ஆறாத வடுவாக அமைந்துவிட்டது.

**கலைஞரின் திருமணவாழ்க்கை**

கலைஞர் 13.09.1944 அன்று பத்மா அம்மையாரைச் சீர்திருத்தத் திருமண முறைப்படி மணந்துகொண்டார். மூன்றாண்டுகள் கலைஞருடன் இல்லறம் நடத்திய இவர் 1947 இல் காலமானார். 1948 செப்டம்பர் 18 ஆம் நாள் கலைஞர் தயாளு அம்மையாரைத் திருமணம் செய்து கொண்டார். பல்வேறு ஆளுமைத் திறனைக் கைக்கொண்டவர் கலைஞர்.

மனிதர்கள் அனைவரும் ஒன்றென்றாலும், ஆளுமைத் திறனில் வேறுபாடு உண்டு. அவ்வாளுமைப் பண்பைப்பற்றி மேனாட்டார்களின் கருத்துக்களைத் தொகுப்பது அவசியமாகின்றது.

**ஆளுமை - சொற்பொருள் விளக்கம்**

தமிழில் ஆளுமை என்ற சொல் ஆங்கிலத்தில் (Personality) என்ற சொற்பொருளின் வடிவம் ஆகும். இச்சொல்லின் மூலம் இலத்தீன் மொழி ஆகும். நாடக மேடையில் நடித்துக் காட்டியபோது நடிகர்கள் தாங்கள் ஏற்றிருக்கும் பாத்திரத்தின் இயல்புக்கு ஏற்றபடி முகமூடி அணிந்து வருவர். இம்முகமூடிதான் இலத்தீனில் மூடி 'பர்ஸனா' (Persona) என்று அழைக்கப்பட்டது. சொற்பொருள் வளர்ச்சியின் காரணமாக இன்று அச்சொல்லின் பொருள், ஒரு தனிமனிதனின் தனிப்பட்ட நடத்தை முறையைக் குறிக்கிறது. 'தற்காலத்தில் இச்சொல் விரிவான பொருளைப்பெற்று ஒரு மனிதனின் சீரான தனிப்பட்ட நடத்தை முறையைக் (Unique pattern of behaviour) குறிப்பதாயிற்று.[5] 'ஆளுமை' என்பது ஒருவனது உடலமைப்பு என்றும், ஒருவனுடைய உடலமைப்பும் அவன் வாழும் சமூகச் சூழ்நிலையும் ஆகியவற்றின் தன்மைக்குத் தக அமையும் இயல்புகளெல்லாம் ஒன்று சேர்ந்தது என்றும் ஒருவனது இயல்பூக்கங்களும் உள்ளக் கிளர்ச்சிகளும் ஒருங்கே சேர்ந்தமைவது என்றும், பாரம்பரிய இயல்புகளும் (Hereditary Traits) அனுபவத்தால் ஈட்டிய இயல்புகளும் (Acquired Traits) ஒருங்கே சேர்ந்து அமைவது என்றும் பலவாறு ஆளுமைக்குக் கலைக்களஞ்சியம் விளக்கம் தருகின்றது.[6]

**உளவியல் ஆய்வாளர் கருத்து**

உளவியல் பகுப்பாய்வாளர் ஆளுமை குறித்து, "உளப்பாகுபாடு மனிதனின் நனவிலி மனத்தினின்று எழும் வலிமை வாய்ந்த 'இத்' Id என்கிற உளச்சக்தி சமூகச் சூழ்நிலையில் சட்டதிட்டங்களோடும் கட்டுப்பாடுகளோடும் இழைவதினால் ஏற்படுவதே ஆளுமை"[7] என்று குறிப்பிட்டுள்ளனர்.

**நடத்தைக் கொள்கையினர் கருத்து**

அன்றாட வாழ்வில் ஒவ்வொருவரும் நடந்துகொள்ள வேண்டிய விதிகளைப் பின்பற்றும் கொள்கை உடையவர்கள் நடத்தைக் கொள்கையினர் ஆவர். "ஆளுமை என்பது அச்சம், சினம், பால் ஆகிய இயல்பூக்கங்களை அடிப்படையாகக் கொண்டதாகும் என்பது நடத்தைக் கொள்கையினர் கருத்து."[8]

**ஜெர்மானிய அறிஞர்களின் கருத்து**

ஆளுமையை ஒரு நிலைத்தத் தன்மைக் கொண்டதாக ஜெர்மானிய உளவியல் அறிஞர் கருதுவர். "மனிதனும் சூழ்நிலையும் இழைக்கமைந்த முழு நிலையே ஆளுமை என்பதாகும்"[9] என்பதாகும்.

**அமெரிக்க அறிஞர்களின் கருத்து**

மனிதனுடைய பல்வேறு இயல்புகளின் ஒட்டுமொத்த உருவமே ஆளுமை என்பது அமெரிக்க அறிஞர்களின் கருத்து ஆகும். இவ்வியல்புகள் பிறவியிலும் அமையலாம். சூழ்நிலையாலும் அமையலாம். "திருவேறு தெள்ளியராதலும் வேறு" என்ற வள்ளுவர் கருத்து இங்கு நினைக்கத்தக்கதாகும். "அமெரிக்க உளவியல் அறிஞர்கள் ஆளுமை என்பது மனிதனுடைய பல்வேறு இயல்புகள் ஒன்று சேர்ந்ததே ஆகும் என்று கருதும் இயல்புடையோர். இவ்வியல்புகளில் சில பிறப்பாலும் மற்றவை சூழ்நிலையினாலும் ஏற்படுகின்றன என்பது இவர்களின் பொதுவான கருத்தாகும்."[10]

**உடலமைப்புக் கொள்கையினர் கருத்து**

ஓர் ஆளைப் பார்த்ததும் அவனது எடுப்பான தோற்றத்தைக் கொண்டு வீரமிக்கவன், தன்னம்பிக்கை உடையவன் என்று எடை

போடுவதும் ஆளுமையே என்பது உடலமைப்பாளரின் கருத்து. "ஒருவன் உயரமாயும், விரும்பத்தக்கதும் அழகானதுமான முகத்தை உடையவனுமாய் இருந்தால் அவன் தன்னம்பிக்கை, தைரியம் போன்ற இயல்புகளை உடையவனாயிருப்பான், அவனது ஆளுமை இவற்றிற்கேற்ப அமைகிறது என்பது உடலமைப்புக் கொள்கையாளர் கருத்தாகும்.

ஒரு மனிதனின் இயல்புகளுக்கு ஏற்றபடி அமைவது ஆளுமை ஆகும். இவ்வியல்புகள் உடலையோ, உள்ளத்தையோ சார்ந்து இருக்கக்கூடும் . பிறப்பாலோ, சூழ்நிலையாலோ அமையும் என்பது தெளிவாகிறது. ஒருவனது குறிக்கோள்களையும் அவனது வாழ்க்கையில் வாழ்ந்து காட்டிய முறைகளையும் பொறுத்து ஆளுமையை மதிப்பிட முடியும். ஆளுமையின் தன்மைகளைப் பட்டறிவாலும் உணரக்கூடும். ஒருவன்வாழ்ந்த சமூகச் சூழல் கொண்டும் அவனது வாழ்க்கைச் சூழல் கொண்டும் ஆளுமையை நிலைநிறுத்த வாய்ப்புண்டு. அறிவு, உணர்வு, உள்ளம், சமூகம், பண்பாடு, சூழல் ஆகிய அனைத்துக் கூறுகளும் ஆளுமையில் அடங்கும்.

**ஆளுமைப் பண்புகள்**

ஒரு மனிதனின் எல்லாப் பண்புகளும் ஆளுமையில் காணப்படும் சமூகத் தூண்டல் குணப்பண்புகளை வெளிப்படுத்தும் தனித்தன்மை களைப் புலப்படுத்தும். இவற்றை ஆளுமைப் பண்புகளாக உளவியல் அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர். ஏ.ஜே.ஜோன் என்பவர் ஆளுமைப் பண்பைப் பற்றி பட்டியல் இட்டுக் காட்டியுள்ளார். பார்க்கும் முறை, உடை உடுக்கும் முறை, பேசும் முறை, நடக்கும் முறை, செய்திறனுடன் செயல்களைச் செய்தல், உடல் நலம் போன்றவை ஆளுமையின் பண்புகளாகும்.

**ஆளுமை வரையறைகள்**

எஸ்.சந்தானம் என்பவர் வெளிநாட்டு ஆசிரியர்களான மக்டுகல், மார்டர்பிரின்ஸ், கில்போர்ட் ஆகிய மூவரின் வரையறைகளைத் தொகுத்துத் தந்துள்ளார். "ஆளுமை என்பது கண்ணையும் கருத்தையும் கவரக்கூடிய உள்ளமும் அதனுடைய செயல்களும் ஒன்றிணைந்து தோன்றக்கூடிய ஒரு கூட்டுத்தொகுதி"[12] என்பர். "மக்டுகல் ஆளுமை என்பது ஒருவனுடைய உயிரியல் தொடர்பான உளவியல் நிலைகள், உள்ளத்துடிப்புகள், உள்ளத்தூண்டல்கள், உள்தாக்கம், மனப்போக்கு, இயல்பூக்கம் போன்றவையும் ஒன்றுசேர்ந்து மொத்தமாக உருவானதே"[13] என்பர். மார்டர் பிரின்ஸ் "ஆளுமையானது ஒருவனது பண்புகளின் தனித்தன்மை வாய்ந்த அமைப்பு"[14] என்பர்.

**ஆளுமையின் வகைகள்**

"ஆளுமை அக முகத்தினர், புற முகத்தினர் என்று இருவகையாக ஐசன்க் என்பவர் குறிப்பிட்டுள்ளார். சால்ரோசன்வியக் என்பவர் வேறு விதமாகப் பிரித்து

1. புறத்தாக்கிகள் (Extra punitive)
2. அகத்தாக்கிகள் (Intra punitive)
3. தன்மைத்தாக்கிகள் (Impunitive) என்று மூவகையாக

வகைப்படுத்தியுள்ளார்.

"ஸ்ப்ரேன்கர் என்பவர் மதிப்பு அடிப்படையில் ஆளுமையை

1. கொள்கை வகை ஆளுமை (Theoretical personality)
2. அழகுணர்ச்சி ஆளுமை (Aesthetic personality)
3. சமூகவகை ஆளுமை (Social Personality)
4. அரசியல் ஆளுமை (Political Personality)

5. பொருளாதாரவகை ஆளுமை (Economic personality)

6. சமய ஆளுமை (Religious personality) என்பவை ஆகும்"[15] என்று அறுவகையாகப் பகுத்துள்ளார்.

**ஆளுமைத்திறன் வெளிப்பாடு**

மனிதன் புறச்சூழலின் செல்வாக்கிற்கு உட்பட்டு செயல்படக் கூடியவன். செயல்படும்போது சமூக நடத்தையைப் பின்பற்றி நடக்கிறான். சமூக நடத்தையைப் பினபற்றி நடப்பது அவனுடைய ஆளுமைத் திறனாகும். காரணகாரியத் தொடர்பில் ஒருவனுடைய முதிர்ந்து முழு நிலமை அடையுமானால், அதுவும் ஆளுமைத் திறன் ஆகும். படைப்புகளைப் பகுத்து ஆராய்ந்தால் படைப்பாளரின் ஆளுமைக் கூறுகளை அறியமுடியும். பல்வேறு இயல்புகள் ஒன்றுசேர்ந்து படைப்பாளரின் ஆளுமைத் திறனை வெளிப்படுத்துகிறது.

"கலைஞரின் படைப்புகளில் அவரது மொழிநடை, அவரது உணர்ச்சி, அனுபவம், பண்பாடு, சுயமரியாதை, கலையுணர்வு, மொழிப்பற்று, இனப்பற்று, அரசியல், நாகரிகம் ஆகியவற்றையெல்லாம் உணர்த்தும் வகையில் அமைந்து அவருடைய ஆளுமையை வெளிப்படுத்தியுள்ளது.

**கலைஞரின் ஆளுமைத் திறன்**

பள்ளி இறுதிப் படிப்பை முடிக்காத கலைஞர், எழுத்துத்துறையில் தனக்கெனத் தனி இடத்தைப் பெற்றுள்ளது வியப்பிற்குரியது. ஒரு மனிதனை உருவாக்குவது அவன் கற்ற கல்வி, பெற்ற அனுபவம், உற்ற சூழல் போன்றவைகளாகும். கலைஞரின் வாழ்வியலைக் கூர்ந்து நோக்கும்போது அவரின் ஆளுமைத் திறனை உணரமுடிகிறது.

என் தமிழ்மொழி உலக அரங்கில் முதல் மொழியாக ஆகாதா?
என் தமிழ் இலக்கியத்தில் உள்ள வள்ளுவம் உலகின் பொதுச் சட்டமாக மாறாதா?
என் தமிழ்மகன் உலக மக்களில் முதலிடம் பெற்ற திருமகனாக உயர மாட்டானா?[17] என்று நாளும் எண்ணி வாழ்பவர் கலைஞர்

பகுத்தறிவுக் கொள்கைப் பரப்பும் சிந்தனையாளர், பழுமரக்கனிப்பயன் கொள்ளும் பேச்சாளர், படித்தவரைக் கவரும் ஆற்றல் கொண்ட எழுத்தாளர். கலைத்துறையில் வாகை சூடிய படைப்பாளர், தொட்டது துலங்கத் துறைதோறும் தம் முத்திரை பதிக்கும் திறமையாளர். அரசியல் சதுரங்கத்தில் வெற்றிவீரர், முத்தமிழிலும் வல்ல வித்தகர், செந்தமிழுக்கொரு தீமை என்னில் தம்முயிரும் தந்திடத்துணியும் தியாகத் திருவுருவம்"[18] என்ற கருத்து கலைஞரின் ஆளுமைத் திறனைச் சுட்டியுள்ளது.

கலைஞரது தமிழ், கலை இலக்கிய உலகில் தனக்கென தனிவழியும் தடமும் பதித்துக்கொண்டது. "கன்னித்தமிழ் இருக்கிறவரை இருக்கிற பெயர் கருணாநிதி"[19] என்ற கருத்து கலைஞர் தமிழோடு இணைந்துள்ளதைக் குறிப்பிட்டுள்ளது.

கலைஞரின் ஆளுமைத் திறனைப் புரிந்து கொள்வதற்கு, அவரின் ஆளுமைப் பண்பு நலனை அறிவது இனறியமையாதது.

**அரசியல் ஈடுபாடு**

கலைஞர் மாணவப் பருவத்தில் பல்வேறு மன்றங்கள், சங்கங்கள் வாயிலாகப் பொதுத் தொண்டிலும், சமுதாயப் பணியிலும் ஈடுபட்டுள்ளார். 1939 ஆம் ஆண்டில் சிறுவர் சீர்திருத்தச் சங்கத்தையும்,

1941 ஆம் ஆண்டில் மாணவர் சம்மேளனத்தையும் அதைத் தொடங்கிய சிறிது காலத்திற்குள் தமிழ் மாணவர் மன்றத்தையும் தொடங்கியுள்ளார்.

1937 ஆம் ஆண்டில் பொறுப்பேற்ற காங்கிரஸ் அமைச்சரவை இந்தியைப் பள்ளிகளில் கட்டாயப் பாடமாக்கியபோது, தமிழகத்தில் அதை எதிர்த்துப் பெரும் போராட்டம் நடைபெற்றது. தந்தைப் பெரியாரின் தலைமையில் நடந்த அப்போராட்டத்தில் கி.ஆ.பெ.விசுவநாதம், பட்டுக்கோட்டை அழகிரி, அறிஞர் அண்ணா, ஏ.டி.பன்னீர்செல்வம் போன்ற அரசியல் தலைவர்களுடன் மறைமலை அடிகள், சோமசுந்தர பாரதியார் போன்ற தமிழ் அறிஞர்களும் இணைந்து ஈடுபட்டனர்.

பள்ளியில் ஏழாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்த பதினான்கு வயது மாணவர் கலைஞர், அக்கால இந்தி எதிர்ப்புச் சூழலில் இளம் வயதில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டவர்.

நாள்தோறும் மாலை நேரத்தில் மாணவர் பலரை அணிவகுக்கச் செய்து திருவாரூர் வீதிகளில் கையில் தமிழ்க்கொடி ஏந்தி ஊர்வலமாக வந்தார். ஊர்வலத்தில் பாடுவதற்காகவே,

வாருங்கள் எல்லோரும் போருக்குச் சென்றிடுவோம்
வந்திருக்கும் இந்திப்பேயை விரட்டித்திருப்பிடுவோம்

என்று தொடங்கும் பாடலை எழுதியுள்ளார்.

அறிஞர் அண்ணா, பட்டுக்கோட்டை அழகிரி சாமி ஆகியோரின் நாவன்மையும், மூவலூர் இராமமிர்தம்மையாரின் நிர்வாகத்திறனும், ‘நகரத்தூதன்’ வார ஏட்டின் ஆசிரியர், மாணவர் திருமலைச் சாமியின்

எழுத்தாற்றலும் இந்தி எதிர்ப்புப் போருக்கு உரமூட்டியதைக் கலைஞர் உணர்ந்துள்ளார். திருச்சியில் தொடங்கிச் சென்னை வரை சென்ற தமிழர் படை பற்றியும், வழியிலுள்ள சிற்றூர்களில் கூட அது இந்தி எதிர்ப்பு உணர்ச்சியை விதைத்தது பற்றியும் நெஞ்சுக்கு நீதி என்னும் நூலுள் விளக்கியுள்ளார்.

**பத்திரிக்கைப் பணி**

கலைஞரின் இதழியல் பணி அவரது மாணவ ப் பருவத்திலேயே தொடங்கிவிட்டது. அவர் நடத்திய முதல் ஏடு “மாணவநேசன்” என்பதாகும். எட்டுப் பக்கங்களைக் கொண்ட இரண்டு வெளியீடுகளாக அது மாதந்தோறும் வெளிவந்தது. “மாணவ நேசன்” ஏழெட்டு மாதங்கள் வெளிவந்தது.

அடுத்து வந்தது முரசொலி, முதலில் துண்டு வெளியீடாக முரசொலி மலர்ந்தது. அன்று அவரது பெயர் சேரன். இதழுக்குச் செயலாளராகக் கலைஞரின் நண்பர் தென்னன் பணியாற்றினார்.

**இயக்கப்பணி**

1938 ஆம் ஆண்டு இந்தி எதிர்ப்பு இயக்கத்தில் தம்மை இணைத்துக் கொண்ட கலைஞர் சுயமரியாதை இயக்கத்திலும் நீதிக் கட்சியிலும் ஈடுபடத் தொடங்கினார். ஈரோடு குடியரசுப் பதிப்பக வெளியீடுகளைத் தொடர்ந்து படிக்கத் தொடங்கினார். பெரியாரின் பகுத்தறிவுக் கருத்துக்கள் கலைஞரைக் கவர்ந்து இழுத்தன. “நாலு பெரிய மனிதர்கள் இருக்குமிடத்தில் சட்டை போட்டுக்கொண்டு போக முடியாது, மேல் துண்டையும் எடுத்து இடுப்பில் கட்டிக்கொள்ள வேண்டும். செருப்பு

அணிந்து செல்வதும் தவறு. இக்கடுமையான அடிமைத்தனம், தெய்வீகத்தின் பெயரால் ஒரு சமுதாயத்தைக் கொடுமைக்கு உள்ளாக்குவதை, என் பிஞ்சுமனம் எதிர்க்கக் கிளம்பியது என் எழுச்சிக்குக் காரணமாக என்னைச் சுற்றியிருந்த சமுதாய சீர்கேடுகள் அமைந்தன"[21] என்று சமுதாய கொடுமைகளைக் கண்டு நெஞ்சு குமுறியுள்ளார். இயக்கச் சார்பால் முழுநேர இயக்கப் பேச்சாளராகக் கலைஞர் உருவானார். எழுத்திலும், பேச்சிலும் பகுத்தறிவைப் பரப்பினார். நாடகங்கள், திரைப்படங்கள் ஆகியவற்றின் வாயிலாக இப்பணியினைத் தொடர்ந்தது குறிப்பிடத்தக்கது.

**இலக்கியப்பணி**

"கலைஞரின் இலக்கியப் படைப்புகள் சாகாவரம் பெறும் முத்திரையோடு பிறக்கும்"[22] என்பர். கலைஞரின் கரம் படா இலக்கியத் துறையே இல்லை என்னும் அளவிற்குப் புதினம், சிறுகதை, கட்டுரை, கவிதை, நாடகம், திரைக்கதை, வசனம் எனப் பல்வேறு துறைகளில் சிறந்து விளங்கிவருவது நினைக்கத்தக்கது.

அதற்குரிய அடித்தளம் இளமையில் கலைஞருக்கு வாய்த்திருந்தது. பதினைந்து வயது மாணவராகக் கலைஞர் இருந்தபோது எழுத்துப்பணி தொடங்கியது. மாணவ நேசன் என்ற கையெழுத்து ஏடு, கலைஞரின் எழுத்துப்பணிக்கு ஏடு அமைத்துக் கொடுத்தது.

கலைஞர், முரசொலியின் நிரந்தர எழுத்தாளராக இருந்தார். 'இளமைப்பலி' என்னும் தலைப்பில் ஒரு கட்டுரையை எழுதி காஞ்சிபுரத்திலிருந்து அறிஞர் அண்ணாவை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த 'திராவிட நாடு' இதழுக்கு அனுப்பினார். கட்டுரையும்

வெளிவந்தது. அடுத்துப் 'பகுத்தறிவு பரமசிவம்' என்னும் தலைப்பில் மற்றொரு கட்டுரை அனுப்பினார். அது வெளிவரவில்லை. கலைஞரை நேரில் அழைத்து அண்ணா நன்றாகப் படிக்கும்படி பணித்தார். 'பழனியப்பன்' என்ற நாடகம் கலைஞரால் முதலில் எழுதப்பட்டதாகும். இந்நாடகம் பின்னர் சாந்தா அல்லது பழனியப்பன் என்றும் 'நச்சுக்கோப்பை' என்றும் நடத்தப்பட்டது.[23]

கலைஞரின் முதல் நூல் 'கிழவன் கனவு' என்பதாகும். அப்போது அதன் விலை மூன்றணா. குடியரசு ஏட்டில் கலைஞர் எழுதிய "அண்ணாமலைக்கு அரோகரா" என்னும் கட்டுரை பெரியாரின் பாராட்டைப் பெற்றது. "தீட்டாயிடுத்து" என்றத் துணைத் தலையங்கமும் பெரியாரைக் கவர்ந்தது. 1947 இல் தஞ்சையில் அரங்கேறிய "தூக்குமேடை" நாடகம் கலைஞரை இனம் காட்டும் நாடகமாக அமைந்தது. ஒரே முத்தம், பரப்பிரம்மம் போன்ற பதினேழு நாடகங்களை எழுதியுள்ளார். கலைஞரின் சிறுகதைகள் தொகுப்பு நூல்களாக வெளிவந்துள்ளன.

மூடநம்பிக்கை ஒழிப்பு, சாதி ஒழிப்பு, மொழிப்பற்று போன்ற தம் இலட்சியக் கொள்கைகளை வலியுறுத்தி முதன்முதலாகப் புதையல் என்ற புதினத்தை முரசொலி வார இதழில் தொடர்கதையாக எழுதினார். 1960இல் இக்கதை நூல் வடிவம் பெற்றது. பின்னர் திரைப்படமாகவும் வெளிவந்தது. மற்றொரு புதினம், "ஒரே இரத்தம்" என்பதாகும். வரலாற்றுப் பின்னணியைக் கொண்டு ரோமாபுரிப் பாண்டியன், தென்பாண்டிச்சிங்கம், பொன்னர் சங்கர் போன்ற புதினங்கள் எழுதியுள்ளார். கலைஞர் எழுதிய தென்பாண்டிச் சிங்கம் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் 1989 ஆம் ஆண்டிற்கான இராசராசன் விருது பெற்றுள்ளது. இனிய எளிய நடையில் புதிய கண்ணோட்டத்தில்

கலைஞர் தீட்டிய "குறளோவியம்" காவியப் படைப்பாகும். "சங்கத்தமிழைத் தித்திக்கும் கவிதை நடையில் சங்கப் பாடல்களுக்குப் புதிய முறையில் கலைஞர் விளக்கமளித்துள்ளார். "நெஞ்சுக்கு நீதி" என்ற தன் வரலாற்று நூலை மூன்று தொகுதிகளாக வெளியிட்டுள்ளார்.

கலைஞரின் சாந்தா அல்லது பழனியப்பன், தூக்குமேடை, ஒரே முத்தம், பரபிரம்மம், மணிமகுடம், உதயசூரியன், காகிதப்பூ திருவாளர் தேசியம்பிள்ளை, அனார்க்கலி, சேரன் செங்குட்டுவன், சாம்ராட் அசோகன், சிலப்பதிகாரம் நாடகக்காப்பியம், நானே அறிவாளி, பரதாயணம் போன்றவை கலைஞரின் சிறந்த நாடகப் படைப்புகளாகும்.

கலைஞரின் சிறுகதைகளான நளாயினி, பழக்கூடை, பதினாறு கதையினிலே போன்றவை சிறப்படைந்தன. கலைஞர் மு.கருணாநிதி எழுத்துலகில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுள்ளார். நூற்றுக்கணக்கான சிறுகதைகள் எழுதி அந்தத் துறைக்கு வளம் சேர்த்துள்ளார். இவருடைய கதைகளில் பல சிறுகதை வடிவ அமைதி கொண்டுள்ளன என்பது தனிச்சிறப்பு ஆகும்.

புதையல், வெள்ளிக்கிழமை, சுருளிமலை, வான்கோழி, ஒரே ரத்தம், ஒரு மரம் பூத்தது, ரோமாபுரிப் பாண்டியன், தென்பாண்டிச் சிங்கம், பொன்னர் சங்கர், பாயும் புலி, பண்டாரகவன்னியன் ஆகியவை கலைஞரின் சிறந்த புதின படைப்புகள் ஆகும். "கலைஞர் படைப்புகளும், சொற்பொழிவுகளும், கடிதங்களும், கட்டுரைகளும் இதுவரை நூற்று எழுபத்தெட்டு நூல்களாக வெளிவந்து உள்ளன."[24]

**திரைப்படப்பணி**

*குடியரசுப் பத்திரிக்கையில் பணியாற்றுகையில் "இராஜகுமாரி" திரைப்படத்தில் பணியாற்றும் வாய்ப்பு கலைஞருக்குக் கிடைத்தது. இராஜகுமாரி 1946 இல் வெளிவந்தது. 1952 இல் கலைஞரின் புதுமை திரை ஓவியம் பராசக்தி வெளிவந்தது. "திரைஉலகில் புயல் வீசிற்று பராசக்தி பவனிவந்தாள்"[25] என்பர். மக்களை ஈர்க்கும் சக்தி திரைப்படங்களுக்கு மிகுதியுமுண்டு என்பதனை உணர்ந்தவர் கலைஞர். நாற்பதுக்கு மேற்பட்ட படங்களுக்குத் திரைக்கதை வசனம் எழுதியுள்ளார். "கலைஞர் தீட்டிய திரைக்காவியங்கள், வார்த்தெடுத்துத் தந்த வசனங்கள் லட்சக்கணக்கான உள்ளங்களைக் கவர்ந்திழுத்தன."[26]*

*1949 ஆம் ஆண்டு சேலம் மாடர்ன் தியேட்டர்ஸ் நிறுவனத்தில் 500 ரூபாய் ஊதியத்தில் கலைஞர் எழுத்தாளராக அமரும் வாய்ப்பைப் பெற்றார். இந்நிலையில் அவருக்குக் கவிஞர் கண்ணதாசனின் நட்பு கிடைத்தது. மந்திரிகுமாரி, மணமகள் முதலிய படங்கள் கலைஞரின் கைவண்ணத்தில் ஒளிபெற்றன.*

*திரைப்படம் என்னும் இவ்வலிமைமிக்க கலை வடிவத்தைச் சரியாகப் பயன்படுத்தி வெற்றி கண்டவர் கலைஞர். திரைத்துறையில் கதை, திரைக்கதை, உரையாடல், பாடலாசிரியர், திரைப்படத் தயாரிப்பாளர் எனப் பல நிலைகளில் ஈடுபட்டு ஆற்றலை வெளிகாட்டியுள்ளார். உரையாடல் கலையால் கலைஞர் புகழ் பெற்றார். பூம்புகார், மனோகரா, திரும்பிப்பார், நீதிக்குத் தண்டனை, பாலைவனச்சோலை போன்ற திரைப்படங்கள் கலைஞர் கைவண்ணத்தால் மிகுந்த வரவேற்பைப் பெற்றன. பராசக்தி திரைப்படத்தின் வசனம் தனி நூலாக வெளிவந்தது. மிகுதியும்*

விற்பனையானது. ராஜகுமாரி, அபிமன்யு, மருதநாட்டு இளவரசி, மந்திரிகுமாரி, தேவகி, மணமகள், பணம், நாம், மலைக்கள்ளன், அம்மையப்பன், ராஜாராணி, ரங்கோன்ராதா, புதையல், புதுமைப்பித்தன், குறவஞ்சி, எல்லோரும் இந்நாட்டு மன்னர், அரசிளங்குமாரி, தாயில்லாப் பிள்ளை, இருவர் உள்ளம், காஞ்சித் தலைவன், பூமாலை, அவன்பித்தனா? மறக்கமுடியுமா, மணிமகுடம், தங்கத்தம்பி, வாலிபவிருந்து, எங்கள் தங்கம், பிள்ளையோ பிள்ளை, அணையாவிளக்கு, வண்டிக்காரன் மகன், நெஞ்சுக்கு நீதி, ஆடுபாம்பே, குலக்கொழுந்து, மாடிவீட்டு ஏழை, தூக்குமேடை, புயல்பாடும் பாட்டு, ஒரே ரத்தம், வீரன் வேலுத்தம்பி, சட்டம் ஒரு விளையாட்டு, மக்கள் ஆணையிட்டால், பாசப் பறவைகள், இது எங்கள் நீதி, பாடாத தேனீக்கள், தென்றல் சுடும், பொறுத்தது போதும், நியாயத் தராசு, பாசமழை, காவலுக்குக் கெட்டிக்காரன், மதுரை மீனாட்சி, புதிய பராசக்தி போன்றவை திரைப்படங்களாக வெளிவந்துள்ளன.

**கலைஞரின் தமிழ்ப்பற்று**

கலைஞர் பெரியாரின் பாசறையில் பயிற்சி பெற்றவர். பேரறிஞர் அண்ணாவின் பெருங்காஞ்சிப் பல்கலைக்கழகத்தில் கலை பல கற்றவர். இளமையில் பெரும்புலவர் தண்டபாணி தேசிகர், சி.இலக்குவனார், முத்துக்கிருட்டின நாட்டார் ஆகியோரிடம் தமிழ் பயின்றார். மாணவப் பருவத்தில் மாணவர்கள் மத்தியில் தமிழ்ப்பற்றைத் தூண்ட 'தமிழ் மாணவர் மன்றம்' என்ற அமைப்பைத் தோற்றுவித்து, தம் தமிழ்ப் பணிக்குக் கால்கோள் விழா நடத்தினார். இப்பணியினைத் தமிழ்நாடு என்ற சொல்லுக்குக் கலைஞர் தரும் விளக்கம் அவர் தமிழ்பற்றைப் புலப்படுத்தும்.

வேழமென தமிழ்க்காட்டில் உலவுகின்றீர்[27]

என்ற கவிதை அடி, தமிழ்த் தொண்டாற்ற கலைஞரின் வலிமையைச் சுட்டியுள்ளது.

பகுத்தறிவுப் பாசறையில் கலைஞர் வாழ்ந்தாலும் தமிழைக் கோயிலுக்குள் அனுப்ப முயற்சி செய்தவர் என்பதை,

நீ கோவிலுக்குப் போகா விட்டாலும் தமிழை அங்கு அனுப்பி
வைக்கத் தவமிருக்கிறாய்[28]

என்ற கவிதை அடி கலைஞரின் தமிழுணர்வினைச் சுட்டியுள்ளது. தமிழ்க் கோயிலின் தெய்வமாகக் கலைஞர் இருப்பதை, தமிழ்க் கோயிலின் வாசல்படி நீ கோபுரமும் நீ கருவறையும் நீதான் என்ற கவிதை அடிகள் சுட்டியுள்ளது. தமிழை ஆட்சி செய்யும் கலைஞரின் தமிழ்ப்பற்றை ஒல்லும் வகையெல்லாம் ஓயாது எடுத்துரைப்பது கவிஞர்களுக்கு உகத்தானது. இயற்கைமணம் கமழும் சங்கப் பாடல்களில் கலைஞர் கருணாநிதி மிகுந்த ஈடுபாடு கொண்டவர்.

**அரசியல் பணி**

கலைஞர் கருணாநிதியின் வாழ்க்கை அரசியல் போராட்ட வாழ்வாக அமைந்திருக்கிறது. “வாழ்க்கையை ஒரு போராட்டம் என்று வர்ணிப்பார் உளர், எனக்கோ போராட்டமே வாழ்க்கை ஆகிவிட்டது”[30] என்பார் கலைஞர். கலைஞர் நெஞ்சுக்கு நீதி என்ற தன் வரலாற்று நூலில் தன் வரலாற்றை விவரிக்கவில்லை. முப்பத்தைந்து ஆண்டுகாலத் தமிழக அரசியல் வரலாற்றை விளக்கியுள்ளார். திராவிட இயக்கத்தோடு தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்ட கலைஞர் ஓயாது அரசியல் வாழ்வில் உழன்றார் சுழன்றார் என்று கூறுதல் பொருத்தமுடையது.

கலைஞர் தந்தைப் பெரியாரின் சுயமரியாதை இயக்கத்திலும், திராவிடக் கழகத்திலும் முழுநேரத் தொண்டனாகப் பணியாற்றினார். பெரியார் - மணியம்மையார் திருமணத்தைத் தொடர்ந்து திராவிடர் கழகத்திலிருந்து வெளியேறியவர்கள் 1949 செப்டம்பரில் அறிஞர் அண்ணா தலைமையில் திராவிட முன்னேற்றக் கழகம் கண்டனர். 1952இல் இந்திய நாடெங்கும் முதல் பொதுத்தேர்தல் நடைபெற்றது. திராவிட முன்னேற்றக் கழகம் இத்தேர்தலில் நேரடியாகப் போட்டியிடவில்லை. 1956இல் திருச்சியில் நடைபெற்ற மாநாட்டில் தேர்தலில் போட்டியிட முடிவு செய்ததால் 1957இல் பொதுத்தேர்தலில் திராவிட முன்னேற்றக் கழகம் போட்டியிட்டது. குளித்தலை சட்டமன்றத் தொகுதியில் வென்று 1957இல் கலைஞர் சட்டமன்ற உறுப்பினர் ஆனார். தொடர்ந்து 1963 இல் தஞ்சை தொகுதியிலும், 1967இல் சென்னை சைதாப்பேட்டை தொகுதியிலும் வெற்றி பெற்றார். சட்டசபை உறுப்பினர் பதவியைத் தக்க வைத்துக் கொண்டார். 1967இல் அறிஞர் அண்ணா தலைமையில் திராவிட முன்னேற்றக் கழக அரசு அமைந்தது. கலைஞர் பொதுப்பணித்துறை அமைச்சரானார். 1969 பிப்ரவரி 3 ஆம் நாள் அறிஞர் அண்ணா இறந்ததும் கலைஞர் முதலமைச்சரானார். ஏழாண்டுகள் முதல் அமைச்சராக விளங்கிய கலைஞர், இடையில் பதின்மூன்று ஆண்டுகள் அமைச்சர் பதவி இல்லாதிருந்து மீண்டும் 1989இல் முதலமைச்சர் ஆனார். கலைஞர் போட்டியிட்ட தொகுதிகளில் தோல்வி என்பதை அறியாதவராக விளங்குவது குறிப்பிடத்தக்கது.

**கலைஞரின் தோற்றம் - பண்புநலன்**

"நடுத்தர உயரம், வழுக்கை விழும் தலை, ஒளிவு மறைவு இல்லாது மனத்தைத் திறந்து காட்டும் முகத் தோற்றத்திலேயே மதிப்பைத் தோற்றுவிக்கும் தன்மை இவற்றின் இணைப்பே கருணாநிதி.[31]

கலைஞரின் பண்புகளைத் தம் நூலான இலக்கியத் தலைவர் கலைஞர் என்னும் நூலில் பேராசிரியர் ந.சஞ்சீவி போற்றியுள்ளார்.

கலைஞர் "படிப்படியாக வளர்ந்தவர் - படித்துப் படித்து வளர்ந்தவர், தம்பியுடையான் படைக்கஞ்சான் என்னும் பழஞ்சொல்லுக்கு எல்லாத் துறைகளிலும் புத்துரை காண்பவர்"[32] என்று பேராசிரியர் ந.சஞ்சீவி கலைஞரின் பண்புகளைத் தொகுத்துள்ளார்.

"பின்னணி, சாதி, செல்வம், குடும்பப் பரம்பரை அல்லது வழிமரபு முதலிய பலம் எதுமில்லா நிலையில் இயற்கை நுண்ணறிவுத் திறத்தாலும் ஓயாத உழைப்பாலும் தமிழ் மக்களின் இனத் தெய்வமாய் உருவானவர் கலைஞர்"[33] என்னும் கருத்து வலிவுடையது.

"பேரறிஞர் அண்ணாவும் விண்ணிலிருந்து வியப்பும் விம்மிதமும் கொள்ள ஏடாளும் - நாடாளும் - நல்லோர் நெஞ்சமெல்லாம் ஆளும் சான்றோர் நம் முதல்வர் கலைஞர்"[34] என்ற பாராட்டு நினைத்து மகிழத்தக்கது.

"கலைஞர் கல்லூரி சென்று பயிலாதவர். பயிலும் படிப்பாளி களுக்கு வழிகாட்டும் அறிவார்ந்தத் தலைவர்."[35]

"தமிழ் இனத்துக்குக் கிடைத்த தானைத்தலைவர் கலைஞர். இந்நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் இடம்பிடித்த அனுபவசாலி கலைஞர்."[36]

தினமும் இப்படி மொழியைக் கையாண்டத் தமிழ்ப் படைப்பாளி தமிழில் வேறு யாரும் இல்லை"[37] என்பார்.

"அரசியல் சாணக்கியம் இலக்கியப் பிரக்ஞை" இரண்டும் இணைவது அபூர்வம்.[38] அவ்விரண்டு பண்புகளும் இணைந்தவர் கலைஞர்.

கலைஞரின் மனத்தில், இளம் வயதிலிருந்து, தமிழ் மொழியும், தமிழினமும் ஆழமான இடத்தைப் பெற்றுள்ளன என்பதை அவரது படைப்புக்களின் வழியே அறிய இடமுண்டு. சங்க இலக்கியப் பாடல்களுக்கு விளக்கம் எழுதி, "சங்க இலக்கியம்" என்று பெயரிடாது. சங்கத்தமிழ் என்று பெயர் அமைந்துள்ள திறம் அவரது தமிழ்ப் பற்றினைச் சுட்டியுள்ளது.

கற்றாரைக் கற்றாரே காமுறுவர் என்னும் மரபுத் தொடருக்கு ஏற்ப கவிஞரான கலைஞரைத் தமிழகக் கவிஞர்கள் தமிழாகக் கண்டுள்ளனர்.

> பறவைகளில் நீ அன்றில்
> தமிழைப் பறித்தால் நீ இல்லை
> மொழிகளிலே நீ தமிழ்
> அதனால் தான் உனக்கு
> நரைதிரை மூப்பில்லை[39]

என்று கவிஞர் வைரமுத்து சுட்டியுள்ளார். தமிழும் கலைஞரும் பிரிக்கமுடியாத நிலையில் இணைந்திருப்பதைக் கவிஞர் வைரமுத்து உணர்ந்துள்ளார். இணைபிரியாத தன்மையை உணர்த்த அன்றில் பறவை உவமையாக்கப்பட்டுள்ளது.

உன் எழுத்து

தமிழ்மொழியின் கருத்து

உன் கையெழுத்து

தமிழ் இனத்தின் தலை எழுத்து

உன் பேச்சு

தமிழ்த்தாய் சுவாசிக்கும் மூச்சு[40]

*கவிஞர் மு.மேத்தா கலைஞரின் பேச்சே தமிழ்த்தாயின் மூச்சு என்று குறிப்பிட்டுள்ளார்.*

*கலைஞரும், தமிழும் வேறு வேறு அல்ல. தமிழே கலைஞர், கலைஞரே தமிழ் என்ற நிலையைக் கவிஞர் மு.மேத்தா, நயமாகச் சுட்டியுள்ளது பாராட்டுக்குரியது.ந*

*தமிழகத்தின் பெருமையைச் சங்ககாலம் போல மீண்டும் உலகம் போற்றக்கூடிய அளவுக்கு உயர்த்த வேண்டும் என்ற கனவை நனவாக்க விடாமுயற்சியை மேற்கொண்டுள்ள சிறந்த அறிஞர் கலைஞர்[41] என்ற கருத்து கலைஞரின் தமிழுணர்வைச் சுட்டியுள்ளது.*

*மேற்குறித்த கவிதைக் கருத்துக்கள் கலைஞர் வேறு, தமிழ் வேறு என்று பிரித்துணர முடியாத நிலையைச் சுட்டியுள்ளன.*

தமிழ் - நாடு

தமிழை நாடுவதில் தவறில்லை

தமிழ் - நாடு என்பதற்காகத்தான்

தமிழ் நாடு என்று பெயர் வைத்திருக்கிறார்கள்[42]

*என்று பெயர் விளக்கம் கூறியுள்ளது அவரது தமிழ்ப் பற்றினை வெளிப்படுத்தியுள்ளது.*

*தமிழ் என்ற சொல்லுக்குக் கலைஞர் தந்துள்ள அடைமொழிகளை,*

தங்கக்குன்றே தாயே தமிழே
பகைவர்க்குத் தாழாமல்
படைகண்டு வீழாமல்
பல்ஜாதி வாழ்கின்ற தமிழ்
வீணைத் தமிழ்
ஒலத்தின் மணம் வீசும் தமிழ்ச்சொல்
ஆவேசத்தமிழ் மாரி
தமிழ்ப் பூவாசம்
அடலேறு மொழி தமிழே - இன்பம்
கடலேறு மலைத்தமிழே - நீ என்
உடலேறி உயிரேறி வாழ்விக்கிறாய்
வணங்குகின்றேன்.

தேனே கனியே திணையே அமுதே
ஊனே உயிரே தமிழ்த் தாயே
சாகையிலே தமிழ்ப் படித்துச்
சாகவேண்டும் - என்
சாம்பலிலும் தமிழ் மணந்து
வேக வேண்டும்[43]

*என்ற கவிதை அடிகளில் சுட்டியுள்ள திறம் நினைக்கத்தக்கது.*

*கலைஞர் பட்டம் பயின்ற பட்டதாரி அல்லர். பட்டதாரிகளுக்குப் பட்டமளிப்பு விழா உரையாற்றும் அறிவாண்மை பெற்றவர்.*

தமிழால் கலைஞர்
பெருமை பெற்றார்
தமிழோ கலைஞரால்
பெருமை பெற்றது
என்கின்ற வரியில்லாத
இலக்கிய வரலாறு
இங்கே கிடைக்காது[44]

என்ற கவிதை அடிகள் கலைஞர் தமிழோடு இணைந்த தன்மையைச் சுட்டியுள்ளது.

மொழியைக் கையாண்ட படைப்பாளிகளில் கலைஞருக்கு இணையாக யாரையும் சொல்ல இயலுவதில்லை.[45]

தமிழோடு இணைந்திருப்போர் உரைப்பின், மண்ணாளும் வேந்தனும் செவிசாய்ப்பான் என்பதைக் கலைஞர், பிசிராந்தையாரின் வாழ்வியலோடு சுட்டியுள்ளதை,

பேசுமொழி தமிழ் என்றதாலும், பேசியவர்
பிசிராந்தைப் பெருமகனார் என்றதாலும்[46]

என்ற தொடர்கள் விளக்கியுள்ளது.

கொடுங்கோல் ஆட்சியை மாற்றிநல்லாட்சித் தருக என்று பிசிராந்தையார் சொல்ல, மன்னனும் செவிமடுத்தான் என்று கலைஞர் தமிழின் பெருமையை நுட்பமாக வடித்துள்ளது மகிழத்தக்கது.

இளமைப்பருவம் முதல் தமிழால் மக்களை ஈர்த்து செயல்பட்டதுதான் கருணாநிதித் தமிழின் சிறப்புத்தன்மை. செந்தமிழ், இசைத்தமிழ், அறிவியல் தமிழ் என்ற வரிசையில் "கருணாநிதி தமிழ்"

ஒன்று இருந்ததை மேற்குறித்த கருத்தால் அறிஞர் அண்ணா குறிப்பிட்டுள்ளது[47] நினைக்கத்தக்கது.

இந்நூற்றாண்டில் தமிழுக்கு ஒரு தனித்தன்மையை வழங்கியவர் கலைஞர். சுருக்கமாகக் கூறின் இது கலைஞர்த் தமிழ்க்காலம் எனலாம்[48] என்ற கருத்து கலைஞர் தமிழோடு இரண்டற கலந்த தன்மையைச் சுட்டியுள்ளது.

ஏட்டிலும், புலவர்களின் மத்தியிலும் விழைந்த தமிழைப் பாமர மக்களின் மனத்திலும் செலுத்தும் வண்ணம் கலைஞர் செய்த தமிழ்த்தொண்டு வியக்கத்தக்கது.

> **ஏட்டோடு கிடந்த புறநானூற்று வீரத்தை**
> **நாட்டோடு கொண்டுவந்த நதியே தமிழன் நிதியே**[49]

என்ற கவிதை அடி, தமிழுக்குரிய நிதியாகக் கலைஞர் விளங்குவதைக் குறிப்பிட்டுள்ளது.

எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்ற நிலை வருவதற்குப் பல போராட்டங்களையும், எதிர்ப்புகளையும் கலைஞர் சந்திக்க நேரிட்டது.

தமிழுக்கு அமுதென்று பேர் என்று மட்டும்தான் பாவேந்தர் குறிப்பிட்டுள்ளார். கலைஞர் அவ்வமுதமாகியத் தமிழைப் பருகி அனுபவிக்க வேண்டும் என்பதை,

அன்னைத் தமிழை அமுதமென அருந்திக் களித்திடுவோம்[50]

என்ற கவிதை அடியால் சுட்டியுள்ளார். தான் மட்டும் தமிழைப் பருக வேண்டும் என்று எண்ணாது, பன்மையில் அனைவரையும் இணைக்க வேண்டிக் களித்திடுவோம் என்று குறிப்பிட்டுள்ளது நயம்மிக்கது.

கலைஞர் தன்னிலை விளக்கும் கூறுமுகமாகத் தமிழுக்குத் தலைவணங்கும் நெடுஞ்செழியனோடு தன்னை இணைத்துக் கூறுவதை,

தமிழுக்குத் தலை வணங்கும் நெடுஞ்செழியன் றான்
தகவிலார்க்குத் தலைவணங்க ஒப்பமாட்டேன்[51]

என்ற கவிதை அடிகள் சுட்டியுள்ளது. தமிழுக்காக உயிரையும் தர சித்தமாயிருக்கும் கலைஞரின் எண்ணத்தை,

தலைவணங்கான் பகைவர்க்கு
தலை தருவான் தமிழுக்கு[52]

என்ற கவிதை அடிகள் கவிதை சுட்டியுள்ளது.

கலைஞர் தமிழைக் காக்கும் வேந்தனாக விளங்கி வருவதை,

தாய்ப்புலி தன்குட்டிதனைக் காப்பதுபோல்
தமிழ்க்குலம் காக்கின்ற வேந்தன்[53]
தமிழுக்குத் தொண்டு செய்தால் - அந்தத்
தமிழ் உள்ளளவும் வாழ்வோம்[54]

என்ற கவிதை அடிகள் சுட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது.

தமிழ்மொழியின் வளர்ச்சிக்குப் பாடுபட்டு வரும் கலைஞர், தமிழ் மக்களிடம் ஒற்றுமை இல்லாத தன்மையைக் கண்டு வருத்தமுறுவதை,

பொல்லா உட்பகைப் புயலில் சிக்கி
கொல்லாமல் கொல்லும் வேற்றுமை யெனும்
குழியினில் வீழ்ந்திடும் குணம் கெட்ட இனமும் தமிழினமே[55]

என்ற கவிதை அடிகளும்,

தமிழரிடையே ஒற்றுமை என்பது அத்திப்பூ, ஆடிப்பிறையே[56]

என்ற அடியும் சுட்டியுள்ளன.

தமிழர்களின் ஒற்றுமை இன்மையால்தான் வடமொழி மெல்ல மெல்ல வந்து தமிழ்ப்பண்பாட்டைக் குலைக்கத் தொடங்கியது என்பது கலைஞரின் எண்ணமாகும்.

தமிழ் மீது கொண்ட பற்று வடமொழியை வெறுப்பவர்களாக மாற்றிவிடுவதை,

தமிழனே இதுகேளாய் உன்பால்
சாற்ற நினைத்தேன் பலநாளாய்
கமழும் உன் தமிழினை
உயிரென ஓம்பு
காணும் பிறமொழிகளோ வெறும் வேம்பு
வடமொழி நமையெலாம் காக்கிடும் தாம்பு
நம் உரிமைதனைக் கடித்த பாம்பு[57]

என்ற பாரதிதாசனின் கவிதை அடிகள் சுட்டியுள்ளது.

மொழி வளர்ந்தால் தான் மொழி பேசும் நாடு வளரும் என்பதை உணர்ந்த கலைஞர்,

தமிழை நாடு

தமிழ்க்கலாச் சாரத்தை நாடு

தமிழ்ப்பணியை நாடு

தமிழ் உணர்ச்சியை நாடு

தமிழ் இலக்கியத்தை நாடு

தமிழ் உயர்வை நாடு[58]

என்ற கவிதை படைத்துள்ளார்.

"நாடு" என்ற சொல்லை வைத்து கலை ஓர் சொற்சிலம்பம் ஆடியுள்ளார் மொழி என்பது பேசுவதற்குப் பயன்படும் கருவி மட்டுமல்ல. அம்மொழியில் கலாச்சாரம், பண்பு, உணர்ச்சி, இலக்கியம் ஆகிய உள்ளீடுகள் அமைந்துள்ளன. மொழி அழிவுறுமேயானால், அனைத்தும் பாழாகும் என்பதால்தான், தமிழுணர்வு பெற அறிவுரை கூறியுள்ளார்.

கலைஞரின் தமிழ்ப்பற்றிற்கு, அவர் படைத்த சங்கத்தமிழ் சான்றாகின்றது.

தமிழ்மொழியைப் பாராட்டி வீழ்ந்த நாடுமில்லை

தாய்மொழியைப் புறக்கணித்து வளர்ந்த நாடுமில்லை[59]

என்ற கொள்கையில் கலைஞர் வாழ்ந்து வருபவர். தாய்மொழியை அழிக்க எண்ணிய இந்தியை எதிர்த்துப் போராடி சிறை சென்றவர் கலைஞர். தமிழின் இனிமை மங்கிவிடக்கூடாது என்பதற்காகப் பழமையான இலக்கியங்களைப் புதுமைப்படுத் நூலாக்கியவர் கலைஞர்.

தமிழ் இலக்கிய உலகில் அழியாப் புகழ்பெற்ற கலைஞருக்கு, தமிழ்வேள், முத்தமிழறிஞர் போன்ற விருதுகள் தேடி வந்தன.

*1953 ஆம் ஆண்டு திருச்சியில், "கலைஞர்" விருது வழங்கப்பட்டது. 1969 ஆம் ஆண்டு உலகக்கவிஞன் பேரவை, "உலகப் பெருங் கவிஞர்" என்னும் விருதை வழங்கியது. 1971 ஆம் ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக்கழகம் கௌரவ டாக்டர் பட்டம் வழங்கி சிறப்பித்தது. 1971 ஆம் ஆண்டு தமிழர்கள் ஆராய்ச்சிப் பேரவை, "தமிழவேள்" என்ற விருதை நல்கியது. 1990 ஆம் ஆண்டு தமிழ்ப் பல்கலைக்கழகம், இராசராசன் விருது வழங்கியது.*[60]

*கலைஞர் தமிழகத்தின் வாழும் 4.5 கோடி தமிழர்களுக்கும், உலக அரங்கில் வாழும் 7.5 கோடித் தமிழர்களுக்கும், தமிழினத் தலைவராக இன்றும் நிலைத்து வருவது நினைக்கத்தக்கது.*[61]

*1990 ஆம் ஆண்டு அன்றைய குடியரசுத் தலைவர் முத்தமிழ் அறிஞர் என்ற விருதை வழங்கிச் சிறப்பித்துள்ளார்.*[62]

*கலைஞர் தமிழைத்தான் மூச்சாகக் கொண்டவர் என்பதை,*

அடலேறு மொழித் தமிழே - இன்பக்
கடலேறு மலைத் தமிழே - சோலை
மடலேறு சுவைத் தமிழே - நீஎன்
வடலேறி உயிறேறி வாழ்கின்றாய்[63]

*என்ற கவிதை அடிகள் சுட்டியுள்ளது.*

*ஐம்புலன்களில் ஒன்றான வாய்க்குப் பெருமை தமிழ் பேசுதல்தான் என்பதைக் கலைஞர்,*

"பழந்தமிழ் பேச மறுக்குமோ வாயும்"[64]

என்று குறிப்பிட்டுள்ளார்.

தமிழைக் கற்று அனைவரும் தமிழ்க்கவி பாடவேண்டும் என்று கலைஞர் விரும்பியதை,

**கத்திச் சுடர் சுற்றிக்கழல்**
**வற்றிப்பகை வெற்றித்திரு**
**பற்றின்கவி கற்றுக் கொள்**
**முத்துத் தமிழ்**[65]

என்ற சந்தக்கவி சுட்டியுள்ளது.

தேமதுரத் தமிழோசை எங்கும் பரவ வேண்டும் என்ற வேட்கை கொண்டவர் கலைஞர் என்பதை,

**சங்கத்தரு தங்கத்தமிழ்**
**வங்கக்கடல் பொங்கும் - இனம்**
**சிங்கக்குரல் எங்கும் எழ**[66]

என்ற கவிதை அடிகள் குறிப்பிட்டுள்ளது.

தமிழர்களின் அறநூலான திருக்குறளுக்கு விளக்கம் தந்து, "குறளோவியம்" என்று பெயரிட்டுள்ளது கலைஞரின் தமிழ்ப்பற்றைப் பறைசாற்றியுள்ளது.

முப்பதாண்டுகளில் உழைப்பில் 354 குறள்பாக்களுக்கும், 300 குறளோவியங்கள் தீட்டப்பட்டு நூலாக்கம் பெற்றது.[67]

கலைஞர் சங்க இலக்கியம் முதல் இக்காலத்தமிழ் இலக்கியம்வரை நன்கு கற்றுத் தேர்ந்தவர். தமிழர்தம் மாட்சியை, பண்டைய மன்னர்களின் எழுச்சியைப் பழைய இலக்கியக் காட்சியை அறிமுகப்படுத்தும் நோக்கில் பழந்தமிழ் இலக்கியங்களுக்கு விளக்கம் செய்து தொண்டு புரிந்தவர்.

கலைஞர் திராவிட இயக்கப் பின்புலத்தைச் சார்ந்தவர். கடவுள் மறுப்பு, பகுத்தறிவு, சுயமரியாதைப் போக்கு ஆகியவற்றில் ஈடுபாடு கொண்டு வலியுறுத்தும் இயல்புடையவர். தமது நூலில் தம் கருத்துக்கு மாறான கருத்து மூலநூலில் சொல்லப்பட்டிருந்தாலும், மூல தமிழ் நூலுக்குப் பங்கம் வராதவகையில் பொருத்தமாகப் புத்துரை வழங்குவதை வழக்கமாகக் கொண்டிருப்பது தமிழ்ப்பற்றினைக் காட்டியுள்ளது.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்
தெய்வத்துள் வைக்கப்படும் (குறள் - 50)

என்ற குறளுக்கு விளக்கம் கூற வந்த கலைஞர் இறை அல்லது இறைவன் அல்லது தெய்வம் இவற்றுக்குச் சொல்லப்படும் இலக்கணங்களை வள்ளுவர் புறக்கணிக்காதது மட்டுமல்ல, அவ்விலக்கணங்களின் வழி மாந்தர் திரிபு வேண்டுமென வள்ளுவர் விரும்பினார். ஆதி, அறவாழி, அந்தணன் என்றெல்லாம் கடவுள் என்றும் சொல்லுக்கு வள்ளுவர் இலக்கணம் வகுத்துள்ளார். இறைவனுக்குரிய இத்தனை பெருமையும் கொண்டு ஒருவன் வையத்தில் வாழ வேண்டும் என்று வள்ளுவர் கருதினார் என்று புதுவிளக்கம் கூறியிருப்பது நினைக்கத்தக்கது.[68]

கலைஞர் தம் படைப்புகளில் வரும் முக்கிய கதாபாத்திரங்களின் பெயர்களை அழகுத் தமிழ்ச் சொற்களால் அமைத்திருப்பது அவரது மொழிப்பற்றினைக் காட்டுவதாக அமைந்துள்ளது.

பூவழகி, பூங்குழலி, கயல் விழி, மாங்கனி, அபுகாசி, திருமதி, அன்னம், பூங்கொடி, நல்லம்மை, அழகம்மை, சேல் கெண்டை, அன்பு, திங்கள், செவ்வாய், மாங்கிளி, ஏந்திழை போன்ற சொற்களைப் பெண் பாத்திரங்களுக்கும்,

ஆண் பாத்திரங்களுக்கு, கார்மேகம், இரட்சன், கலைஞன், கதிரவன், சிலம்பன், மலையன், தேனப்பன், அமுதன் பூங்குன்றன், இளங்கோ, ஒதியன், அன்புமணி, அழகான் நல்லான், முகிலன், எழினி, சீராளன், பரிதி, மாவெண் கோ என்றும் பெயர் படைத்திருப்பது கலைஞரின் தமிழ்ப்பற்றினைச் சுட்டியுள்ளது.

"கலைஞர் கருணாநிதி தமிழ்ப்பக்தர். தமிழ்க்கவிஞர். தமிழ்மொழி வளர்ச்சிக்காகப் பற்பல செயல்களைச் செய்து வருகின்றார். தமிழ் வாழ்க என்னும் குரல் சில ஆண்டுகளுக்கு முன்பு வெற்றுக் குரலாக இருந்தது. தி.மு.கழக ஆட்சி ஏற்பட்டபிறகு கலைஞர் கருணாநிதியின் தலைமையில் தமிழ்மொழி சிறப்புற்று வருகிறது. தமிழன்னையை அரியாசனத்தில் அமர்த்தும் தலைமகனாகக் கலைஞர் விளங்குகின்றார்.

சேர, சோழ, பாண்டியர் போல் தமிழ்மொழியை வளர்க்க மன்னர் இல்லாத இக்காலத்தில் கலைஞர் கருணாநிதி தோன்றித் தமிழை பார்த்து வருகின்றார்[69] என்ற தொடர்கள் தமிழோடு கலைஞர் இணைந்துள்ளதைச் சுட்டியுள்ளன.

*தனது சுறுசுறுப்பான வாழ்க்கைக்குத் தமிழ்தான் காரணம் என்பதைக் கலைஞர்,*

சீட்டெழுதி வருகின்றார் கணக்கற்றோர் மனுக்களுடன்
உழல்கின்றேன் அவரிடையே ஓய்வே இல்லை
உருள்கின்றேன் ஊருவாய் உதைப்பட்ட பந்தைப்போல்
**உடல் இளைத்துப் போனாலும் உயிர் மட்டும் இளைக்கவில்லை**
சுடர்வழங்கத் தமிழருக்குச் சோர்வுதான் மேவிடுமோ[70]

*என்ற கவிதையடிகளால் சுட்டியுள்ளார்.*

*கலைஞருக்குள்ளிருக்கும் தமிழ்ப்பற்றும், தமிழினப்பற்றும் அவரைக் கவிஞனாக்கியது[71] என்பதை,*

சங்கத்தமிழ் பொங்கித்தினம்
பொங்கற் சுவை பங்கிட்டவன்
தங்கத் தமிழ் மங்கச் சிறு
பங்கம்வரின் பொங்கிச் சிறை
அங்கம் புகும் பங்கில் முதல் அணியன்னவன்?
. . . . .
வண்ணத்தமிழ் உண்ணுந்தமிழ் வண்டானவன்
. . . . . . .
அன்னைத்தமிழ் மண்ணுக்கவன்
தன்னை னத்தரும் தொண்டில் முதல் நிதியானவன்[72]?

*என்ற சந்தப் பாடலடிகள் சுட்டியுள்ளது நினைக்கத்தக்கது.*

*கலைஞர் வாழ்வில் நிலைத்தவை, தமிழுக்குக் கம்பீரம், இலக்கியத்திற்குச் சிலிர்ப்பு, ஏழைக்கு ஏற்றம் ஆகிய மூன்றில் இரண்டு நிலைகள் தமிழுக்காக அமைந்தது குறிப்பிடத்தக்கது.*

தமிழின் மூச்சாக வாழும் கலைஞர் தமிழுக்காகப் பாளையங்கோட்டை சிறையில் அடைக்கப்பட்டார். இந்நிகழ்வினை "என் தம்பி கருணாநிதி தமிழ் மொழிக்காகத் தமிழரின் மானம் காப்பதற்காகச் சிறையிருந்த பாளையங்கோட்டை கழகத்தவர் இனிமேல் யாத்திரை, போகத்தக்க புனிதத்தலம் என்ற அறிஞர் அண்ணா[73] குறிப்பிட்டுள்ளது மகிழத்தக்கது

கலைஞரின் இயக்கப்பணிக்கும், ஆட்சிப்பணிக்கும், தமிழ்த் தொண்டு குருதியோட்டமாக இருந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

கூர்மையான அறிவும் அதைவிடக் கூர்மையான பேனா முனையும் பேச்சாற்றலில் உயர் சிறப்பும் பெற்ற கலைஞர் மு.கருணாநிதி தமிழுக்கும் தமிழிலக்கியத்திற்கும் செய்த தொண்டு அளப்பதற்குரியது. தமிழ்மொழியை அழகுபடுத்தி வளமிக்கதாகச் செய்த பெருமை இவருடையது.

His mind is sharp. His pen is sharp. A write and orator per excellence. He has embellished and enuehed Tamil language and literature.[74]

> **தமிழிடம் அதன்**
> **முகவரி கேட்டேன்**
> **மேற்பார்வை மு.கருணாநிதி**
> **என்றது.[75]**

என்ற கவிதை படைத்துள்ளது சிகரம் இசைத்தது போலுள்ளது.

கலைஞரின் மேற்பார்வையில் "தமிழ்" வாழ்வதாகக் கவிஞர் குறிப்பிட்டுள்ளது கற்பனை அல்ல உண்மையின் பாற்பட்டது.

கலைஞரின் புலப்பாட்டுத்திறன் அனைத்துப் படைப்புகளிலும், வெளிப்பட்டுள்ளது என்றாலும் தொல்காப்பியப் பூங்கா, தாய் காவியம் ஆகிய நூல்களில் கலைஞரின் புலப்பாட்டு திறன் வெளிப்படும் தன்மையைத் மதிப்பிடுவது இவ்வாய்வின் நோக்கமாகும். இவ்நோக்கத்திற்குப் பயனளிக்கும் வகையில் கலைஞரின் புலப்பாட்டுத் திறனை தொல்காப்பியப்பூங்கா, தாய்காவியத்தின் வழியே மதிப்பிடும் முறையில் அவைகளின் உள்ளீடுகளை அடுத்த இயல் விளக்குவதாக அமைகிறது.

தமிழுக்கும் கலைஞருக்குமிடையேயுள்ள தொடர்பை அறிமுக விளக்கமாக இவ்வியல் இயம்புகிறது.

# அடிக்குறிப்புகள்

1. ந.சஞ்சீவி, **இலக்கியத் தலைவர் கலைஞர்**, பக்.39 - 40
2. நாஞ்சில் க.மனோகரன், **தமிழினத் தலைவர்கலைஞர்**, ப.37.
3. கலைஞர் கருணாநிதி, **நெஞ்சுக்கு நீதி**, ப.26.
4. **குமுதம்** (23.- 198)
5 எஸ். சந்தானம், **கல்வி உளவியலின் அடிப்படைகள்**, ப.447.
6. மே. நூ. ப. 461
7. மே. நூ. ப. 4661
8. மே. நூ. ப. 450
9. மே. நூ. ப. 460
10. மே. நூ. ப. 460
11. மே. நூ. ப. 448
12. மே. நூ. ப. 447
13. மே. நூ. ப. 448
14. தா.ஏ.சண்முகம், **உளவியல்,** ப.448.
15. எஸ்.சந்தானம், **கல்வி உளவியலின் அடிப்படைகள்**, ப.450.
16. டாக்டர் சு.சண்முகசுந்தரம், **கலைஞர் கலை இலக்கியத்தடம்,** பக். 238 - 283.
17. கா.வேழவேந்தன், **மலர்களின் நாயகன், கலைஞர் பவள விழா மலர்,** ப.5-6
18. டாக்டர் சு.சண்முகசுந்தரம், **கலைஞர் கலை இலக்கியத்தடம்**
19. மே. நூ. ப. 2
20. முனைவர் க.நெடுஞ்செழியன், முனைவர் பெ.இராமலிங்கம், **கலைஞரின் படைப்பிலக்கியத் திறனாய்வு**, ப.8.
21. கலைஞர் மு.கருணாநிதி, **நெஞ்சுக்கு நீதி, முதல்பாகம்** பக் 26-27.
22. நாஞ்சில் கி.மனோகரன், **தமிழகத்தலைவர் கலைஞர்**, ப.141 -142

23. கலைஞர் மு.கருணாநிதி, **நெஞ்சுக்கு நீதி**, பக். 141 - 142
24. முனைவர் க.நெடுஞ்செழியன், முனைவர் பெ.இராமலிங்கம், **கலைஞரின் படைப்பிலக்கியத் திறனாய்வு**, பக்.371 - 381
25. நாஞ்சில் கி.மனோகரன், **தமிழினத்தலைவர் கலைஞர்**, ப.96
26. மே.நூ.ப.105
27. புலவர் வெற்றியழகன், **தமிழ்க்காட்டு வேஷம், கலைஞரின் பவளவிழா மலர்**, ப.65.
28. மு. மேத்தா, **இமயத்திற்குப் பொன்னாடை, கலைஞர் பவளவிழா மலர்,** ப.65.
29. மே.நூ. ப. 65
30. முனைவர் க.நெடுஞ்செழியன், முனைவர் பெ.இராமலிங்கம், **கலைஞரின் படைப்பிலக்கியத் திறனாய்வு**, ப.8
31. ந. சஞ்சீவி, **இலக்கியத்தலைவர் கலைஞர்**, ப.12.
32. மே.நூ. ப. 17
33. மே.நூ. ப. 18
34. மே.நூ. ப. 140
35. மே.நூ. ப. 33
36. டாக்டர் சு.சண்முகசுந்தரம், **கலைஞர் கலை இலக்கியத் தடம்,** ப.3
37. அசோகமித்திரன் **கல்கி (வார இதழ்)**, நாள் 7.6.98
38. ந. சஞ்சீவி, **இலக்கியத்தலைவர் கலைஞர்,** ப.10.
39. கவிஞர் வைரமுத்து, **கலைஞரின் 77 வது பிறந்தநாள் மலர்**, ப.63
40. மே.நூ. ப. 111
41. மு.வரதராசன், **கலைஞர் பவளவிழா மலர்**, ப.88
42. கலைஞர் கருணாநிதி, **மேடையில் வீசிய பூங்காற்று**, ப.53.
43. மே.நூ. ப. 54
44. டாக்டர் சு.சண்முகசுந்தரம், **கலைஞர் கலை இலக்கியத்தடம்**,ப.3

45. *அசோகமித்திரன்,* **கல்கி (வார இதழ்)** *நாள் 7.6.98*

46. *கலைஞர் கருணாநிதி,* **சங்கத்தமிழ்,** *ப.66*

47. **முரசொலி** *(நாளிதழ்) நாள் 3.5.1968.*

48. **டாக்டர் கலைஞர் மணிவிழா மலர்,** *ப.67*

49. **கலைஞர் பவளவிழா மலர்,** *ப.28*

50. *கலைஞர் மு.கருணாநிதி,* **சங்கத்தமிழ்,** *ப.186.*

51. *மே.நூ. ப. 125.*

52. *மே.நூ. ப. 136.*

53 *மே.நூ. ப. 136*

54. *மே.நூ. ப. 360.*

55. *மே.நூ. ப. 12.*

56. *மே.நூ. ப. 73.*

57. *பாரதிதாசன்,* **"பாரதிதாசன் பத்து நாட்கள்"** *, ப. 107.*

58. *கலைஞர் மு.கருணாநிதி,* **"முத்துக்குளியல்",** *ப.80.*

59. **கலைஞரின் 77வது பிறந்தநாள் சிறப்பு மலர்,** *ப.80.*

60. *ப.பெண்ணரசி,* **கலைஞர் மு.கருணாநிதியின் படைப்புக்களில் சங்க இலக்கியக்கூறுகள்,** *(முனைவர் பட்ட தட்டச்சுப்படிவம் அரசர் கல்லூரி / திருவையாறு 2001), ப.38.*

61. *மே.நூ. ப. 38.*

62. *மே.நூ. ப. 39.*

63. **கலைஞர் மு.கருணாநிதி கவிதைகள்,** *ப.101.*

64. *மே.நூ. ப. 65.*

65. *மே.நூ. ப. 170.*

66. *மே.நூ. ப. 260*

67. *அ.ஜோதி ரவீந்திரன்,* **கலைஞர் மு.கருணாநிதியின் கருத்துப் புலப்பாட்டு நெறி** *(முனைவர் பட்ட தட்டச்சுப்படிவம், ம.தி.கா. இந்துக்கல்லூரி, திருநெல்வேலி), ப.107*

68. *கலைஞர் மு.கருணாநிதி,* **குறளோவியம்**, *ப.11.*

69. *மயிலை சீனி வேங்கடசாமி,* **தமிழை வாழவைக்கும் கலைஞர், கலைஞர் பவளவிழா மலர்,** *ப.207.*

70. *கலைஞர் மு.கருணாநிதி,* **கலைஞர் கவிதைகள்**, *ப.101.*

71. *ஈரோடு தமிழன்பன்,* **கலைஞரின் கவிதைகளில் ஒரு காவியப் பரிமாணம், கலைஞரின் பவளவிழா மலர்**, *ப.121.*

72. *ஓடைப்பட்டி சுப்பையா, தமிழானவன்,* **கலைஞரின் பவளவிழா மலர்**, *ப.125.*

73. *டாக்டர் ந.வேலுசாமி,* **தமிழுக்கு வயதேது, கலைஞரின் பவளவிழா மலர்,** *ப.205.*

74. A. Badhmanaban, **கலைஞரின் பவளவிழாமலர்**, *ப.218.*

75. *டாக்டர் சு.சண்முகசுந்தரம்,* **கலைஞர் கலை இலக்கியத்தடம்,** *ப.238.*

# இயல் - 2

# உள்ளீடுகள்

*கலைஞரின் புலப்பாட்டுத்திறனை மதிப்பிட இவ்வாய்வில் தொல்காப்பியப்பூங்காவும் தாய்காவியமும் முதன்மை நூலாகக் கருதப் பெற்றுள்ளன. அந்நூல்களின் உள்ளீடுகளை எடுத்துரைப்பதாக இவ்வியல் அமைகிறது.*

*கலைஞரின் படைப்பு வரிசையில் தாய்காவியம் பின்னும் தொல்காப்பியப் பூங்கா முன்னும் படைக்கப்பட்டுள்ளன. தொன்மை கருதியும், கலைஞரின் பெருமுயற்சி கருதியும், தொல்காப்பியப் பூங்கா முதலாவதாகவும், தாய் காவியம் அடுத்த நிலையிலும் வைத்து உள்ளீடுகள் தொகுக்கப்பட்டுள்ளன.*

**தொல்காப்பியப் பூங்கா**

*கலைஞர் அவர்களின் தமிழ் இலக்கணப் பற்றைத் தொல்காப்பியப் பூங்கா என்னும் நூல் சுட்டியுள்ளது. இந்நூலினைத் தமிழ்க்கனி பதிப்பகம் சனவரி 2003 ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளது.*

*கலைஞரின் மருமகன் முரசொலிமாறன் அவர்களின் தூண்டுதலால் இந்நூல் எழுதப்பட்டுள்ளதாகக் கலைஞர் குறிப்பிட்டுள்ளது நினைக்கத்தக்கது.*

*சங்கத்தமிழ் என்ற நூலுள் 135 பாடல்களுக்கு விளக்கம் எழுதியதுபோல், திருக்குறளில் 354 பாக்களுக்கு விளக்கம் எழுதி*

*குறளோவியம் என்ற நூலானது போல், தொல்காப்பியத்தில் உள்ள நூற்பாக்களில் 143க்கு மட்டும் விளக்கம் எழுதி தொல்காப்பியப் பூங்கா என்னும் நூல் படைத்ததைக் கலைஞர் நூலின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.*

*இந்நூலுக்குரிய நோக்கத்தை*

> இலக்கணம் பற்றி மட்டுமே கூறுவது என் நோக்கமில்லை என்பதாலும், இலக்கணத்தில் முக்கியமான சிலவற்றை நினைவில் வைத்துக்கொள்வதற்காக எடுக்கும் முயற்சி[1]

*என்று குறிப்பிட்டுள்ளார்.*

*குறிப்பிட்ட நூற்பாக்களை மட்டும் தேர்ந்தெடுத்தற்குரிய காரணத்தை,*

> தொல்காப்பியத்தைத் தொடுவதற்கே தயங்கித்தயங்கி மலர்வனத்தில் நுழைந்த மங்கை அங்குப் பூத்துக் கமழும் அனைத்து மலர்களையும் சூடிக்கொள்ள ஆசைப்படினும், தன் தலை தாங்கும் அளவே ஆய்ந்து மலர்களைப் பறிப்பது போலவே நானும் பறித்தெடுத்து சூடிக்கொள்ள சுழன்று சுழன்று தொல்காப்பியத் தோட்டத்திற்குள் குறிப்பாக நூறு மலர்களைக் கொய்திட விரும்பினேன்[2]

*என்று விளக்கியுள்ளார்.*

*கலைஞர் தொல்காப்பியப் பூங்கா என்னும் நூலைப் படைப்பதற்குரிய காரண கர்த்தாக்களை,*

> இலக்குவனாரைத் தொடர்ந்து என்னைத் தமிழாற்றலால் வயப்படுத்திய பேரறிஞர் அண்ணாவுக்கும், புரட்சிக்கவிஞர் பாரதிதாசனுக்கும் நலங்கிள்ளி, நெடுங்கிள்ளிக்கும், அறிஞர் மு.வரதராசனார்க்கும் என் தமிழ் ஆசிரியர்கள் மகாவித்வான்

> தண்டபாணி தேசிகர் முத்துகிருஷ்ண நாட்டார், முனைவர்
> சி.இலக்குவனார், இராச கோபால்பிள்ளை

என்று பட்டியலிட்டுள்ளது நினைக்கத்தக்கது.

கோவா மாநிலத்தில் தொல்காப்பியப் பூங்கா எழுதத் தொடங்கியது 1.9.2002 ஆம் ஆண்டு. நிறைவு செய்தது 3.10.2002 என்ற குறிப்பு இடம் பெற்றுள்ளது. இந்நூல் படைத்த கால எல்லை முப்பத்து இரண்டு நாட்களாகும். இக்குறுகிய கால கட்ட படைப்பு, கலைஞரின் இலக்கண ஆர்வத்தைச் சுட்டுவதாக அமைந்துள்ளது.

இந்நூல் நூறு தலைப்புகளில் தொல்காப்பியத்தை உணர்த்த முற்பட்டுள்ளது.

**மலர் (1) எழுத்து**

மொழிகளுக்கு ஒலி முக்கியம். ஒலியால் எழுத்து வரிவடிவம் பெறுகின்றது. முதல் அதிகாரம் எழுத்து என்று தொல்காப்பியர் தொடங்கி உள்ளதை,

> எழுத்தெனப்படுவ
> அகரமுதல் னகர விறுவாய்
> முப்பஃதென்ப
> சார்ந்து மரபின் மூன்றாங்கடையே (நூ.பா.1)

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

முப்பது எழுத்துக்கள் அன்றி குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் ஆகிய மூன்றும் எழுத்துக்களாகும் என்பதை,

அவைதாம்

குற்று இயல் இகரம், குற்று இயல் உகரம்

ஆய்தம் என்ற

முப்பால் புள்ளியும் எழுத்து ஓர் அன்ன (நூ.பா.2)

*என்ற நூற்பா சுட்டியுள்ளது. முப்பது எழுத்துக்களைச் சார்ந்து வருபவை மூன்று எழுத்துக்களாகும்.*

**மலர் (2) உயிரும் மெய்யும்**

*உயிரெழுத்துக்கள் பன்னிரெண்டு என்பதை,*

ஔகார இறுவாய்ப்

பன் ஈ ர் எழுத்தும் உயிர்என மொழிப (நூ.பா.8)

*என்ற நூற்பாவும், மெய்யெழுத்துப் பதினெட்டு என்பதை*

னகார இறுவாய்ப்

பதினெண் எழுத்தும் மெய்யென மொழிப (நூ.பா.8)

*என்று நூற்பாவும் கலைஞரால் எடுத்தாளப்பட்டுள்ளது.*

**மலர் (3) உயிர்மெய்**

*உயிர்மெய் எழுத்துக்களில் முதலில் மெய்யும் பின்பு உயிரம் ஒலிப்பைத் தருகின்றன என்பதை,*

மெய்யின் வழியது

உயிர்த் தோன்றும் நிலையே (நூ.பா.8)

*என்ற நூற்பா அமைந்துள்ளது.*

**மலர் (4) மருந்து மாத்திரை**

*அ, இ, உ, எ, ஒ ஆகிய ஐந்து குறில்களுக்கு ஒரு மாத்திரை, ஆ, ஈ, ஊ, ஓ, ஔ ஆகிய நெட்டெழுத்துக்களுக்கு இரண்டு மாத்திரை ஒலித்தல்*

வேண்டும். மெய்யெழுத்துக்களுக்கு அரைமாத்திரை ஒலி அளவாகும் என்பதை,

அவைதாம்
அ,இ,உ,எ,ஒ என்னும்
அப்பால் ஐந்தும்
ஓர் அளவு இசைக்கும் குற்றெழுத்தென்ப (நூ.பா. 3)

ஆ, ஈ, ஊ, ஏ, ஓ, ஔ என்னும்
அப்பால் ஏழும்
ஈர் அளவு இசைக்கும் நெட்டெழுத்து
என்ப (நூ.பா.4)
மெய்யின் அளவே அரைஎன மொழிப (நூ.பா.11)

என்ற நூற்பாக்கள் சுட்டியுள்ளன.

கண்ணிமைப்பும், விரல் நொடிப்பும் மாத்திரைக்குரிய அளவு என்பதை,

கண்இமை நொடி என அவ்வே மாத்திரை
நுண்ணுதின் உணர்ந்தோர் கண்ட ஆறே (நூ.பா.7)

இப்பகுதியில் குறில், நெடில் , மாத்திரை ஆகியவற்றைப் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. மாத்திரையை விளக்க ஒரு சின்ன கதையைக் கலைஞர் படைத்துள்ளார்.

**மலர் (5) இன ஒற்றுமை**

மெய்யெழுத்துக்கள் வல்லினம், மெல்லினம், இடையினம் என்று பகுக்கப்பட்டுள்ளதை,

வல்லெழுத்து என்ப க,ச,ட,த,ப,ற (நூ.பா.19)

மெல்லெழுத்து என்ப ங, ஞ, ண, நமண (நூ.பா.28)

இடையெழுத்து என்ப யரவலழள (நூ.பா.21)

*என்ற நூற்பாக்கள் சுட்டியுள்ளன.*

*தமிழ் என்ற சொல்லில் த என்ற எழுத்து வல்லினத்தைச் சார்ந்தது. மி என்ற எழுத்து மெல்லினத்தைச் சார்ந்தது. ழ என்ற எழுத்து இடையினத்தைச் சார்ந்தது. இனத்துக்கு ஒரெழுத்து இணைந்து தமிழ் உருவாகியிருக்கும்போது தமிழரினம் ஏன் சிந்தனை சிதறவேண்டும்? என்று கலைஞர் தொடுக்கும் வினா சிந்திக்கத்தக்கது.*

**மலர் (6) பிறப்பியல் பெருமை**

*எழுத்துக்களின் பிறப்பிடத்தைப் பற்றிய விளக்கம் அமைந்துள்ளது. எழுத்துக்கள் சேர்ந்த சொற்களை உச்சரிக்கும்போது மனித உடலில் அவற்றின் பிறப்பிடம் எது? என்று கண்டு அதனைக் குறிப்பிடுவது அறிவியலின் அடிப்படையில் அமைந்தது. தொல்காப்பியர் உந்திக் கமலத்திலிருந்து காற்றுத் தோன்றி அதுபோல வந்து தலை, கழுத்து, நெஞ்சு இவற்றில் நின்று, பல், உதடு, நாக்கு, மூக்கு, அண்ணம் என்னும் எட்டு உறுப்புக்களிலும் தொடர்புற்று ஒலி எழுத்துக்கள் தோன்றும் என்பதை,*

உந்தி முதலா முந்துவளித் தோன்றித்
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇப்
பல்லும் இதழும் நாவும் மூக்கும்
அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்
உறுப்புற்று அமைய நெறிப்படறாடி

எல்லா எழுத்தும் சொல்லும் காலைப்
பிறப்பின் ஆக்கம் வேறுவேறு இயல
திறப்படத் தெரியும் காட்சியான (பிறப்பு. நூ.பா.1)

*என்ற நூற்பா சுட்டியுள்ளது.*

*“அடுத்து எழு வளி இசை அரில் தபநாடி அளவிற் கோடல் அந்தணர் மணத்தே...” என்ற நூற்பாவில் வரும் “அந்தணர்” என்ற சொல்லாட்சி வடமொழியாளரையும், தேதியையும் குறிப்பனவல்ல. தமிழில் அறிவுசால் நல்லோர் அந்தணர் எனப்படுவர் என்ற விளக்கத்தைக் கலைஞர் தந்துள்ளது பாராட்டத்தக்கது.*

**மலர் (7) உடம்படுமெய்**

*எல்லாச் சொற்களிலும் உயிர் ஈற்றுமுன் உயிர் வரும்போது உடம்படு மெய் தோன்றும். (மா + இலை = மாவிலை) என்பதை,*

எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருபுகொளல் வரையார் (புணர். நூ.பா.39)

*என்ற நூற்பா சுட்டியுள்ளது. உடம்படுமெய் = இருஉயிர் (எழுத்து)களைச் சேர்க்கும் மெய் (எழுத்து).*

**மலர் (8) மானம்**

*ஆடூஉ, மகடூஉ என்னும் இருபெயர்களில் வல்லெழுத்தே யன்றி இன்சாரியையும் வரலாம். அவ்வாறுவரின் குற்றமில்லை என்பதை,*

ஆடூஉ, மகடூஉ ஆயிரு பெயர்க்கும்
இன்னிடை வரினும் மானமில்லை

(உயிர், மயங்கியல், நூ.பா.69)

என்ற நூற்பா குறிப்பிட்டுள்ளது. சாரியைப் பற்றிய நூற்பாவைக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார். மானமில்லை என்ற சொல்லிற்குக் குற்றமில்லை என்று பொருள். இப்பொருளை உணர்த்த ஒரு சிறு நாடகத்தைக் கலைஞர் படைத்துள்ளார்.

மானம் என்ற சொல்லிற்கு, தன்மதிப்பு, அகங்காரம், வலி, குற்றம், நேசம், அன்பு, கற்பு ஆகிய பொருள்கள் உண்டு.[5] கலைஞரின் அகராதி உணர்வை மேற்குறித்த தொடர் விளக்கியுள்ளது குறிப்பிடத்தக்கது.

**மலர்(9) சோழன்**

இருதிணைக்குரிய பெயரைப் பொதுப்பெயர் என்பர். சோழன் என்ற பொதுப்பெயர் மன்னனைக் குறிக்கும்போது உயர்திணையாகவும், விலங்கினைக் குறிக்கும்போது அஃறிணையாகவும் வரும் என்பதை,

> அஃறிணை விரவும்பெயர்
> இயல்பு மாருளவே (தொ.மரபு.நூ.13)

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

**மலர் (10) எழுத்தின் அணி**

தமக்கென்று தனித்தன்மை இல்லாது, சார்ந்து இயங்கும் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் ஆகிய மூன்று எழுத்துக்களும், தாம் சார்ந்திடும் முதல் எழுத்துக்களின் பிறப்பிடத்தைத் தமக்குரிய பிறப்பிடமாகக் கொள்ளும் என்பதை,

> சார்ந்துவரின் அல்லது தமக்கு இயல்பு இலஎனத்
> தேர்ந்து வெளிப்படுத்த ஞனன மூன்றும்
> தம்தம் சார்பில் பிறப்பொடு சிவணி
> ஒத்த காட்சியில்தம் இயல்பு இயலும் (பிறப்.நூ.பா.19)

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

**குற்றியலிகரம் கேண்மியா சென்மியா**

நாடு + யாது = நாடி யாது

முருகு +யாது = முருகி யாது

**குற்றியலுகரம்**

ஒடு, முரடு, மூர்கு, அஃது,

சுக்கு, அங்கு

பத்து தலைப்புக்களில் எழுத்ததிகார நூற்பாக்களைக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார்.

**சொல்லதிகாரம்**

**மலர் (11) இலக்கணத் துறவு**

ஒருவனையும், ஒருத்தியையும் சுட்டிச் சொல்லும், பன்மைச் சொல்லும், ஒன்றனைச் சொல்லும், பன்மைச் சொல்லும் உலக வழக்கில் உயர்த்திச் சொல்லும் சொல்லாம். அவை இலக்கண வழக்கல்ல என்ற பால் வழுவமைதியை,

ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கினாகிய உயர்சொல் கிளவி
இலக்கண மருங்கில் சொல்லாறு அல்ல

(சொல். கிளவி. நூ.பா.27)

என்று தொல்காப்பியர் சுட்டியுள்ளதைத் துறவிக் கதை வாயிலாகக் கலைஞர் விளக்கியுள்ளதால் இலக்கணத் துறவு என்று பெயரிட்டுள்ளார்.

**மலர் (12) சொல்லோவியம்**

*கண், தோள், மார்பகம் ஆகிய சொற்கள் பன்மைப் பொருளை உணர்த்தும் சொற்கள் என்றாலும், ஒருமையில் உணர்த்தினாலும் பன்மையென விளங்கிவிடும். வினைக்கேற்பப் பன்மையிலும் உணர்த்துவதில் தவறில்லை என்பதை,*

**கண்ணும் தோளும் முலையும் பிறவும்
பன்மை சுட்டிய சின்ன நிலைக்கிளவி
பன்மை கூறும் கடப்பாடிலவே
தம்வினைக் கியலும் எழுத்தலங் கடையே**

*(சொல். கிளவி. நூ.பா.62)*

*தொல்காப்பியம் சுட்டியுள்ளது.*

**மலர் (13) வணிகத்திறன்**

*கேட்ட பொருள் தன்னிடம் இல்லை என்று சொல்வதற்குப் பதில் தன்னிடம் இருக்கும் பொருளைக் கூறவேண்டும் என்ற தொல்காப்பிய நெறியை*

எப்பொருளாயினும் அல்லதுஇல் எனின்

அப்பொருள் அல்லாப் பிறிது பொருள்கூறல்

(சொல். கிளவி. நூ.35)

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

**மலர் (14) எனது மகனோ?**

எனது மகன் என்று எழுதுவது தவறு. உயர்திணையுடன் அது என்ற ஆறாம் வேற்றுமை வரல் கூடாது. நான்காம் வேற்றுமை உருபு வந்து எனக்கு மகன் என்று எழுதுவதே சரியானது என்பதை,

அது என் வேற்றுமை உயர்திணைத் தொகைவரின்

அது என் உருபுகெட குகவம் வருமே

(வேற்றுமை.மய.நூ.11)

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

**மலர் (15) கதம்பக் கனவு**

ஆண்மை திரிந்த பிறகு ஆண் தன்மையினைச் சுட்டுகின்ற சொல்லைச் சேர்த்துச் சொல்லாமல், பேடி வந்தாள், போனாள் என்று சொல்ல வேண்டும் என்பதை,

ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி

ஆண்மை அறிசொற்கு ஆகுஇடன் இன்றே (கிளவி.நூ.பா12)

என்று நூற்பா சுட்டியுள்ளது. ஆணில்லா ஆணும், பெண்ணில்லாப் பெண்ணும் குறிக்கப் பெறுவதால் கதம்பம் என்று கலைஞர் இத்தலைப்பிட்டுள்ளார்.

**மலர் (16) பெண்மகன்**

*பால் திரிந்து வழங்கும் பெண் மகன் என்ற சொல், பெண் மகன் வந்தார் என்று பெண் பால் வினை கொள்ளும். எல்லாரும், எல்லீரும், பெண்மகன் போன்ற சொற்களும் உயர்திணை பெயர்கள் என்பதை,*

எல்லோரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
எல்லீரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
பெண்மை அடுத்த மகன் எண்கிளவியும்
அன்னஇயல என்மனார் புலவர் (பெய. நூ.10)

*என்ற நூற்பா சுட்டியுள்ளது.*

*முன்பு பருவம் வராத பெண்ணைப் பெண் மகன் என்றழைக்கும் மரபு இருந்ததைக் கலைஞர் நினைவுபடுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கது.*

மகடூஉ மருங்கின் பால்திரி கிளவி
மகடூஉ இயற்கை தொழில் வயினான (பெய. நூ.பா.40)

*என்ற நூற்பா மேற்கண்ட கருத்தால் விளைந்த நூற்பாவாகும்.*

**மலர் (17)**

வடித்துவிட்டேன்
வந்துவிட்டேன்

*விரைவு கருதி எதிர்காலத்தையும், நிகழ்காலத்தையும் கடந்த கலை குறிப்புடன் கூறலாம் என்பதை,*

வாராக் காலத்தும் நிகழுங் காலத்தும்
ஒராங்கு வரூஉம் வினைச் சொற்கிளவி
இறந்த காலத்து குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள் என்மனார் புலவர் (வினை.நூ.44)

என்ற நூற்பா உணர்த்தியுள்ளது. இத்தலைப்போடு கலைஞரின் சொல்லதிகாரப் பார்வை நிறைவடைகின்றது.

**மலர் (18) முதல் பொருள்**

முதற்பொருள் என்பது நிலமும் பொழுதுமாகும் என்பதை,

**முதல் எனப்படுவது நிலம் பொழுது இரண்டின்**
**இயல்பு என மொழிப இயல்பு உணர்ந்தோரே (அகத். நூ.4)**

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

நிலமும், நிலத்திற்குரிய தெய்வங்களையும்,

**மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே (அகத்.நூ.5)**

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

முல்லை நிலத்திற்கு மாயோனும், குறிஞ்சிக்கு முருகனும், மருதத்திற்கு இந்திரனும, நெய்தலுக்கு வருணனும் தெய்வங்களாக அமைந்துள்ளனர்.

''பாலை நிலத் தெய்வமாக வர யாரும் விரும்பபில்லை போலும்''[6]

என்று தன் நாத்திக உணர்வைக் கலைஞர் வெளிப்படுத்தியுள்ளார். முல்லையும், குறிஞ்சியும் வளம் குனறி பாலையாக மாறும். அப்பாலை நிலத்தெய்வம் கொற்றவை என்று சுட்டும் தமிழ் மரபைக் கலைஞர் வெளிப்படுத்தவில்லை.

**மலர் (19) நிலமும் பொழுதும்**

*முல்லை நிலத்திற்குப் பெரும்பொழுது கார் சிறுபொழுது மாலை. குறிஞ்சி நிலத்திற்குப் பெரும்பொழுது கூதிர். சிறுபொழுது யாமம், மருத நிலத்திற்குச் சிறுபொழுது வைகறை, நெய்தல் நிலத்திற்கு உரிய சிறுபொழுது எற்பாடு என்ற கருத்துக்களை,*

காரும் மாலையும் முல்லை குறிஞ்சி
கூதிர் யாமம் என்மனார் புலவர் (அகத். நூ.6)
வைகறை விடியல் மருதம் ஏற்பாடு
நெய்தலாதல் மெய்பெறத் தோன்றும் (அகத். நூ.8)

*என்ற நூற்பாக்கள் சுட்டியுள்ளன.*

*நால்வகைப் பட்டியலில் இடம்பெறாத நடுவுநிலைத்திணையாகிய பாலைக்குப் பெரும்பொழுது, இளவேனிலும், முதுவேனிலும், சிறுபொழுது பகலாகவும் அமையும் என்பதை,*

நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவு நிலை மருங்கின் முன்னிய நெறித்தே (அகத். நூ.9)
பின்பனி தானும் உரித்தென மொழிப (அகத். நூ.10)

*என்ற நூற்பாக்கள் உணர்த்தியுள்ளது*

*திணை ஒழுக்கங்கள் மாறுபட்டு நடப்பதைத் தவிர்க்க முடியாது. நிலங்கள் தம்முள் மாறுபடுதல் இல்லை என்று இலக்கணமுணர்ந்த அறிஞர்கள் கூறுவர் என்பதை,*

திணை மயக்குதலும் கடிநிலை இலவே
நிலன் மருங்கு மயங்குதல் இன்றென மொழிப
பயன் நன்குணர்ந்த புலமை யோரே (அகத். நூ.12)

*என்ற நூற்பா சுட்டியுள்ளது.*

**மலர் (20) தலைமைத்தகுதி**

முதற்பொருளை நிலம், பொழுது சிலவற்றைத் தொடர்ந்து வருவது கருப்பொருள்.

வழிபடு, தெய்வம், உணவு, மா, மரம், புள், பறை, தொழில் யாழ் ஆகிய அனைத்தும் கருப்பொருள்களாகும் என்பதை,

> **தெய்வம் உணாவே மா, மரம், புள், பறை**
> **செய்தி யாழின் பக்தியொடு தொகைஇ**
> **அவ்வகைபிறவும் கருவென மொழிப (அகத்.நூ.18)**

என்ற நூற்பா சுட்டியுள்ளது. இக்கருப்பொருள் ஒவ்வொரு திணைக்கும், ஒவ்வொரு விதத்தில் அமைந்திருக்கும். ஒரு நிலத்திற்குரிய கருப்பொருள் இன்னொரு நிலத்திற்கும் வருவதுண்டு. எந்நிலத்திற்குரிய பாட்டில் அக்கருப்பொருள் வந்துள்ளதோ, அந்நிலத்திற்குரிய கருப்பொருளாகக் கருதுதல் வேண்டும் என்பதை,

> **எந்நில மருங்கில் பூவும் புள்ளும்**
> **அந்நிலம் பொழுதொடு வாவி ஆயினும்**
> **வந்த நிலத்தின் பயத்தவாகும் (அகத்.நூ.19)**

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

ஒவ்வொரு நிலத்து மக்களுக்கும் தனித்தனிப் பெயர்கள் உண்டு. திணையாக அவர்களின் பெயர்கள் அமைந்திருக்கும். ஆயர், வேட்டுவர் என்ற பெயர்கள் முல்லை நிலமக்களின் பெயர். மருத நிலத்தில் வாழ்பவருக்கு உழவர், உழத்தியர், ஊரன், மகிழ்நன் போன்ற திணைப் பெயர்கள் உண்டு என்பதை,

**ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்**

**ஆவயின் வரூஉம் (அகத். நூ.21)**

என்ற நூற்பா சுட்டியுள்ளது. திணையால் மக்கள் அழைக்கும் மரபினை,

**ஏனோர் பாங்கினும் எண்ணுங்காலை**

**ஆனா வனயே திணை நிலைப் பெயரே (அகத். நூ.22)**

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற வேறுபாடின்றிப் பணிவிடை புரிவோரும் உரிமை உடையவர்களாக இருந்துள்ளனர் என்பதை,

**ஏவல் மரபின் ஏனோரும் உரியர்**

**ஆகிய நிலைமை அவரும் அன்னர் (அகத். நூ.24)**

என்ற நூற்பா சுட்டியுள்ளது. வேறுபாடு காட்டாத தமிழ்ச் சமுதாயத்தைக் காட்டுவதற்காக இந்நூற்பாவை கலைஞர் எடுத்தாண்டுள்ளார்.

**மலர் (21) நிலம் ஆண்ட நேர்த்தி**

ஒவ்வொரு திணைக்கும் மரபு பற்றி வரும் பெயர், தொழில் பற்றி வரும் பெயர் என்று இருவகைப்படும் என்பதை,

**பெயரும் வினையும் ஆயிருவகையே**

**திணைதொறும் திணைநிலைப் பெயரே (அகத். நூ.20)**

என்ற நூற்பா குறிப்பிட்டுள்ளது.

கல்வி கற்பித்தலுக்கும், தூது செல்லுதலுக்கும், அறிவிலும், ஒழுக்கத்திலும், ஆற்றலிலும் உயர்ந்தோருக்குரியதாகும் என்பதை,

**ஓதலும், தூதும் உயர்ந்தோர் மேன (அகத். நூ.26)**

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

போருக்கு மன்னனோ, அல்லது மன்னனைச் சார்ந்தவரோ செல்லலாம். அப்பொறுப்பு மன்னர்க்குரியது என்பதை,

தானே சேறலும் தன்னொடு சிவணிய

ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே (அகத். நூ.27)

என்ற நூற்பா விளக்கி உள்ளது.

மக்கள் தவறான வழியில் செல்லாமல் தடுத்து நிறுத்துவதற்கும் பொருள் ஆக்கப்படுவதற்கும், காக்கப்படுவதற்கும் பிரிவுகள் அமைந்துள்ளன என்பதை,

> **மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய**
> **முல்லை முதலாச் சொல்லிய முறையால்**
> **பிழைத்தது பிழையாதாகல் வேண்டியும்**
> **இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே (அகத். நூ.28)**

என்ற நூற்பா குறிப்பிட்டுள்ளது.

ஒரு நிலத்தின் ஆளுமைக்கு, தலைமக்கள், நிலமக்கள், அடியோர், வினையாற்றுவோர் ஆகிய நால்வகையினரும் காரணமாவார் என்பதை,

> **மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்து (அகத். நூ.29)**

என்ற நூற்பா விளக்கி உள்ளது. நால்வர்க்கும் என்ற சொல்லை ஒருசாரார் நால் வருணத்தார் என்று திரித்துக் கூறினர் என்பது கலைஞரின் எண்ணமாகும்.

ஆளுமைக்காக அமைக்கப்பட்ட பிரிவுகள், வருணம் காரணமாகப் பிரிக்கப்பட்டது என்பது வக்கிரச் சிந்தனையே என்று கலைஞர் கடுமையாகக் கூறியுள்ளது நினைக்கத்தக்கது.

**மலர் (22) மறுப்புக்குப் பரிசு**

மன்னன் கடல் வழிப் பயணத்தின்போது மனைவியை அழைத்துச் செல்லும் மரபு இல்லை என்பதை,

முந்நீர் வழக்கம் மகடூஉ வோடு இல்லை (அகத்.நூ.34)

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

**மலர் (23) மகளிர் மடல்**

காதல் நிறைவேறாவிட்டால் ஆடவன் மடல் ஏறும் வழக்கினை மேற்கொள்வான். அம்மடலேறல் செயலைச் செய்ய மகளிர்க்கு அனுமதியில்லை என்பதை,

எத்தனை மருங்கினும் மகடூஉ மடல்மேல்
பொற்புடை நெறிமை இனிமையான (அகத்.நூ.35)

என்ற நூற்பாவால் அறிய முடிகின்றது.

**மலர் (24) இடையில் ஓர் எளிய விளக்கம்**

இத்தலைப்பின் கீழ் நூற்பாக்கள் எதனையும் சுட்டாது. தொல்காப்பியத்திற்கு உரை எழுதியவர்கள் எளிமையாகக் கூறாமல் சுடு நடையில் விளக்கி உள்ளதை, "நற்பாறைப் பாதைகளிலேயே இலக்கியப் பயணத்தை நடத்தியுள்ளனர்"[8] என்று கலைஞர் உரையின் கடுமையைக் குறிப்பிட்டுள்ளார்.

திணை என்பது ஒழுக்கம், உயர்திணை மக்களையும், அஃறிணை மக்கள் அல்லாதவற்றையும் குறிக்கும். அகம் உள்ளத்தின் அடிப்படையில் அமைவது. ஒருதலைக்காதல் கைக்கிளை, பொருந்தாக் காதல், பெருந்திணை, தலைவனும், தலைவியும் இணைந்து கூடி மயங்குவது குறிஞ்சி, பிரிந்த நிலை பாலை, ஊடல் கொள்வது மருதம். பிரிவில் ஆற்றியிருத்தல் முல்லை, பிரிவை எண்ணி இரங்குவது நெய்தல்.

அகத்திணைக்கு மாற்றாக அல்லாமல் வேற்றொரு திணையாகப் புறத்திணை உள்ளது.

அகம் தலைவன், தலைவியருக்கு மட்டும் உரித்தானது பிறவோடு பகிர்ந்துகொள்ள முடியாதது. இவ்வாழ்வைக் கடந்த அனைத்துச் செயல்களையும் குறிப்பது புறம்.[9]

**மலர் (25) அவள்தானே தாய்**

நற்றாய் புலம்பலுக்குரிய களன்களைக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார். மகள் உடன்போக்குப் போய்விடுகின்றாள். ஏது மறியாதவள் சென்றுவிட்டது குறித்து நற்றாய் மனம் வருந்தித் தலைவிக்குச் சகுனம் பார்க்கத் தெரியுமா? அருள்வாக்குக் கேட்கத் தெரியுமா? கண்ணனை வழிபடத் தெரியுமா? என்ன தீமை நேருமோ? என்று வழியில் காணுவோரிடத்து நற்றாய் புலம்புவாள் என்பதை,

தன்னும் அவனும் அவளும் சுட்டி
மன்னு நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்
நன்மை தீமை அச்சம் சார்தல் என்று
அன்ன பிறவும் அவற்றொடு தொகைஇ
முன்னிய காலம் மூன்றுடன் விளக்கித்
தோழி தே ஏத்தும் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலும்
ஆகிய கிளவியும் அவ்வழிஉரிய (அகத்.நூ.36)

என்ற நூற்பா குறிப்பிட்டுள்ளது.

மகள் பிரிந்துவிட்ட துயரை எண்ணாது, அவள் படும் துன்பத்தை எண்ணும் தாயுள்ளத்தைச் சுட்ட கலைஞர் இந்நூற்பாவைக் கையாண்டுள்ளார்.

**மலர் (26) தோழியின் தொண்டு பெரிதே**

*தலைவியின் தோழியாக வருபவளுக்குப் பொருளதிகாரத்தில் தொல்காப்பியர் சிறப்பிடம் தந்துள்ளதைக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார். தலைவனுக்கு அறிவுரைக்கூறல், தலைவியை மணக்க வேண்டி வற்புறுத்தல், உறவைப் பிரியும் தலைவிக்கு ஆறுதல் கூறல், தலைவியைத் தேற்றுதல் ஆகியப் பணிகள் தோழிக்குரியவை என்பதை,*

தலைவரும் விழுமநிலை எடுத்துவைப்பினும்
போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணும்
நீக்கலின் வந்த தம்முறு விழுமியமும்
வாய்மையும் பொய்மையும் கண்டோர்ச்சுட்டித்
தாய்நிலை நோக்கித் தலைப் பெயர்த்துக் கொளினும்
நோய்மிகப் பெருகித்தன் நெஞ்சு கலுழ்ந்தோளை
அழிந்தது களைஇய இழிந்தது கூறி
வன்முறை நெருங்கி வந்ததன் திறத்தோடு
என்றிவை எல்லாம் இயல்புற நாடின்
ஒன்றித் தோன்றும் தோழி மென (அகத். நூ.39)

*என்ற நூற்பா விளக்கி உள்ளது.*

**மலர் (27) துன்பத்தின் இன்பம்**

*தமிழ் இலக்கிய மரபில், கண்டோர் கூற்று என்ற ஒரு நிலையைக் கலைஞர் சுட்டியுள்ளார். உடன்போக்கு சென்ற தலைவியைத் தேடி செவிலி வருமிடத்து, தலைவி நலமுடன் இருப்பதாகக் கண்டோர் கூறியதும் செவிலிக்குத் துன்பம் மறைகிறது. கண்டோர் கூற்று நிகழுமிடங்களை,*

பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி
வழுவின் ஆகிய குற்றம் காட்டலும்
ஊஉது சார்வும் செல்லும் தேயமும்
ஆர்வ றெஞ்சமொடு செப்பிய வழியினும்
புணர்ந்தோர் பாங்கின் புணர்ந்த நெஞ்சமொடு
அழிந்தெதிர் கூறி விடுப்பினும் ஆங்கு அத்
தாய்நிலைக் கண்டு தடுப்பினும் விடுப்பினும்
சேய் நிலைக்கு அகன்றோர் செலவினும் வரவினும்
கண்டோர் மொழிதல் கண்டது என்ப (அகத். நூ.40)

*என்ற நூற்பா சுட்டியுள்ளது.*

*கண்டோர் கூற்றுக்கு, "காணேம் அல்லேம்" என்று தொடங்கும் பாலைக்கலிப்பாட்டினைக் கலைஞர் இத்தலைப்பின்கீழ் சுட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது.*

**மலர் (28) தலைமகன் நிலைமையும், கடமையும்**

*தலைவனுக்குரிய கூற்று நிகழுமிடங்களைக் கலைஞர் இத்தலைப்பினில் சுட்டியுள்ளார்.*

வாயினும் கையினும் வகுத்த பக்க மோடு
ஊதியம் கருதிய ஒரு திறத்தானும்
புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலும்
தூது இடையிட்ட வகையினாலும்
ஆகித் தோன்றும் பாங்கோர் பாங்கினும்
மூன்றன் பகுதியும் மண்டிலத் தருமையும்
தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும்
பாசறைப் புலம்பலும் முடிந்த காலத்துப்
பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும்
காவற்பாங்கின் ஆங்கோர் பக்கமும்
பரத்தையின் அகற்சியன் பரிந்தோள் குறுகி

**இகத்தலும், தெளிதலும் என இருவகையொடு**
**உரைத்திற நாட்டம் கிழவோன் மேன (அகத். நூ.41)**

*என்ற நூற்பா தலைவனுக்குரிய செயல்பாட்டினைக் கூறியுள்ளது.*

**மலர் (29) பூம்பொய்கையின் புலம்பல்**

*தலைவி கூறும் உள்ளுறை உவமத்தினை உணர்த்தும் முகமாகக் கலைஞர் இத்தலைப்பைக் கொடுத்துள்ளார். உள்ளுறை உவமத்தின் வாயிலாகத் தலைவி தன் உள்காயத்தைப் புலப்படுத்தியுள்ளாள் என்பது கலைஞரின் எண்ணம்.*[10]

*உள்ளுறை உவமத்திற்குரிய இலக்கணத்தை,*

**உள்ளுறுத்து இதனோடு ஒத்துப்பொருள் முடிக என**
**உள்ளுறுத்து இறுவதை உள்ளுறை உவமம் (அகத்.நூ.48)**

*என்ற நூற்பா விளக்கி உள்ளது.*

*ஒன்றோடொன்றை ஒப்பிட்டுக் காட்டுவது உவமம் எனப்படும். உள்ளுறை என்பது மறைபொருளாகச் சொல்லப்படுவது என்று கலைஞர் அரிய விளக்கம் தந்துள்ளது நினைக்கத்தக்கது.*[11]

*இத்தலைப்பில் "வீங்கு நீர் அவிழ்நீலம்" என்ற மருத கலிப்பாடலை எடுத்துக்காட்டாகக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார்.*

**மலர் (30) மருத நாயகி**

*அகத்திணையில், கைக்கிளை என்னும் பகுதியைக் கலைஞர் இத்தலைப்பினுள் விளக்கியுள்ளார். நடைமுறையில் அதிகம் இடம் பெற்றுள்ளது, கைக்கிளை என்பது கலைஞரின் எண்ணம், உண்மையின் பாற்பட்டது. ஒருதலைக் காதலுக்குப் பெயர்தான் கைக்கிளை.*

காம உணர்வு அரும்பாத இளம்பெண் ஒருத்தியிடம், அவளுக்கு ஏற்றார்போல் சொற்களைக் கூறுவதும் கைக்கிளையின் பாற்பட்டதாகும் என்பதை,

> காமஞ்சாலா இளமையோன் வயின்
> ஏமம் சாலா இடும்பை எய்தி
> நன்மைதீமை என்று இருதிறத்தால்
> தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்
> சொல் எதிர்பெறா அன் சொல்லி இன்புறல்
> புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே (அகத்.50)

என்ற நூற்பா விளக்கியுள்ளது.

**மலர் (31) பெருந்திணை**

காதலை, காமத்தை நிறைவேற்றிக் கொள்ள மடலேறுதல், அடக்கமுடியாத காமவெறியால் வெறிதணிந்திட நெறி கடந்து உடற்பசியைத் தீர்த்துக்கொள்ள முனைவது பெருந்திணை என்பதை,

> ஏறிய மடல் திறம் இளமை தீர் திறம்
> தேறுதல் ஒழிந்த சமைத்து மிகுதிறம்
> மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
> செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே (அகத்.நூ.51)

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

இளமை தீர்ந்த பிறகு கூடி முயங்க எண்ணம் கொள்வதும், காமஉணர்வின் உச்சமும் பெருந்திணையாகும். வள்ளுவர் காமத்துப் பாலை இறுதியாக வைத்த காரணம் இதுவே இறுதி என்பதைக் குறிக்கத்தான் என்று கலைஞர் குறிப்பிட்டுள்ளது நயம்மிக்கது.

இம்மலர்கள் வரை அகத்திணைகளை விளக்கிய கலைஞர் இனிவரும் தலைப்புகளில் புறப்பொருளுக்கு விளக்கம் அளிக்க முற்பட்டுள்ளார்.

**மலர் (32) மானமும் வீரமும் கஈத்த மறவர்**

அகத்திணை ஒழுக்கத்திற்குப் புறத்தே நிகழும் புறத்திணையும் ஏழாகத் தொல்காப்பியர் படைத்துள்ளார்.[12]

பகைநாட்டுப் பசுக்களைக் கவர்ந்து வந்து பாதுகாப்பது வெட்சியாகும். கவரப்பட்ட பசுக்களை மீட்பது கரந்தையாகும்.

ஒருவர் மேல் ஒருவர் போர் நடத்த படையெடுத்துச் செல்வது வஞ்சியாகும். கோட்டைச் சுவரை முற்றுகை இடுவது உழிஞை. எதிர் எதிராக நின்று போரிடுதல் தும்பை. போரில் பெறும் வெற்றி வாகையாகும்.

வெட்சித்திணையின் இலக்கணத்தை

> வேந்துவிடு முனைஞர் வேற்றுப் புலக் களவின்
> ஆ தந்து ஓம்பல் மேவறிதாகும் (புறத்.நூ.2)

என்ற நூற்பா விளக்கியுள்ளது.

படை புறப்பாட்டுச் செல்லுகின்ற முழக்கம், பிறர் கூறும் நல்வாக்கை உணர்தல், இரகசியமாகச் செல்லல், ஒற்றர்களால் பகை நிலமறிதல், சூழ்ந்து வரும்பகையை அழித்தல், பசுக்கூட்டத்தைக் கவருதல், எதிர்போரைத் தாக்குதல், கவரப்பட்ட பசுக்களை நோய் அண்டாது தன் நாடு கொண்டுவரல், குறிப்பிட்ட இடத்திற்குப் பசுக்களைக் கொண்டு வரல், அவற்றை நிறுத்தி கணக்கிட்டுப் பங்கு

வைத்தல், சிலவற்றைத் தானமாகக் கொடுத்தல், மகிழ்வால் உண்டு களித்தல், ஆவைக் கவரும் போருக்காக நடைபெறும் என்பதை,

படை இயங்கு அரவம் பாக்கத்து விரிச்சி
புடை கெடப்போகிய செலவே புடைகெட
ஒற்றின் ஆகியவையே வேய்ப்புறம்
முற்றின் ஆகிய புறத்திறை முற்றிய
ஊர் கொலை ஆகோள் பூசல் மாற்றே
நோயின்று உய்த்தல் நுவலுழித் தோற்றம்
தந்து நிரை பாதிடு உண்டாட்டு கொடைஎன
வந்த ஈர்ஏழ் வகையிற்ற வகும் (புறத்.நூ.3)

என்ற நூற்பா விளக்கம் தந்துள்ளது. ஆநிரை கவர்தல் நிகழ்விற்குப் புறநானூற்றில் வரும். "குயில் வாயன்ன" என்று தொடங்கும் ஔவையாரின் பாடலைச் சான்றாகக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார்.

**மலர் (33) நடுகல்லானவன்**

பழந்தமிழர் நடத்திய போர் ஓர் ஒழுங்கு முறையில் அமைந்துள்ளது. எதிரெதிராகப் போர் புரியும் வீரர்கள், பகைவர்க்கும், தன் படைக்கும் உள்ள வேறுபாட்டை உணர பனம்பூ, வேப்பம்பூ, அத்திப்பூ ஆகியவற்றைச் சூடிக் கொண்டனர்.

புறத்திணையில் வரும் ஐந்தாம் நூற்பா, "ஆன் அமர் ஓட்டலும்" என்று தொடங்குகிறது. இந்நூற்பாவில் சுட்டியுள்ள "நடுகல் என்ற அமைவினை மட்டும் கலைஞர் விளக்கியுள்ளார். கரந்தைப் போரில் மாண்ட வீரனுக்கு நடுகல் அமைக்கும் மரபையும், மாண்டவனை மன்னன் போற்றும் மரபையும் இத்தலைப்பில் கலைஞர் விளக்கியுள்ளார்.

**மலர் (34) வல்லவனுக்கு வல்லவன்**

*படையெடுத்துச் சென்று நடத்தும்போரில் பகைமன்னனால் வலிமை கெடுவதும் உண்டு என்பதை,*

**எஞ்சா மண்றசை வேந்தனை வேந்தன்**

**அஞ்சுகத் தலைச் சென்று அடல் குறித்தன்றே (புறத்.நூ.7)**

*என்ற வஞ்சித்திணை நூற்பாவைக் கலைஞர் எடுத்தாண்டுகிறார்.*

*வஞ்சித்திணை, படையரவம், தீயூட்டடல், மன்னன் பெருமை கூறல், கொடையைக் கூறல், பகையை அழித்தல், தனி ஒருவரை வென்று வாகை சூடல், புண்பட்டோர்க்கு உதவல், கப்பத்தை விலக்கல் ஆகிய துறைகளை உடையது. (புறத்.நூ.8).*

**மலர் (35) அந்தப் பொற்காலம்**

*உழிஞைத் திணையின் சிறப்பு இத்தலைப்பில் விளக்கப்பட்டுள்ளது. கோட்டை முற்றுகைப் போரை உழிஞைத் திணை குறிப்பிட்டுள்ளது. பகைவனைக் கொல்லும் வாளைத் தெய்வமாகப் போற்றுவதைப் பொற்காலமாகக் கலைஞர் குறிப்பிட்டுள்ளார்.*

*"குடையும் வாளும்" என்று தொடங்கும் புறத்திணை நூற்பா எடுத்தாளப்பட்டுள்ளது.*

**மலர் (36) எருமைமறம்**

*தும்பைத் திணையின் சிறப்பு இத்தலைப்பில் விளக்கப்பட்டுள்ளது. வீரத்தை மையமாகக் கொண்டு போரிடும் தன்மையை,*

**மைந்து பொருளாக வந்த வேர் தனைச்**

**சென்று தலையழிக்கும் சிவப்பிற் றென்ப (புறத்.நூ.15)**

*என்ற நூற்பா சுட்டியுள்ளது.*

*வீரத்தால் வீரன் பெற்ற நிலையை,*

**கணையும் வேலும் கணையுற மொய்த்தலின்**

**சென்ற உயிரின் நின்றயாக்கை**

**இருநிலம் தீண்டா அருநிலை வகையோடு**

**இருபாற் பட்ட ஒரு சிறப்பின்றே (புறத்.நூ.16)**

*என்ற நூற்பா சுட்டியுள்ளது.*

*தன் தலைவனுக்கு ஆபத்து என்றுணர்ந்த வீரனொருவன் தனியே சென்று பகைவர்களை வென்று தானும் மடிகின்றான். தனித்துச் சென்று எதிர்த்துப் போராடும் துறை "எருமை மறம்" என்றழைக்கப்படும். தனித்துச் சென்று போரிட்டு மாண்ட வீரனை மன்னர்கள் பாராட்டத் தயங்கவில்லை. தும்மைத் திணை பன்னிரெண்டு துறைகளை உடையது. (புறம். நூ.19).*

**மலர் (37) வாகைத்திணை**

*ஆரியரின் வருகையைத் தொல்காப்பியர் தம் இலக்கணத்தில் குறிப்பாகச் சுட்டியுள்ளதைக் கலைஞர் எடுத்துரைத்துள்ளார். வாகை என்பது போரில் மட்டுமல்ல வாழ்வில் வெற்றியடைவதையும் குறிப்பதாகும்.*

*புறத்திணையில் அமைந்துள்ள 20 ஆம் நூற்பா ஆசிரியரின் சிறப்பைச் சுட்டியுள்ளது. இந்நூற்பாவில் சுட்டப்பட்டுள்ள கேட்டலும், கேட்டலும், கேட்பித்தலும் தமிழ் நிலத்துக்கு வித்தியாசமானவை. வேள்வியும், யாகமும் தமிழ் மன்னர்களை மயக்கின. வேதமந்திரம் வீரனையும் வீழ்த்தியது. மாடலமறையன் என்னும் ஆரிய குருநாதரின் அறிவுரையில் சேரமன்னன் வடவர்களை விடுதலை செய்தான். வாகைத்*

திணையை ஆரியர் வருகை திணை என்றால் அற்புதமாய்ப் பொருந்தும்[14] என்ற கலைஞரின் கருத்துச் சிந்திக்கத்தக்கது.

**மலர் (38) இருளிலும்ஒளி**

வடநாட்டவர் மரபு தமிழரிடையே நுழைந்தபோதும், தமிழர்கள் தம் மரபை விடாது வாழ்ந்ததை வாகைத்திணையின் 21 நூற்பா எடுத்துரைத்துள்ளதைக் கலைஞர் விளக்கியுள்ளார்.

குளிர்காலத்தில், கோடையில் பாசறையில் போர்ப்பயிற்சி செய்தல், விளைச்சல் வெற்றியை உழவர்கள் கொண்டாடல், வெற்றிக் களிப்பில் வீரர்களோடு வேந்தன் குரவைக் கூத்தாடல், விரலியரின் நாட்டிய விருந்து, வஞ்சினம் கூறியவரை வாழ்த்தல், பகைவரிடமும் அன்பு பாராட்டல், மன்னரை மக்கள் போற்றல், சூளுரைப்பு, தவறிழைத்தோரை மன்னித்தல், கொடை வழங்கல் அரண்மனையின் அதிகாரங்களைத் துறந்து மக்களோடு மன்னன் இணைவது ஆகிய உள்ளீடுகளைக் கொண்டது வாகைத்திணை.

**மலர் (39) காஞ்சித்திணை**

அவலச்சுவை நிறைந்தது காஞ்சித்திணையின் துறைகளைப் புறத்திணையின் 24 நூற்பா சுட்டியுள்ளது.

காஞ்சி என்றதும் கலைஞருக்கு, தன் தலைவனான அண்ணா நினைவு வருகின்றது.

தனிப்பொழுதைக் காஞ்சிக்கே தந்து நெஞ்ச
இனிப்புடனே காலம் கழிப்பவன் நான்[15]

என்ற அடிகள் கலைஞர் நெஞ்சத்தில் வாழும் அண்ணாவைக் குறிப்பாகச் சுட்டியுள்ளது.

**மலர் (40) தமிழ் வழி தனிவழி**

தமிழரின் பெருமையை உணர்த்தும் முகமாக இத்தலைப்பினைக் கலைஞர் படைத்துள்ளார். களவு கற்பு என்ற நெறிமுறை கண்டவர் தமிழர். தொல்காப்பியர் கூறும் எண்வகை மணத்தில் ஒரு சிலவே தமிழர்க்குப் பொருந்தும். எண்வகை மணத்துள் பல குறையுடையன என்பது கலைஞரின் கருத்தாகும். பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வீக மணம், காந்தர்வம், அசுரம், இராக்கதம், பைசாசம் ஆகியவை எண்வகை மணங்கள்.

ஒருவன் ஒருத்திக்கு இடையே தோன்றும் உறவை, கைக்கிளை, அன்பின் ஐந்திணை, பெருந்திணை என்று மூவகையில் தமிழ்ச்சான்றோர் அடக்கிக் கூறுவர். வடநாட்டவர் எண்வகையில் கூறுவர். தொல்காப்பியர் காலத்தே வடவர் நாகரிகம் பரவத் தொடங்கியதால் எண்வகை என்று கூறும் நிலை ஏற்பட்டது.

இன்பமும், பொருளும், அறனும், அன்பும் கலந்ததே அன்பின் ஐந்திணை. இம்மண அமைவினை மறையோர் எண்வகையாகக் கூறுவர் என்பதை,

> இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
> அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
> காமக் கூட்டம் காணுங்காலை
> மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
> துறையமை நல்யாழ் துணைமையோர் இயல்பே (களவு.நூ.1)

என்ற நூற்பா விளக்கி உள்ளது. இந்நூற்பாவிற்குக் கலைஞர் வெள்ளை வாரணம் அவர்களின் உரையை எடுத்தாண்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**மலர் (41) தெய்வமகள் இவன் யாரோ?**

பெண்ணை நேரில் பார்த்த ஓர் ஆடவன், அவள் தெய்வீகப் பெண்ணோ? என்று ஐயுற்றான். அவள் உடலில் ஏற்படும் மாறுபாட்டையும், பூவாடலையும், கண்ணசைவையும் கண்டு அவள் மண்ணுலக மடந்தையே என்று உணர்கின்றான் என்பதை,

> வண்டே இழையே வள்ளிப் பூவே
> கண்ணே அலமலரல் இமைப்பே அச்சமென்று
> அன்னவை பிறவும் ஆங்கு அவண்நிகழ
> நின்றவை களையும் கருவி என்ப (களவு.நூ.4)

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

**மலர் (42) விழியாலே மொழிபேசி**

உண்மை காதல் உடல் சேர்வதல்ல, உள்ளம் சேர்வதுதான். ஆடவன் விருப்பத்தை உணர்த்தி, குறிப்பைக் காட்டி பெருமையை வலிமையைக் கூறி, பெண்ணின் மனத்தில் காதலை இடம்பெறச் செய்வான். பெண்ணிற்கு அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு ஆகிய குணங்கள் அவளை முடிவெடுக்கவிடாது என்பதை,

> நாட்டம் இரண்டும் அறிவுஉடம்படுத்தற்குக்
> கூட்டி உரைக்கும் குறிப்புரை யாகும் (களவு. நூ.5)
> குறிப்பே குறித்தது கொள்ளதுமாயின்
> ஆங்கவை நிகழும் என்மனார் புலவர் (களவு. நூ.6)
> பெருமையும் உரனும் ஆடூஉ மேன (களவு.நூ.7)

அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த
நிச்சமும் பெண்பாற் குரிய (களவு. நூ.98)

போன்ற நூற்பாக்கள் எடுத்தாளப்பட்டுள்ளன.

**மலர் (43) காதலால் கசிந்துருகி**

காதல் உணர்வால் பெண்படும் பாட்டிற்கும் இலக்கணம் வகுத்தவர் தொல்காப்பியர்.

விருப்பம் கொள்ளல், தலைவனை எண்ணல், உடல் மெலிதல், உரியன கூறல், நாணத்தைக் கடத்தல் அனைத்திலும் தலைவனைக் காணல், பித்தாதல், மோகித்தல், சிந்தனைப் படிகளைத் தாண்டியும் நோக்கம் நிறைவேறவில்லை எனில் சாக்காடே எஞ்சம் என்பதை,

வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்
ஆக்கம் செப்பல் நாணுவரை இறத்தல்
நோக்குவ எல்லாம் அவையே ஆதல்
மறத்தல் மயக்கும் சாக்காடு என்று அச்
சிறப்புடை மரபின் அவை களவு என மொழிப (களவு.நூ.9)

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

**மலர் (44) எரிந்தது ஈர விறகு**

தலைவியைக் கண்ட தலைப்பின் அவளை அடைவதற்குரிய படிநிலைகளை,

மெய்தொட்டுப் பயிறல், பொய்பாராட்டல்
இடம் பெற்றுத் தழாஅல் இடையூறு கிளத்தல்
நீடுநினைந்து இரங்கல், கூடுதல் உறுதல்
சொல்லிய நுகர்ச்சிவ வல்லே பெற்றுழித்

தீராத் தேற்றம் உளப்படத் தொகைஇப்

பேராச் சிறப்பின்... (களவு.நூ.11)

என்ற நூற்பா சுட்டுவதாகக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார். ஈரநெஞ்சுடைய குளிர்ச்சி பொருந்திய தலைவி, தலைவனது விருப்பத்திற்கிணங்க அவனோடு இணைய இசைவதால், ஈர விறகு எரியத் தொடங்கியது என்பதால் ஈர விறகு என்று கலைஞர் தலைப்பிட்டுள்ளார்.

**மலர் (45) நாணமா? மானமா?**

பெண்ணிற்கு உயிரைவிடச் சிறந்தது நாணம், நாணத்தைவிடச் சிறந்தது கற்பு என்ற தமிழர் கொள்கையைத் தொல்காப்பியர்,

உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்

செயிர்தீர் காட்சிக் கற்பு சிறந்தன்று

.......... (களவு. நூ.22)

என்று இலக்கணம் படைத்துள்ளார். மென்மையான பெண்ணொருத்தி, தன் நாணத்திற்கும், கற்பிற்கும் இடையூறு செய்யும் கயவன் ஒருவனை வீறு கொண்டு தாக்கியதாக ஒரு சித்திரத்தைக் கலைஞர் தீட்டியுள்ளார்.[16]

**மலர் (46) இருபொருள் ஒரு விளக்கம் 1**

தமிழர்கள் நாள்கோள் பார்த்துத் திருமணம் செய்யவில்லை. வடநாட்டவரின் மரபுகளுடன் சேர்ந்து பின்னாளில் நான் கோள் பார்க்கும் நிலை ஏற்பட்டது.

......... ஓரை யும்நாளும் (களவு.நூ.44)

என்ற நூற்பாவில் வரும் ஓரை என்ற சொல்லிற்கு நச்சரும், இளம்பூரணரும் நன் நேரம் என்று பொருள் கொண்டனர். வெள்ளைவாரணார் இச்சொல்லுக்கு விழாவும், விளையாட்டும் என்று பொருள் கொண்டார்[17] என்பதைக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார்.

கனவுகளை வைத்து, தலைவியைக் காண வரும் தலைவன் காட்டு வழிப்பாதை கடுமையையோ, விலங்குகளால் ஏற்படும் தொல்லை களையோ, தொலைவையோ எண்ணி, சந்திக்காமல் இருப்பதில்லை என்பதை,

ஆற்றினது அருமையும் அழிவும், அச்சமும்
ஊறும் உளப்பட அதனோரன்ன (களவு.நூ.45)

என்ற நூற்பா சுட்டியுள்ளது. தமிழர்களின் களவு நெறி வடநாட்டவர் மரபிலிருந்து வேறுபட்டது என்பதை உணர்த்த இந்நூற்பாவைக் கலைஞர் கையாண்டுள்ளது நினைக்கத்தக்கது.

**மலர் (47) கற்பியல்**

கரணம் என்பதைக் கற்பியல் திருமணம் என்று குறிப்பிட்டுள்ளது. கொளற்குரிய மரபின் கிழவன் கிழத்தியைக் கொடைக்குரிய மரபினர் கொடுக்கக் கொள்வதும் கொடுப்பாரின்றியும் உடன்போக்கில் திருமணம் நிகழும் என்பதை,

கற்பு எனப்படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே (கற்பு.நூ.1)

கொடுப்போர் இன்றியும் காரணம் உண்டே
புணர்ந்து உடன் யோகிய காலையான (கற்பு.நூ.2)

என்ற நூற்பாக்கள் சுட்டியுள்ளன.

மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்
கீழோர்காகிய காலமும் உண்டே (கற்பு.நூ.3)

என்ற நூற்பாவில் வரும் மூவர் அந்தணர் அரசர் வணிகர் ஆகியோரவர் என்றும் கீழோர் என்ற சொல் நாலாம் வருணத்தவராகிய வேளாண் மக்களையும் குறிப்பதாக இளம்பூரணர் சுட்டியுள்ளார். கலைஞர்

அவர்கள் குலத்தால் பிரிக்கவில்லை என்று கூறி மூவர் என்ற சொல் மூவேந்தர்களையும், கீழோர் என்ற சொல், அவர்களது கோலின் கீழ் வளரும், மக்களையும் குறிக்கும் என்ற வெள்ளைவாரணரின் உரை விளக்கத்தை எடுத்தாண்டுள்ளார்.[18]

**மலர் (48) அய்யர் யாத்தனர்கரணம்**

களவு வாழ்வு உலகில் மணவாழ்வில் நிறைவுறும் என்பதை,

**அம்பலும் அலரும் களவு வெளிப்படுதலின்**
**அங்கு அதன் முதல்வன் கிழவனாக்கும் (கற்பு.நூ.48)**

அவ்வாறு நடைபெறும் மணம் வெளிப்படையாகவும், மறைமுக மாகவும் நடைபெறல் உண்டு என்ற மரபை,

**வெளிப்பட வரைதல், படாமை வரைதல் என்று**
**ஆயிரண்டெண்ப வரைதல் ஆறே (கற்பு.நூ.49)**

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

திருமணம் போன்ற காரணம், கனவு வாழ்வில் பொய்யும், குற்றமும் தோன்றியதால் தான் என்பதை,

**பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**
**அய்யர் யாத்தனர் கரணம் என்ப (கற்பு. நூ.4)**

என்ற நூற்பா விளக்கியுள்ளது. இந்நூற்பாவில் வரும் அய்யர் என்ற சொல் தலைமைச் சிறப்புடைய பெரியோரைக் குறித்து வழங்கும் தனிச்சொல் என்பது வெள்ளை வாரணரின் உரையாகும்.[19] இவ்வகைக் கருத்தைக் கலைஞர் ஏற்றுக் கொண்டுள்ளார்.

**மலர் (49) களவும் கற்பும்**

கற்பு வாழ்வில் நடைபெறும் செயல்பாடுகளைக் கற்பியல் 5 ஆம் நூற்பா விளக்கியுள்ளதைக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார். கற்பு வாழ்க்கையின் போது களவு கால வாழ்க்கை நினைத்துப் பாடுவதால் இப்பகுதிக்குக் களவும், கற்பும் என்று கலைஞர் தலைப்பிட்டுள்ளது நயம்மிக்கது.

**மலர் 50/51/52 குடும்பவிளக்கு குமரர் கதை**

**ஒரு பெண்ணின் வெற்றி**

கற்பு வாழ்வில் வாழும் தலைவிக்கு ஊடல் தோன்றும் நிலைகளைக் கற்பியலின் 5 ஆம் நூற்பாவும், இத்தலைப்பில் 6 ஆம் நூற்பாவும் எடுத்தாளப்பட்டுள்ளது. ஊடல் தோன்றும் வாயில்களைக் கற்பியலின் 5 ஆம் நூற்பா எடுத்தாளப்பட்டுள்ளது.

**மலர் (53) சுற்றுலா**

கற்பு வாழ்வில் மனைவி மக்களொடு சுற்றுலா செல்லும் வழக்கும் அன்றும் இருந்தது என்பதை,

> யானும் குளனும் கனவும் ஆடிப்
> பதியிகந்து நுகர்தலும் உரியஎன்ப (கற்பு.நூ.50)

என்ற நூற்பாவைக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார்.

**மலர் (54) களத்தில் வீரன்**

களம் கண்ட வீரன், போர்க்களத்தில் தன் காதல் தலைவியை எண்ணுவதில்லை. கடமையே கண்ணாகக் கொண்டிருப்பான். அவன் பெறும் வெற்றி அவனது கடமை உணர்வை வெளிப்படுத்தும் என்பதை,

கிழவி நிலையே வினையிடத்து உடையார்

வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும் (கற்பு.நூ.45)

என்ற நூற்பாவைக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார்.

**மலர் (55) போரில் மகளிர்**

மெல்லிய இயல்புடைய மகளிர் போரில் பயன்படுத்துவதில்லை என்றாலும், பாசறைகளில் மகளிர் இருந்துள்ளனர் என்பதை,

எண்ணரும் பாசறைப் பெண்ணொடு புணரார் (கற்பு.நூ.34)

புறத்தோர் ஆங்கன் புரைவதென்ப (கற்பு.நூ.35)

என்ற நூற்பாக்கள் சுட்டியுள்ளன.

**மலர் (56) புரவியும் பறவையும் தோற்கும்**

வினைமுடித்து வரும் தலைவனின் மனம், குதிரையைவிட, பறவையை விட விரைந்து செல்லும் என்பதை,

வினையின் பிரிந்தோன் மீண்டு வரு கனவை

இடைச்சுர மருங்கில் தவிர்தல் இல்லை

உள்ளம் போல் உற்றுழி உதவும்

புள் இயல் கலிமா உடைமை யான் (கற்பு.நூ.34)

என்ற நூற்பா விளக்கியுள்ளது. வினைமுடித்து வரும் தலைவன் இடையில் எங்கும் தங்கி உறங்குவதில்லை என்ற மரபை இத்தலைப்பினுள் கலைஞர் சுட்டியுள்ளது நினைக்கத்தக்கது.

**மலர் (57) பேறு எது?**

இன்பமான இல்லற வாழ்வு வாழ்ந்து மக்கள் உற்றார் அனைவரும் சூழ்ந்திருக்க, அறவழி ஒன்றே இல்லறவழி என்று அமைதியுறுவது வாழ்வின் பேறு என்பதை,

காமம் சான்ற கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே (கற்பு.நூ.51)

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

**மலர் (58) ஒருபாற் கூற்று**

இன்ப, துன்பங்கள் மீளும்போது அஃறிணைப் பொருள்களை உயிருடன் உணர்வும் உடையதாக எண்ணி பேசும் கூற்றும் உண்டு என்பதை, பொருளியல் 2ஆம் நூற்பா விளக்குவதைக் கலைஞர் கையாண்டுள்ளார்.

**மலர் (59) உள்ளம் என்ன உரைத்தது?**

பிரிந்து சென்ற தலைவன் வாராதலால் உடலும், உள்ளமும் வாடும் தலைவி அவனைச் சேரேன் என்ற முடிவுக்கு வருவாள் என்பதை,

உடம்பும் உயிரும் வாடியக் காலும்
என் உற்றனகொல் இவைஅனின் அல்லது
கிழவோன் சேர்தல் கிழவிக்கு இல்லை (பொரு.நூ.9)

என்ற நூற்பாவும்,

தலைவியின் மனம் தலைவனை வெறுப்பது போல் வெளி உலகிற்குக் காட்டினாலும், தலைவனைக் காணவே துடிக்கும் என்பதை,

ஒரு சிறை நெஞ்சமொடு உசாவுங் காலை
உரியதாகலும் உண்டென மொழிப (பொரு.நூ.10)

என்ற நூற்பாவும் விளக்கியுள்ளன.

**மலர் (60) மகளிர் மாண்பு**

*தொல்காப்பியத்தில் வரும் பொருளியலில் வரும் நூற்பாக்கள் பெண்ணின் பண்புகளைக் கூறியுள்ளதே ஒழிய அறிவுரை ஆணைகள் பிறப்பிக்கவில்லை என்பது கலைஞரின் எண்ணம்.*[20]

*பெண்மையின் சிறப்பை,*

செறிவும், நிறைவும், செம்மையும், செப்பும்
அறிவும் அருமையும் பெண்பாலான (பொரு.நூ.15)

*என்ற நூற்பா விளக்கி உள்ளது. இந்நூற்பாவிற்கேற்ப இந்நூற்றாண்டில் பல்துறையில் பெண்கள் பெற்ற இடத்தினைக் கலைஞர் இத்தலைப்பினுள் குறிப்பிட்டுள்ளார்.*[21]

**மலர் (61) நரியை நனையாமல்**

*தலைவியைத் தலைவன் மணமுடிக்கக் காலம் கடத்தும் நிலையறிந்த தோழி, தலைவியைச் சந்திக்க வரும்போது வழிகளின் ஊறு நினைத்துக் கவலைப்படுவதாகக் கூறும் நிலையைப் பொருளதிகார 16 ஆம் நூற்பா சுட்டியுள்ளதைக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார். தலைவன் மீது அக்கறை உள்ளதைப் போல் பேசி, தலைவி மீது அவன் அக்கறை கொள்ளாமல் இருப்பதைத் தோழி கூறுவதால் 'நரியை நனையாமல்' என்ற தலைப்பைக் கலைஞர் அமைத்துள்ளார்.*

**மலர் (62) சொல்லுங்கள் கேட்கிறோம்**

*உயர்ந்தோராக இருந்து அவர்தம் கூற்று வழக்கு வழிபடுதலின் அவ்வாறு வழக்குபடுதலைச் செய்யுங்கள் என்பதை,*

உயர்ந்தோர் கிளவியும் வழக்கொடு புணர்தலின்
வழக்கு வழிபடுதல் செய்யுட்குக் கடனே (பொரு.நூ.23)

*என்ற நூற்பா விளக்கியுள்ளது.*

நச்சர், "உயர்ந்தோர் கூற்று வேதநெறியோடு கூறுவதால்" என்று பொருள் கொண்டது பிழையானது என்ற வெள்ளைவாரனாரின் உரையைக் கலைஞர் எடுத்துரைத்துள்ளார். இழிசொற்கள் செய்யுளின் கண்வரக்கூடாது என்பதே உண்மை.

**மலர் (63) நாணம் எனும் உயிர்ப்பண்பு**

நாணம் என்பது ஆடவரைக் கண்டு தலைக்குனிவதல்ல. மக்களின் உயிர்ப்பண்பு அகமும், புறமுகமாகிய பொருள்களைச் சேர்த்து, நாணத்தைப் போற்றி வாழ்தல் வேண்டும் என்பதை,

> மிக்க பொருளினும் பொருள்வகை புணர்க்க
> நாணுதலைப் பிரியா நல்வழிப்படுத்தே (பொரு.நூ.27)

என்ற நூற்பா சுட்டியுள்ளது. தாழ்நிலை வந்தால் வருவது நாணம். தாழ்நிலை வாராமல் வாழ்வதே அறநெறி. அந்நாணம் அறப்பொருள் இன்பத்தோடு இணைத்துக் கூறவேண்டும் என்பது தொல்காப்பியரின் எண்ணம்.[22]

**மலர் (64) இன்பம் எங்கே?**

அறம், பொருள், இன்பம் என்பதில் இன்பம் எனப்படும் உணர்வு, ஒருவரை ஒருவர் அன்பினால் பொருந்தி, ஆணும், பெண்ணும் நுகர்வதே சிறப்பு என்பதை,

> எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
> தான் அமர்ந்து வரூஉம் மேவறிதாம் (பொருள்.நூ.29)

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

இந்நூற்பாவிற்கு மக்களும், தேவரும், நரகரும் என்று உரைகண்ட நச்சரின் உரை உண்மைக்கு மாறுபட்டது என்பது கலைஞரின் எண்ணம்.[23]

**மலர் (65) விடை கிடைக்குமோ?**

தலைவி கூற்று நிகழ்விடங்களைப் பொருளதிகார நூற்பா 31 குறிப்பிட்டுள்ளதைக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார். களவு வெளிப்பட்ட பிறகு வரைவு நீட்டிக் கூடாது என்ற தலைவியின் தவிப்பைக் கலைஞர் நாடகப்பாணியில் படைத்துள்ளது நயம்மிக்கது.

**மலர் (66) உயர்வும் பணிவும்**

பேராண்மை மிக்க ஆடவனாயினும் மனைவியின் ஊடலைத் தீர்க்க அடிபணிந்துதான் ஆகவேண்டும் என்பதை,

மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையும் காலை புலவியுள் உரிய (பொரு.நூ.33)

என்ற நூற்பா சுட்டியுள்ளது. ஆடவன் ஊடலில் பணிவது இயல்பெனினும், இராவணன் ஊடலின்போது கூட பணியாதவன் என்று அவனைக் கலைஞர் சிறப்பித்துக் கூறியுள்ளார்.[24]

**மலர் (67) மெய்யன்பர் அறியாத மெய்!**

தமிழ் அகப்பாட்டில் "இறைச்சி" என்ற பொருண்மை நுட்பமானது. இறைச்சி என்பது குறிப்புப் பொருளை உணர்த்தும் வெளிப்படக் கூறப்படும் கருப்பொருளின் புறத்ததாகத் தோன்றும் என்பதை,

இறைச்சித்தானே பொருள் புறத்ததுவே (பொரு.நூ.35)

என்ற நூற்பாவும்,

கருப்பொருளின் புறத்துப் பிறக்கும் இறைச்சியில் தனிப்பட்ட குறிப்புப்பொருள் தோன்றும். அக்குறிப்புப் பொருள் திறமையுடையோர்க்குப் புலனாகும் என்பதை,

இறைச் சியிற் பிறக்கும் பொருளுமார் உளவே

திறத்தியல் மருங்கின் தெரியுமோர்க்கே (பொரு.நூ.36)

என்ற நூற்பாவும்,

துன்பம் மீதுர வருந்தும் காலத்தில் அன்பு மிகுதியாவதையும், பொறுமையை வற்புறுத்துவதையும் குறிப்பதே இறைச்சியாகும் என்பதை,

அன்புறு தருந இறைச்சியும் சுட்டலும்

வன்புறை யாகும் வருந்திய பொழுதே (பொரு.நூ.37)

என்ற நூற்பாவும் சுட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது. இறைச்சி என்ற சொல்லை வைத்து ஒரு சிறு கேலி நாடகத்தை இத்தலைப்பினுள் கலைஞர் படைத்துள்ளார்.

**மலர் (68) மாறும் மதிப்பு**

சினம், பேதைமை, பொறாமை, வறுமை ஆகியவை வேண்டத்தகாதவை எனினும் இடத்திற்கேற்ப சிறப்பாகவும் அமைவதுண்டு என்பதை,

சினனே பேதமை, நிம்பிரி நல்குரவு

அனை நால் வகையும் சிறப்பொடு வருமே (பொரு.நூ.51)

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

**மலர் (69) மன உணர்வினால் மட்டுமே**

வெளிக்காட்ட இயலாது, மன உணர்வினால் மட்டும் அறியக் கூடியவற்றை,

ஒப்பும் உருவும் வெறுப்பும் என்றா
கற்பும் ஏரும் எழிலும் என்றா
நோயும் வேட்கையும் நுகர்வும் என்றாங்கு
ஆவயின் வரூஉங் கிளவி எல்லாம்
நாட்டியல் மரபின் நெஞ்சு கொளின் அல்லது
காட்ட லாக பொருள் என்ப (பொரு.நூ.53)

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

நாட்டியல் என்பதற்கு இளம்பூரணர் மக்கள் மரபு என்று உரைத்துள்ளதைக் கலைஞர் குறிப்பிட்டுள்ளது நினைக்கத்தக்கது.

**மலர் (70) எட்டுச்சுவை கொட்டும் இயல்**

உடம்பில் நிகழும் மெய்ப்பாடுகள் எட்டு என்பதை,

நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்று
அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப (மெய்.நூ.3)

என்ற நூற்பா சுட்டியுள்ளது. உவகையும், அழுகையும் ஒருத்தாங் மக்கள் ஒருவரையொருவர் நிழல்போல் தொடர்வர்[25] என்று கலைஞரின் தொடர் அவரது உலகியல் அறிவைக் காட்டியுள்ளது. நூற்பாவில் நகைக்கு அடுத்து அழுகை என்ற உணர்வு அமைந்திருப்பது சிந்திக்கத்தக்கது.

**மலர் (71) மெய்ப்பாட்டிற்கு மேலும் ஒரு விளக்கம்**

அகவாழ்வையும், புறவாழ்க்கையும் ஆகிய உலகியல் வழக்கில் தோன்றும். இம்மெய்பாடுகள் புனைந்துரை வகையாகிய நாடக வழக்கிற்கும், புலநெறியான செய்யுள் வழக்கிற்கும் பயன்படுவதாகும்.

இன்பம் நுகரும் விளையாட்டின் கண்தோன்றும் முப்பத்திரண்டு பொருள்களையும் குறிப்பிட்டு அவற்றின் புறத்தே நிகழும் பொருள்கள் பதினொன்றாகும். (மெய்.நூ.1) என்று தொல்காப்பியர் கூறுவதைக் கலைஞர் சுட்டியுள்ளார்.

**மலர் (72) நகை நான்கு**

நகை மெய்ப்பாட்டிற்குரிய நான்கு வகையை,

எள்ளல், இளமை, பேதைமை, மடனென்று
உள்ளப்பட்ட நகை நான்கென்ப (மெய்.நூ.4)

என்ற நூற்பாவும் சுட்டியுள்ளது.

எள்ளல் இளமையிடத்தும், பேதைமை, அறிவின்மையிடத்தும், மடன், உன் மத்த முடையாரிடத்தும் நிகழ்பனவாகும் என்ற கலைஞரின் விளக்கம் சுருக்கமுறையில் அமைந்திருப்பது மகிழத்தக்கது.

**மலர் (73) அழுகை நான்கு**

அழுகைக்குரிய மெய்ப்பாட்டுக் களங்களை
இளிவே இழவே அசைவே வறுமையின்
விளிவில் கொள்கை அழுகை நான்கே (மெய்.நூ.5)

என்ற நூற்பா விளக்கியுள்ளது. இழிவுபடுத்தல், இழப்பை உணர்தல், தளர்ச்சி அடைதல், வறுமை ஆகிய நிலைகளில் அழுகை என்ற மெய்ப்பாடு தோன்றும்.

**மலர் (74) இளிவரல் நான்கு**

மானக் குறைவு ஏற்படும் நிலை இளிவரல் எனப்படும். இவ்விளிவரல் என்னும் மெய்ப்பாடு

மூப்பு, பிணியே வருத்தம் மென்மையோடு

யாப்புற வந்த இளிவரல் நான்கே (மெய்.நூ.6)

என்ற நூற்பாவிற்கு மூப்பு = முதுமை, மென்மை, எளிமை என்று சொற்பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளது.

**மலர் (75) மருட்கை நான்கே**

மருட்கைக்குரிய கலன்களை,

புதுமை, பெருமை, சிறுமை ஆக்கமொடு

மதிமை சாலா மருட்கை நான்கே (மெய்.நூ.7)

என்ற நூற்பா அமைந்துள்ளது. மதிமை, அறிவின் தன்மை, மருட்கை, வியப்பு என்று சொற்பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளது.

மருட்கை அறிவுடைய பெருமக்களைத் தவிர்த்து மற்றோர்க்கு உரியது என்பதைக் கலைஞர் சுட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது.

**மலர் (76) அச்சம் நான்கு**

அச்சம் தோன்றும நினைக்கலன்களை,

அணங்கே, விலங்கே கள்வர் தம் இறை எனப்

பிணங்கல் சாலா அச்சம் நான்கே (மெய்.நூ.8)

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

அச்சம் ஏற்படுத்தும் வரிசையில் இறையும் சேர்க்கப்பட்டுள்ளது. இறை என்ற சொல் இறைவனைக் குறிப்பதாக உரையாசிரியர்கள் உரைத்துள்ளனர். தம் இறை என்று இருப்பதை தம்மிறை எனப் பொருள் கொண்டால், தான் செய்த குற்றத்திற்காக அச்சம் கொள்வது நாட்டு நடப்புத் தானே[96] என்ற கலைஞரின் விளக்கம் நினைக்கத்தக்கது.

**மலர் (77) பெருமிதம் நான்கு**

*பெருமிதம் தோன்றும் நிலைக்கலன்களை,*

கல்வி தறுகண், இசைமை கொடை எனச்

சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே (மெய்.நூ.9)

*என்ற நூற்பா சுட்டியுள்ளது. தறுகண், அஞ்சா நெஞ்சம், இசைமை, புகழ் என்று சொற்பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளது.*



**மலர் (78) வெகுளி நான்கே**

*குடிமக்களின் தொல்லை விளங்கும் வெகுளி,*

உறுப்பறை குடிகோள் அலை கொலை என்ற

வெறுப்ப வந்த வெகுளி நான்கே (மெய்.நூ.10)

*என்ற நான்கின் விளைவுகளாகும்.*

**மலர் (79) உவகை நான்கே**

*உவகை தோன்றும் நிலைக்கலன்களை,*

செல்வம், புலனே, யுணர்வே விளையாட்டு என்ற

அல்லல் நீத்த உவகை நான்கே (மெய்.நூ. 11)

*என்ற நூற்பா சுட்டியுள்ளது. இச்சூத்திரத்திற்குப் பொங்கல் விழாச் சிறப்புக்களைக் கலைஞர் குறிப்பிட்டுள்ளார்.*

**மலர் (80) முதல் நிலை மெய்ப்பாடுகள்**

*இராமாயணம், படைத்த கம்பன், தொல்காப்பிய மெய்ப்பாட்டுச் சிந்தனைகளை, மிதிலை காட்சிப்படலத்தில் அமைத்துள்ளார்.*

*காதல் தோன்றும் நிலைக்கலன்களை,*

புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்

நகுநயம்புரிதல் சிதைவு பிறர்க்கு இன்மையொடு

தகுமுறை நான்முகு ஒன்றென மொழிப (மெய்.நூ.13)

*என்ற நூற்பா சுட்டியுள்ளது. இந்நூற்பா காதல் தோற்றத்தின் முதல் நிலையைச் சுட்டியுள்ளது.*

**மலர் (81) இரண்டாம் நிலை மெய்ப்பாடு**

*காதல் ஏற்பட்ட பெண்ணின் மெய்பாடுகளை*

கூழைவிரித்தல் காதொன்று களைதல்
ஊழ ;ணி தைவரல் உடைபெயர்த் துடுத்தலொடு
கெழீஇய நான்கே இரண்டென மொழிப (நூ.14)

*என்ற நூற்பா சுட்டியுள்ளது.*

**மலர்(82) மூன்றாம் நிலை மெய்ப்பாடு**

*காதலுணர்வின் மூன்றாம் நிலையை,*

அல்குல்தைவரல், அணிந்தவை திருத்தல்
இல்வலி யுறுத்தல் இருகையும் எடுத்தலொடு
சொல்லிய நான்கே மூன்றென மொழிப (நூ.14)

*என்ற நூற்பா சுட்டியுள்ளது.*

**மலர் (83) நான்காம் நிலை மெய்ப்பாடு**

*காதலுணர்வின் நான்காம் நிலையை,*

பாராட்டு எடுத்தல் மடம் தப உரைத்தல்
ஈவமில் துற்றம் ஏற்று அவர் நாணல்
கொடுப்பவை கோடல் உளப்படத் தொகைஇ
எடுத்த நான்கே நான்கென மொழிப (மெய்.நூ.76)

*என்ற நூற்பா சுட்டியுள்ளது. தலைவன் தலைவியின் திருமண உறுதிப்பாட்டினை இந்நூற்பா குறிப்பாகச் சுட்டியுள்ளது.*

**மலர் (84) ஐந்தாம் நிலை மெய்ப்பாடுகள்**

*காதலுணர்வால் தலைவன் தலைவியரின் நெருக்கத்தை,*

தெரிந்துடம் படுதல், திளைப்பு வினை மறுத்தல்

கரந்திடத் தொழிதல், கண்டவழி உவத்தலொடு

பொருந்திய நான்கே ஐந்தெனமொழிப (மெய்.நூ.17)

*என்ற நூற்பா சுட்டியுள்ளது.*

**மலர் (85) ஆறாம் நிலை மெய்ப்பாடுகள்**

*காதல் நிறைவேறும் போதில் உறவுகளைப் பிரிய நேரிடும் அவலத்தால் ஏற்படும் மெய்ப்பாட்டை,*

புறஞ்சொல் சிதைத்தல், புலம்பித் தோன்றல்

கலங்கி மொழிதல், கையறவு உரைத்தலொடு

புலம்பிய நான்கே ஆறென மொழிப (மெய்.நூ.18)

*என்ற நூற்பா சுட்டியுள்ளது. கலக்கும் எண்ணத்தில் தோன்றிய காதல் மெய்ப்பாடு கலக்கத்தோடு நிறைவடைகின்றது.*

**உவமையியல்**

**மலர் (86) உவமை அறிவோம்**

*உவமை தோன்றும் நிலைக்கலன்களை,*

வினைபயன் மெய் உரு என்ற நான்கே

வகைபெற வந்த உவமைத் தோற்றம் (உவமை.நூ.1)

*என்ற நூற்பா சுட்டியுள்ளது.*

*ஒரு பொருளோடு ஒரு பொருளை ஒப்புமைக் கூறி விளக்குவது உவமை. வினை என்றால் செயல். பயன் என்றால் விளைவு. மெய் என்றால் வடிவம். உரு என்றால் நிறம் எனக் கொள்ளப்படும் பார்வைக்குப் புலப்படும் பொருள். புலப்படாப்பொருள் என இரு வகைப்படும்.*

| | | |
|---|---|---|
| சிட்டுப்போல் பறந்தாள் | - | வினை உவமை |
| மழை மேக வள்ளல் | - | பயனுடைமை |
| சங்கணையை கழுத்து | - | வடிவ உவமை |
| பொன்னார் மேனியன் | - | உரு உவமை |
| குழல் போன்ற மொழி | - | செவியால் அறிவது |
| தேன்போல் இனிக்கும் | - | நாவால் அறிவது |
| கோடைவெயிலாய்த் தகிக்கும் | - | மெய்யால் அறிவது |
| மணக்கும் தென்றல் | - | மூக்கால் உணர்வது |

நிலவைக் காணும்போது பானை நிறைய வெண்சோறு இருப்பது போல் இன்பம் தோன்றியது என்ற பாரதிதாசன் பாடல் மனத்தால் உணரும் இன்பமாகும் என்று கலைஞர் விளக்கியுள்ளார்.

மேற்கூறிய உவமைகள் ஒரே பொருளில் வருவதன்றி இரண்டும் பலவும் கலந்துவரும் என்பதை,

**விரவியும் வரூஉம் மரபின என்ப (உவமை.நூ.2)**

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

**மலர் (87) உவமையின் சிறப்பு**

உவமையின் சிறப்பால் உவமிக்கப்படும் பொருள் சிறப்படையும் என்பதை,

**உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை (வினா.நூ.3)**

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

உவமிக்கப்படும் பொருளைவிட உவமை சிறப்பானதாக இருத்தல் வேண்டும் என்பது தொல்காப்பியர் சுட்டும் உவமைநெறி.

**மலர் (88) உவமை நிலைக்களம்**

உவமை, சிறப்பு, நலன், காதல், வலிமை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டது என்பதை,

> சிறப்பே நலனே காதல் வலியோடு
> அந்நாற் பண்பும் நிலைக்கள மென்ப (உவமை.நூ.9)

என்ற நூற்பா சுட்டியுள்ளது. இந்நூற்பாவிற்குக் கலைஞர் தனது ரோமாபுரி பாண்டியன் என்ற நாவலிலிருந்து உவமைகளைச் சான்றாக்கியுள்ளார்.

**மலர் (89) ஐந்தாம் நிலைக்களன்**

முன்னர் குறித்த நால்வகை இன்றி இழிவுப் பொருளையும், உவமையாக்கும் நிலை ஐந்தாவதாக உண்டு என்பதை,

> கிழக்கிடு பொருளோ டைந்து மாகும் (உவமை. நூ.5)

என்ற நூற்பா சுட்டியுள்ளது.

கிழக்கிடு பொருள் என்றால், இழிவான, தாழ்வான பொருள் எனப்படுவதாகும்.[28]

**மலர் (90) காக்கையும் மயிலும்**

உவமையும், பொருளும் படிப்போர் அல்லது கேட்போர் மகிழ்ந்து ஏற்குமளவிற்கு ஒத்தனவென்று அமைந்திட வேண்டும். எடுத்துக்கொண்ட பொருளுக்கு ஏற்புடையனவாகக் கூறல் வேண்டும் என்பதை,

> உவமமும் பொருளும் ஒத்தல் வேண்டும் (உவமை.நூ.8)

என்ற நூற்பாவால் விளக்கியுள்ளார்.

**மலர் (91) உருவகமா? உவமையா?**

உருவகமும், உவமையின் பாற்பட்டது. பிற்காலத்தவர் உருவக அணி என்று தனியாகக் கூறினர். இக்கருத்து தொல்காப்பியத்திற்கு ஏற்புடையதல்ல என்பதை,

> பொருளேயுமஞ் செய்தனர் மொழியினும்
> மருளறு சிறப்பி ; துவமமாகும் (உவமை. நூ.9)

என்ற நூற்பா சுட்டியுள்ளது. இந்நூற்பாவில் வரும் பொருள் என்பதும், அஃது என்பதும் உவமேயத்தையே குறிப்பன.[29] உவமேயம் = உவமிக்கப்படும் பொருள்.

**மரபியல்**

**மலர் (92) வெள்ளை வாரணார் விளக்கம்**

மரபியலுக்கு வெள்ளைவாரணாரின் கருத்து கொடுக்கப் பட்டுள்ளது. இரு திணைப்பொருள் குணனாகிய இளமை, ஆண்மை, பெண்மை, உயர்திணையின் நான்கு சாதிகள், அஃறிணை, மரபு, உலகியல் நூல் - இவை எல்லாம் மரபெனப்படும்.

கீரி, பூனை, எலி, அணில் ஆகியவை இளமையில் குட்டி என்று அழைக்கப்படும் என்பதை,

> மூங்கா வெருகு எலி, மூவரி அணிலொடு
> ஆங்கு அவை நான்கும் குட்டிக்குரிய (மரபு.நூ.6)

என்ற நூற்பா சுட்டினாலும் வழக்கில் கீரிக்குட்டி, எலிக்குட்டி என்று அழைப்பதில்லை. பூனையை மட்டும் தான் குடடி என்று அழைக்கின்றோம். கால வழக்கு மாறுதலை இச்சொல் உணர்த்தியுள்ளது.

உயர்திணையில் நால்வகை சாதி என்பதை வெள்ளைவாரணர் மறுத்துள்ளார். மரபியலில் 71 முதல் 85 முடிய உள்ள 15 சூத்திரங்கள் இடைச்செருகல் என்பது அவர் கருத்து என்பதைக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார்.[30] வருணத்தைப் பற்றிய நம்பிக்கையைப் பிற்காலத்தில் பெற்ற தமிழ் மக்கள் உள்ளத்தில் இடைச்செருகலை உணராத இளம்பூரணரும், பேராசிரியரும் தொல்காப்பியர் கருத்தாகவே எண்ணி உரை படைத்துவிட்டனர்.[31]

**மலர் (93) அன்றே வளர்ந்திருந்த அறிவியல்**

தொல்காப்பியம் ஒரு வரலாற்றுப் பெட்டகம், ஓரறிவு முதல் ஆறறிவு வரையான உயிர்களை மரபியலின் 27ஆம்நூற்பா சுட்டியுள்ளது.

| | |
|---|---|
| தொடுஉணர்வுடையது | ஓரறிவு |
| நாவைப் பெற்றது | ஈரறிவு |
| மூக்கு பெற்றது | மூவறிவு |
| கண் பெற்றது | நாலறிவு |
| செவி பெற்றது | ஐயறிவு |
| மனம் பெற்றால் | ஆறறிவு |

புல்லும், மரமும் ஓரறிவு உயிர்கள். தாவரங்கள் பற்றிய அறிவியல் சிந்தனையை,

> **புல்லும் மரமும் ஓரறிவினவே**
> **பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (மரபு.நூ.28)**

என்ற நூற்பா உணர்த்தியுள்ளது.

ஈரறிவுப் பட்டியலை,

> **நந்தும் முரளும் ஈரறிவினவே (மரபு.நூ.29)**

என்ற நூற்பாவும்,

மூவறிவுப் பட்டியலை

சிதலும், எறும்பும் மூவறிவினவே (மரபு.நூ.30)

நண்டும், தும்பியும் நான்கறிவுடையவை. விலங்கும், பறவையும் ஐந்தறிவு உடையவை. மக்கள் ஆறறிவு உடையோர். ஆறறிவில் குறைந்தால் அதற்கு இலக்கணம் பொறுப்பல்ல என்ற எள்ளல் உணர்வுடன் இத்தலைப்பைக் கலைஞர் நிறைவு செய்துள்ளார்.

**மலர் (94) வழக்கில் இருந்தது**

அகராதியில் மட்டும் வாழும் சொற்கள் பல உண்டு. ஆண் ஆடு என்ற உயிருக்குரிய சொற்களைத் தொல்காப்பிய மரபியலின் 48ஆம் நூற்பா

மோத்தையும் தகரும் உதனும், அப்பரும்
யாத்த என்ப யாட்டின் கண்ணே

என்று சுட்டியுள்ளது.

நாளடைவில் அப்பர் என்ற சொல் வழக்கிழந்தது என்று பேராசிரியர் குறிப்பிட்டுள்ளதைக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார்.

அப்பரடிகள் தொல்காப்பியரிடம் கேட்டுக் கொண்டதற்கு இணங்க இச்சொல்லை நீங்கிவிட்டதாகச் சுவைபட கலைஞர் சுட்டியுள்ளார்.[32]

**மலர் (95) கலைநிகழ்ச்சியும், களிறு பரியும்**

பன்றியையும் களிறு என்று குறிக்கும் மரபை

வேழக் குரித்தே விதந்து களிறு என்றல்
கேழல் கண்ணும் கடிவரை இன்றே (மரபு.நூ.35)

என்றும்,

மானைக் குறிக்கும் கலை என்ற சொல் கருங்குரங்கையும் குறிக்கும் என்ற மரபை,

**கலையென் காட்சி உழைக்கும் உரித்தே**

**நிலையிற்றப் பெயர் முசுவின் கண்ணும் (மரபு.நூ.47)**

என்றும் குறிப்பிட்டுள்ளதைக் கலைஞர் நகைச்சுவை கதையோடு குறிப்பிட்டுள்ளார்.

**மலர் (96) ஐந்து பூதங்கள்**

ஐம்பூதங்களும் கலந்த மயக்கம் இவ்வுலகம் என்பதை,

**நிலம் தீ நீர்வளி விசும்போ டைந்துங்**

**கலந்த மயக்கம் உலகம் ஆதலின்**

**இருதிணை ஐம்பால் இயனெறி வழாமைத்**

**திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும் (மரபு.நூ.9)**

என்ற நூற்பா சுட்டியுள்ளது. பூதங்கள் முறையாகக் கலந்ததுபோல் இருதிணை, ஐம்பால் ஆகியவற்றை மரபுச் சொற்களால் வழங்கினால்தான் சொற்கள் பொருளைச் சிதைக்காமல் பாதுகாக்கும்.

**மலர் (97) உணர்ந்தோர் அறிவர் அறிந்தோர் உணர்வர்**

மரபுநிலை பிறழாமல் செய்யுள் புனைதல் வேண்டும் என்பதை,

**மரபு நிலை திரிதல் செய்யுட்கில்லை**

**மரபு வழிப்பட்ட சொல் லி னான (மரபு.நூ.22)**

என்ற நூற்பா சுட்டியுள்ளது தான் எழுதியதை மரபுக் கவிதை இல்லை என்று கலைஞர் ஒத்துக் கொள்வது அவரது பெருந்தன்மையைக் காட்டுகின்றது.

தான் எழுதியதை, கவிதை ஓவியம் என்று குறிப்பிட்டுள்ளது நினைக்கத்தக்கது.

**மலர் (98) முதல் நூலும் வழி நூலும்**

*வழக்கு என்பது உயர்ந்தோர் சொல்வது என்பதை,*

வழக்கு எனப்படுவது உயர்ந்தோர் மேற்றே (மரபு. நூ.93)

*என்று குறிப்பிட்டுள்ளது.*

*வழி நூல்களை வருவதற்குக் காரணமானது முதல் நூல் என்பதை,*

**வினையின் நீங்கி விளங்கிய அறிவின்**

**முனைவன்கண்டது முதல் நூலாகும் (மரபு.நூ.93)**

*என்ற நூற்பா சுட்டியுள்ளது.*

*வழிநூல், முதல் நூலில் உள்ளவற்றைத் தொகுத்தல், விரித்து நூலாக்கல், தொகுத்தும் விரித்தும் நூலாக்கல், மொழி பெயர்த்தல் என்ற நால்வகைப்படும் (மரபு.நூ.98).*

**மலர் (99) குன்றத்து விளக்காகும்**

*நூலில் வரக்கூடாத குற்றங்களை மரபியலின் 109 ஆம் நூற்பா விளக்கி உள்ளது. நன்னூல் கூறும் நூலுக்குரிய பத்து அழகுகள் எடுத்தாளப்பட்டுள்ளது. இத்தலைப்பில்தான் ஒரு நூற்பா நன்னூலிருந்து கலைஞரால் எடுத்தாளப்பட்டுள்ளது.*

**மலர் (100) நூறாவது மலர்**

*நூலைச் சிறப்படையச் செய்யும் முப்பத்திரண்டு உத்திகளுக்குரிய மரபியலின் 111ஆம் சூத்திரம் எடுத்தாளப்பட்டுள்ளது.*

*வந்தோரை வெறுங்கையுடன் அனுப்புவது தமிழன் பண்பாட்டில் என்ற முறையில் நூறு மலர்களை அள்ளித் தந்திருக்கின்றேன் உங்கள்*

அமுதக் கரங்களில்[34] என்ற தொடரோடு தொல்காப்பியப் பூங்கா நிறைவடைகிறது.

நூறாக ஒரு நூலாக என்னும் தலைப்பில் நூலமைவிற்குரிய காரணங்களையும், எடுத்தாண்ட இயல்களைப் பற்றிய குறிப்பும் தரப்பட்டுள்ளன.

நிறைவாக நூலாக்கத்திற்கு உதவியவர்களுக்கு நன்றியைக் கலைஞர் தொகுத்துள்ளார். கலைஞரின் படைப்புகளின் பட்டியல் இணைக்கப்பட்டுள்ளது.

தொல்காப்பிய இயல்களை நிரல்படக் கூறாமல், தன் சுவைக்கு ஏற்ப அமைந்த இயல்களில் அமைந்த நூற்பாக்களுக்கு விளக்கம் கூறும் முகமாகத் தொல்காப்பியப் பூங்காவைக் கலைஞர் அமைத்துள்ளார். பலவித மலர்கள் நிறைந்துள்ளதைப் பூங்கா என்று வழக்கிற்கு ஏற்ப அங்கொன்றும் இங்கொன்றுமான நூற்பாக்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

உரையாசிரியர்களின் துணையோடு, திராவிட இயக்கக் கொள்கைகளை விளக்கவும், தொல்காப்பியத் தொன்மைச் சிறப்பையும் வெளிப்படுத்தவும், தம் தமிழினப்பற்றைப் புலப்படுத்தவும், கலைஞர் தொல்காப்பியப் பூங்கா என்னும் நூலைப் படைத்துள்ளார். நாடகப் பாங்கு அமைவும், தமிழ் இலக்கிய துணுக்குகளும் நிரம்ப அமைந்துள்ளன.

# தாய்காவியம்

'தாய்' நாவலானது இரஷ்யாவில் நடைபெற்ற தொழிலாளர் பிரச்சினையை மையமாகக் கொண்டு எழுதப்பட்டது. எழுதியவர் அந்நாட்டின் புகழ்பெற்ற எழுத்தாளரான மாக்சிம் கார்க்கி . இக்கதையைக் கலைஞர் வசனக் கவிதை நடையில் காவியமாகப் படைத்துள்ளார்.

### தாய் - காவிய வரலாறும் அமைப்பும்

இரஷ்யாவில் நடைபெற்ற தொழிலாளர் புரட்சியின்போது உண்மையாக நடைபெற்ற நிகழ்வை அடிப்படையாகக் கொண்டு தாய் நாவல் படைக்கப்பட்டுள்ளது. இவர் ஜார் சக்கரவர்த்தியின் கொடுங் கோன்மை ஆட்சியில், ரஷ்புடின் சதியாட்டத்தோடு, பொய்யைத் தொழுதடிமை செய்பவர்கள் செல்வந்தர்களாக வாழ்ந்தார்கள். செம்மையெல்லாம் பாழாகிக் கொடுமையே ஆட்சி முறையாகியது. ஜார் சக்கரவர்த்தி - ஆசியக் கண்டத்திலுள்ள ஜப்பான் நாட்டின் மீது படையெடுத்து, தோல்வி கண்டான்; இக்கொடிய சூழலில் தான் இரஷ்யா நாட்டில் 1904 - 1905 ஆம் ஆண்டில் முதல் இரஷ்யப் புரட்சி நடந்தது. புரட்சிக்குப் பின்னணியாக அமைந்த மக்களின் வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டக்கூடிய சிறுகதைகளையும், நாவல்களையும் மாக்சிம் கார்க்கி எழுதினார். சீரழிந்த சமுதாயத்தில் வாழும் ஏழை, எளிய மக்களை நாகரிக மற்றவர்கள், பண்பாடற்றவர்கள் என்றெல்லாம் எள்ளி நகையாடிய மேட்டுக்குடிச் சிந்தனையாளர்களுக்கு எதிராக எதார்த்த இலக்கியமாகப் படைத்த மனிதன் பிறந்தான். சிகப்பன், தோழன் போன்ற மாக்சிம் கார்க்கியின் சிறுகதைகள் உலகத் தரம் வாய்ந்த படைப்புகள்.

எதார்த்தவாதம் என்பது இருப்பதை அப்படியே புகைப்படம் எடுத்துக்காட்டுவது மட்டுமல்ல; அழியக்கூடிய தீய சக்திகளை அம்பலப் படுத்துவதும், ஆலமரம் போல் நீடித்து வளரும் நல்வித்து எது என்று கண்டுபிடித்து நம்பிக்கையூட்டுவதுமாகும். மறைந்து கிடக்கும் மானிட மாண்புகளையும் - வீரிய சக்தியை வெளிப்படுத்தும் முற்போக்கு இலக்கியப் படைப்புகளையும் கார்க்கி எழுதினார். அவைகளில் முத்தாய்ப்பானது 'தாய்' நாவல்.

கார்க்கி 1904 - 1907 ஆம் ஆண்டுகளில் தாய் நாவலை எழுதினார். தொழிலாளர்களின் போராட்டத்தில் உருவான தலைவர்களே! கதை நாயகர்களாய் படைக்கப்பட்டிருக்கிறார்கள். தாயாகிய நிலோவ்னாவும், மகனான பாவெல் இருவரும் உண்மையான இயக்கத் தலைவர்களின் புனைபெயர்கள். இச்சம்பவங்கள் அனைத்தும் உண்மை நிகழ்ச்சிகள் என்றும், கதாபாத்திரங்கள் மாறுவேடங்களே என்றும் கார்க்கி குறிப்பிட்டிருக்கிறார்.

1940களில் கார்க்கியின் புதினத்தை 'அன்னை' என்ற தலைப்பில் விடுதலைப் போராட்ட இலக்கியவாதி ப.ராமசாமி தமிழாக்கம் செய்தார். முற்போக்கு இலக்கியப் படைப்பாளி தொ.மு.சி.ரகுநாதன் 'தாய்' என்று தமிழாக்கம் செய்தார். இந்நூலைப் பல புகைப்படங்களுடன் மாஸ்கோ முன்னேற்றப் பதிப்பகம் 1970ல் வெளியிட்டது.

"கார்க்கியின் படைப்புகளை டால்ஸ்டாய், பெர்னாட்ஷா, ரொமேன் ரல்லான் போன்ற உலகப் புகழ்பெற்ற எழுத்தாளர்கள் புகழ்ந்து பாராட்டியிருக்கிறார்கள். கார்க்கி தாய் மற்றும் படைப்புகள் வாழ்க்கையில் நம்பிக்கையூட்டுகின்றன என்று பெர்னாட்ஷா பாராட்டியுள்ளார்."[35]

“பனிக்காலத்தின் அழிவிலே, வசந்தப் பிறப்பின் எல்லையிலே, பகல், இரவு சமநாள் நெருங்கும் நேரத்திலே நீங்கள் பிறந்திருக்கின்றீர்கள். பழைய உலகத்தின் அழிவுடனும், புயலிடைப் பிறந்த புத்துலகத்துடனும் இணைந்த உங்கள் வாழ்க்கையைக் காட்டும் ஒரு அறிகுறியாகும் என்று நோபல் பரிசு பெற்ற உலகப்புகழ்பெற்ற எழுத்தாளர் ரொமேன் ரல்லான் மகார்க்கிக்கு எழுதிய கடிதத்தில் பாராட்டியிருக்கிறார்.”[36]

இந்திய முற்போக்கு எழுத்தாளர் கிருஷ்ணசந்தர், “புதிய இலக்கியத்தின் பதாகையில் ஒளிவீசுகிறது. கார்க்கியின் இதயம்; இந்த இதயத்திற்குள்ளே உலகு தழுவிய அமைதி கொலுவிருக்கிறது”[37] என்று குறிப்பிட்டுள்ளார்.

மனித நேயம் கொண்ட முற்போக்கு எழுத்தாளர்கள் சிந்தனையாளர்கள் அனைவரின் பாராட்டுகளையும் பெற்ற மாக்சிம் கார்க்கியின் படைப்புகளில் கலைஞர் அவர்களுக்குள்ள ஈர்ப்பும் உருவாகியிருப்பதை உணர்த்துகிறது. கலைஞர் தாய் காவியத்தைப் பற்றிக் கூறும்போது, “என் பொதுவாழ்வில் சிறைபோகும்போதெல்லாம் என்னோடு துணைக்கு வருவாள் என்றும் சிறையில் நான் படிக்கும் பல புத்தகங்களில் திரும்பத் திரும்பத் தவறாமல் படிக்கும் புத்தகத்தில் ஒன்றுதான் இந்த ‘தாய்’ காவியம் என்றும்”[38] “இக்கதையில் சில பல நிகழ்வுகளில் என் தாயை நினைவுபடுத்தி ஆழமாக என் நெஞ்சில் இறங்கிவிட்ட உணர்வின் உருவமாக, கார்க்கியின் ‘தாய்’ காட்சி தருவதால் காராக்கிரகத்தில் இந்தத் தாய் என்னைவிட்டு விலகாமலே துணையாக இருந்ததில் துளியளவு வியப்பும் இல்லை”[39] என்று கலைஞர் குறிப்பிட்டுள்ளது நினைக்கத்தக்கது.

“இக்காவியம் உரைநடை ஓவியமாகச் சிலரால் தீட்டப் பட்டுள்ளது. மொழி பெயர்க்கப்பட்டு உலகின் மூல பலமான பாட்டாளிவர்க்கத்திற்கு மேலும் பலம் சேர்த்திருக்கிறது. பகுத்தறிவு மணம் பரப்பியிருக்கிறது. இக்காரணங்களால் இதனைக் கவிதை நடையில் காவியம் ஆக்கிட வேண்டும் என்று எனக்கு எழுந்த ஆசைக்கு அடித்தளமாயிற்று”[40] எனக் கலைஞர் ‘தாய்’ காவியம் படைத்ததற்கான காரணமாக விவரித்துள்ளார். கலைஞர் இக்காவியத்தைப் பத்தே நாளில் எழுதி முடித்துள்ளார்.

கலைஞர் தாய் காவியத்தைப் புதுக்கவிதை நடையில் படைத்துள்ளார். உட்பிரிவுகள் அத்தியாயம் அத்தியாயமாக உள்ளன. 51 அத்தியாயங்கள் இடம் பெற்று 383 பக்கங்களில் அமைந்துள்ளது. ஒவ்வொரு அத்தியாயமும் சிறந்த கதைப்போக்கைக் கொண்டதாக அமைக்கப்பட்டுள்ளது.

**கதைப்பொருள்**

கதையில் வரும் முக்கிய நிகழ்ச்சிகளின் மொத்தத் தொகுப்பே கதைப்பொருளாகும். “அறிவைத் தூங்கச் செய்து, உணர்வின் விழிப்பிலேயே வாசகரை இழுத்துப் பிடித்து மங்கச் செய்யும் ஆற்றல் வரலாற்று நாவல்களுக்கு உண்டு. இதன் கதையமைப்பும், நாடகப்பாங்கும், ஆர்வத்தைத் தூண்டும் புதிர்களும் அவர்களைக் கற்பனை உலகில் சிறகடித்துப் பறக்குமாறு செய்கின்றன. மனிதன் எவ்வளவு தான் அறிவியல் சூழலில் வாழ்ந்தாலும் அவன் மனம் கற்பனை வேட்கையைவிட்டு விடாது. மனித மனத்தில் விந்தையான ஆசைகள் இருக்கின்றவரை வரலாற்று நாவல்களும் தோன்றவே செய்யும்”[41] என்று தாய் காவியத்திற்கும் பொருந்தும்.

கலைஞர் 'தாய்' காவியத்தின் முதலாவது அத்தியாயத்தில், மாக்சிம் கார்க்கி மற்றும் இரஷ்யாவில் உள்ள பணக்கார ஏழை வர்க்கத்தினரின் நிலை போன்றவற்றையும் கதையின் முக்கியப் பாத்திரமாக இடம்பெறும் தாய் நிலோவ்னா, மகன் பாவெல் ஆகியோரைப் பற்றியும் அறிமுகப்படுத்துகிறார். இரண்டாவது அத்தியாயத்திலிருந்து கதை தொடங்குகிறது.

பாவெல் குடித்துவிட்டு வீட்டிற்கு வருகிறான். அவனை, தாய் நிலோவ்னா ஊமைமொழி ஜாடைப் பேச்சால் பார்க்கிறாள். உடனே தான் செய்த தவறை நினைத்து வருந்துகிறான். தாய்க்குத் தெரியாமல் ஏதோ ஒரு புத்தகத்தைப் படிக்கிறான். கடைசியில் அது முதலாளிகளுக்கு எதிரான வாசகங்கள் அடங்கிய புத்தகம் எனத் தாயிடம் கூற, தாய் இவன் கூறியது கேட்டு இதனால் என்னா நிகழுமோ? என்று அச்சம் அடைகிறாள்.

பாவெல் தாயிடம் தொழிற்சாலையின் நிலைமை மற்றும் தொழிலாளர்களின் நிலை ஆகியவற்றை விளக்கிக் கூறுகிறான். தானே இவ்விவகாரத்தில் தலையிட்டு தலைமை ஏற்று நடத்தப்போவதாக உறுதியளிக்கிறான். பாவெலின் வீட்டிற்கு, நகரத்தில் இருந்து சிலர் வருகின்றனர். அவர்களோடு பாவெலும் சேர்ந்துகொண்டு முதலாளிகளுக்கு எதிராகப் பல்வேறு பிரச்சினைகளைப் பற்றி விவாதிக்கிறான். இரவும் தொடர்ந்து பாவெலின் வீட்டில் கூட்டம் நடைபெறுகிறது. கூட்டத்தில் பாவெல் புயலான வார்த்தைகளைக் கொண்டு பேசுகிறான். ஏழைகளுக்கும் தன்மானம் உண்டு என்று முதலாளிகளுக்கு உணர்த்தவேண்டும் எனக் கூறியதோடு, இதில் நாம் அனைவரும் ஒன்றுசேர்ந்து போராடினால்தான் வெற்றி என்பது கிடைக்கும் என்கிறான்.

கூட்டம் ஒரு நாள் மட்டும் அல்லாமல் ஒவ்வொரு சனிக்கிழமையும் தொடர்ந்து நடக்கிறது. கூட்டத்திற்குப் புதிய புதிய உறுப்பினர்கள் வந்து சேர்ந்தவண்ணம் இருக்கின்றனர். இவர்கள் கூட்டம் கூட்டுவதால் தாய்க்கு மிகவும் அச்சமாகவே இருக்கிறது. இருந்தாலும் தன் மகன் தவறான பாதைக்குச் செல்லமாட்டான் என்ற நம்பிக்கை இருந்தது. பாவெல் பத்திரிகை ஒன்றைத் தொடங்கத் தீர்மானிக்கின்றான்.

பாவெலைப் பற்றிப் பலரும் பல்வேறு கருத்துக்களைத் தாயிடம் கூறுகிறார்கள். உன் மகன் ஏதோ அரசுக்கு எதிராகச் சதித் திட்டம் தீட்டுகிறானாமே? என்று கேட்கின்றனர். தாயானவள் இவர்களின் பேச்சைப் பெரிதாக எடுத்துக்கொள்ளவில்லை. இன்னும் சிலர் இவர்களின் இல்லத்தைப் பார்த்து சதிக் கூட்டக் குகையோ? வெடிமருந்துக் கிடங்கோ? என்ற சந்தேகத்துடன் பார்க்கிறார்கள்.

பீட்டர்ஸ்பர்க் தொழிற்சாலைத் தொழிலாளர்கள் ஆயிரம்பேர் பிடிபட்டு சிறைக்குள் வாடுகிறார்கள் என்ற துண்டுப் பிரசுரம் வெளியாகிறது. அரசாங்கத்தால் தடை செய்யப்பட்ட முதலாளிகளுக்கு எதிரான வாசகங்கள் அடங்கிய ஒரு பத்திரிகையே துண்டுப் பிரசுரம் எனப்படுவதாகும். தாயிடம் மேரியாஎன்பவள் இன்று இரவு உங்கள் வீட்டில் அரசு அதிகாரிகள் சோதனையிடப் போகிறார்கள் என்று எச்சரித்துச் சொல்கிறாள். அவள் கூறியது போலவே காவலர்கள் வந்து விடுவார்களோ! என்று தாய் மனத்திற்குள் கலக்கமடைகிறாள். அவள் நினைத்துக்கொண்டிருக்கும்போதே வீட்டின் வெளியே பூட்ஸ் காலடி சப்தம் கேட்கிறது.

காவலர்கள் கூட்டத்தோடு அரசு அதிகாரி ஒருவரும் வருகிறார். அவர்கள் அனைவரும் பாவெலின் வீட்டில் ஏதாவது துண்டுப் பிரசுரம்

கிடைக்குமா? என்ற நோக்கத்தில் வீடு முழுவதும் சோதனையிட்டனர். அவர்களின் சோதனையில் எவ்விதமான ஆவணமும் கிடைக்காததால் நிக்கோலாய், ஆண்ட்ரி இருவரை மட்டும் கைது செய்து கொண்டு செல்கின்றனர்.

நிக்கோலாய், ஆண்ட்ரி இருவரின் கைதோடு அவர்கள் நின்று விடவில்லை. இவர்களோடு இவ்வியக்கத்தில் ஈடுபட்ட புகின், சமோய்லாவ், சோமோவ் போன்றவர்களும் கைதானார்கள்.

பாவெல் வேலை பார்க்கும்தொழிற்சாலையில், சாக்கடைக் கழிவு நீராக எங்கும் காட்சியளிக்கிறது. பாவெல் தொழிலாளர்கள் அனைவரையும் ஒன்று சேர்ந்து நிருவாகத்திற்கு எதிராக சாக்கடைக்காசு என்ற போராட்டத்தை நடத்துகிறான்.

பாவெலோடு சேர்ந்த தாயும் சாக்கடைக்காசு போராட்டத்தில் கலந்து கொள்ளத் தொழிற்சாலையை நோக்கிச் சென்றாள். அங்குக் கூட்டமாக நின்றிருந்த தொழிலாளர்கள் மத்தியில் பாவெல் தொழிற்சாலை மேலாளரை அழைத்துப் போராட்டத்திற்கான காரணத்தையும் சாக்கடைக்காசு சம்பவத்தையும் விவரிக்கிறான்.

தாயும் மகனும் அவர்கள் வீட்டில் இருக்கின்றனர். முன்பு ஒருமுறை இவர்கள் வீட்டைச் சோதனை செய்த அதிகாரி திடீரென மறுபடியும் சோதனையிட வேண்டும் என்று கூறி இவர்கள் வீட்டிற்குள் நுழைந்தான். அங்கு பல்வேறு இடங்களில் சோதனையிட்டும் எவ்வித ஆவணமும் கிடைக்காததால் பாவெலைக் கைது செய்து கொண்டு சென்றான். இதைப் பார்த்து தாய் கலங்காமல் என்னையும் கைது செய்து கொண்டுசெல்லுங்கள் என்று துணிவுடன் கூறுகிறாள்.

பாவெலும், ஆண்ட்ரியும் சிறைக்குப்போன பின்னர் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்த ஆளில்லாமல் தொழிலாளர்கள் அனைவரும் கவலையடைகின்றனர். இதைப் பார்த்த தாய் நிலோவ்னா தன்னுடைய மனத்திற்குள், இனிமேல் தானே தலைமையேற்று துண்டுப் பிரசுரங்களை மூலைமுடுக்கெல்லாம் கொடுக்க வேண்டும் நினைத்து மறுநாள் காலையில் சாப்பாட்டுக் கூடையுடன் தொழிற்சாலை வாசலுக்குச் சென்றாள்.

தாயானவள் ஒவ்வொரு நாளும் தொழிற்சாலை வாசலில் சாப்பாடு விற்பது போல துண்டறிக்கைகளை விநியோகித்தாள். திடீரென ஒரு நாள் தாயைப் பார்க்கப் பெண் ஒருத்தி வருகிறாள். அவள் தான் வைத்திருந்த துண்டறிக்கைகளைத் தாயிடம் விநியோகம் செய்யச் சொல்லி அனைத்தையும் கொடுக்கிறாள்.

துண்டுப் பிரசுரம் விநியோகிப்பது எவருக்குத் தெரிந்தாலும் பரவாயில்லை. இதனால் எனக்குத் தூக்குத் தண்டனை என்றாலும் பரவாயில்லை நான் எல்லாவற்றிற்கும் துணிந்துவிட்டேன் என்று தாய், ஈகோர் என்பவனிடம் கூறுகிறாள்.

பாவெல் சிறை சென்றதை நினைத்துத் தாய் ஒவ்வொரு நாளும் பாவெல் இன்று வந்துவிடுவானா? நாளை வந்துவிடுவானா? என ஆண்ட்ரியிடம் கேட்டுக் கொண்டு இருந்தாள்.

'தாய்' பாவெலைக்காண ஆவலாக இருந்தாள். அவ்வேளையில் ஆண்ட்ரி இன்று மாலை சிறைச்சாலையில் இருக்கும் பாவெலைப் பார்க்க அனுமதி வாங்கி வந்திருக்கிறேன் என்று கூறுகிறான். இதைக்கேட்டு தாய் மிகவும் மகிழ்ச்சி அடைந்தாள்.

'தாய்' சிறைச்சாலை வளாகத்தில் அமர்ந்துகொண்டு அங்கு நடக்கும் பல்வேறு நிகழ்வுகளைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள்ள. பிறகு பாவெல் வந்தவுடன் தாய் அவனிடம் அன்பு மழை பொழிந்து 'நீ இல்லாத குறையை உன் தோழர்கள் பார்த்துக் கொள்கிறார்கள்' என்று கூறினாள். பின் அவள் அங்கிருந்து சென்று விட்டாள்.

சிறைச்சாலையில் நடந்தவற்றை மற்றவரிடம் பகிர்ந்து கொள்கிறாள். சிறையிலிருந்து நிக்கோலாய் விடுதலையாகிறான். நிக்கோலாயும், ஆண்ட்ரியும் தொழிலாளர்களின் நிலையைப் பற்றிய பேசுகின்றனர். தாயானவள் சாப்பாட்டுக் கூடையோடு துண்டறிக்கையையும் எடுத்துக் கொண்ட தொழிற்சாலை வாயிலை நோக்கிச் செல்கிறாள்.

தாய் பாவெலை நினைத்து மனம் வருந்தினாள். அவன் இன்று வந்து விடுவானோ? இல்லை நாளை வந்து விடுவானோ? என்று மனதிற்குள் நினைக்கிறாள். கோழை வழி நம் வழியல்ல நேர்வழியிலேயே போராட வேண்டும் என ஆண்ட்ரி நிக்கோலாயிடம் கூறுகிறாள்.

ஆண்ட்ரிக்கு மீண்டும் ஆலைவேலை கிடைத்து விடுகிறது. நிக்கோலாய் மனு மட்டும் நிராகரிக்கப்பட்டது. சிறை சென்ற பாவெல் விடுதலையாகி வீடு திரும்பினான். மே தின விழா ஏற்பாடுகளைப் பற்றி ஆண்ட்ரி, பாவெல் இருவரும் பேசுகின்றனர். விழாவில் செங்கொடியைப் பிடித்துத் தலைமையேற்று நடத்த பாவெல் தயாராகிறான். இச்செய்தியை அன்னை கேட்டவுடன் இதனால் என்ன நடக்குமோ? என மனதில் கலக்கமடைகிறாள்.

பாவெல் நடத்தும் கூட்டத்தை வேவு பார்த்து, அரசுக்கும் முதலாளிகளுக்கும் இவர்கள் பேசுவதைக் கேட்டுக் கூறும் ஒற்றனாக இருந்து செயல்பட்ட ஈசாய் என்பவனை முகம் தெரியாத யாரோ கொலை செய்து விடுகிறார்கள். அவன் சட்டைப் பையில் ஒரு துண்டுச் சீட்டு, அதில் உளவாளியாக இருப்பவர்களுக்கு இதுவே தக்க தண்டனையாகும் என்று இருந்தது.

ஈசாய் கொலையைப் பற்றி ஆண்ட்ரி பாவெலிடம் எடுத்துக் கூறுகிறான். கொலை நடக்கும் போது பார்த்துக் கொண்டு இருப்பது மனிதத் தன்மை அல்ல என்றும், உடனே நீ தட்டிக் கேட்டிருக்க வேண்டும் எனவும் பாவெல் ஆண்ட்ரியின் மீது கோபம் கொள்கிறான்.

ஒவ்வொரு முறையும் கூட்டம் வெவ்வேறு இடங்களில் நடந்தது. மே தின விழாவிற்குக் கலந்து பேசும் கூட்டமாக மாதா கோவில் பக்கம் இருக்கும் அடர்த்தியான காடு போன்ற இடத்தில் நடந்தது. அதில் யார் யாருக்கு என்னென்ன பொறுப்பு எனக் கூறப்பட்டுக் கூட்டம் முடிந்தது. மறுநாள் காலையில் மே தினம், ஆலையின் சங்கு ஒலித்து வேலைக்கு வருவோரை அழைத்தது. வேலைக்கு எவரும் செல்லாமல் மே தின அணி வகுப்பிற்குத் தயாரானார்கள்.

மே தின ஊர்வலத்தில் பாவெல், தாய், ஆண்ட்ரி இவர்களோடு சேர்த்து இன்னும் அதிகமானோர் அணிவகுத்துச் செல்கின்றனர். பாவெலிடம் கூட்டத்தில் உள்ள ஒருவன், "இவ்வாறாகச் செல்ல வேண்டாம்", என்கிறான் பாவெலோ, "இது குடும்ப நிலை உணர்ந்தோர் நடத்தும் பேரணி, கடிகாரர்கள் நடத்தும் பேரணியன்று", என்கிறான்.

ஆலையின் சங்கு பல முறை கூவிக் கூவி அழைத்தும் யாரும் செல்லாமல் இருந்தனர். அனைவரும் மே தின விழாவில் கலந்து கொள்ள அணிவகுத்துச் சென்றனர். கூட்டத்தை நோக்கிக் காவலர்கள் தடியடி மற்றும் கண்ணீர்ப் புகைக் குண்டுகளை வீசுகின்றனர். இருந்தாலும் பாவெல் பத்தாயிரம் பேர் கூடியிருக்கும் கூட்டத்தின் நடுவே செங்கொடியைக் கையில் பிடித்தபடி வீரவேசமாகப் பேசிக்கொண்டிருந்தான். போராட்டத்தின் கடைசியில் செங்கொடித்துணி கிழிந்த நிலையில் இருப்பதைப் பார்த்து, தாய் எங்கே என் பிள்ளைகள்? என்று தேடுகிறாள்.

பாவெல், ஆண்ட்ரி இருவரும் மே தின விழாவில் கைது செய்யப்பட்ட அன்று மாலை, தாயின் வீட்டிற்கு நான்கு காவவர்கள் வந்தனர். அவர்கள் மேரியா என்ற சாப்பாடு விற்கும் பெண்ணையும் அழைத்து வந்தனர். அவர்கள் மீண்டு வீட்டைச் சோதனை செய்ய வேண்டும் என்றனர்.

நிலோவ்னா ஊர் ஊராகச் சென்று துண்டுப் பிரசுரம் கொடுக்க உறுதி பூண்டாள். தாய் அருகில் உள்ள நகரத்திற்குச் செல்ல நொண்டிக் குதிரை வண்டியை ஏற்பாடு செய்கிறாள். அவள் போகும் போதே பாவெல் சிறுபிள்ளையாக இருந்த பொழுது தனது கணவன் செய்தி இழிசெயல்களை மனதிற்குள் நினைத்துக் கொண்டு செல்கிறாள்.

தாய் நிலோவ்னாவும், இளம் பெண்ணான சோபியா என்பவளும் மூன்று நாட்களாகக் காட்டு வழியில் நடந்து இறுதியில் அவர்கள் நினைத்த இடத்திற்கு வந்து சேர்கின்றனர். அங்கு இருவரும் எபிம் என்பவனைச் சந்திக்கின்றனர்.

இக்நாட் என்பவன் தாயிடம் மே தின விழாவில் நடந்த நிகழ்ச்சிகளையும் பாவெலுக்கு என்ன தண்டனை என்றும் கேட்டுத் தெரிந்து கொண்டான். அதில் பாவெலுக்கு நாடு கடத்தலா அல்லது வேறா எனவும் கேட்டான்.

தாய் நிலோவ்னா மாறுவேடத்தோடு சிற்றூர், பேரூர் போன்ற இடங்களுக்கெல்லாம் சென்று, தன்னால்முடிந்தவரை துண்டுப் பிரசுரத்தை அனைவரிடமும் கொடுக்கிறாள். இவ்வாறு இவள் மொத்தம் பதினைந்து நாட்கள் சுற்றுப்பயணம் மேற்கொள்கின்றாள்.

தாய், நிக்கோலாய் இருவரும் மருத்துவமனையில் இருக்கம் ஈகோர் என்பவரைப் பார்த்து அவரிடம் நலம் விசாரிக்கின்றனர். ஈகோர் என்பவர் அரசு அதிகாரிகளால் ஊர்வலத்தில் பலமாகத் தாக்கப்பட்டு உடல்நலமில்லாமல் மருத்துவமனையில் இருப்பவர்.

மருத்துவமனையில் இருந்த ஈகோர் உயிர் இழந்தார். சவ ஊர்வலத்தில் சவப்பெட்டி மீது சிவப்பு நாடா சுற்றப்பட்டிருந்தது. இதை அகற்றுமாறு அரசு அதிகாரிகள் உத்தரவிட்டனர். பின் சிவப்பு நாடா அகற்றப்பட்டு சவ அடக்கம் செய்யப்பட்டது.

ஐவான் என்னும் இளைஞன் தாய்க்கு அறிமுகமாகிறான். சிறையிலிருக்கம் பாவெலை, தாய் நிலோவ்னா சென்று சந்திக்கிறாள். அப்போது ஈகோர் மரணம் மற்றும் இன்னும் சில விசயங்கள் பற்றிப் பாவெலிடம் கூறுகிறாள். கடைசியில் அங்கிருந்து புறப்படும் முன்பு அவன் கையில் ஒரு துண்டறிக்கையை யாருக்கும் தெரியாமல் கொடுக்கிறாள்.

நிலோவ்னா அருகில் உள்ள நகரான நிக்கோல்ஸ்கோபி என்னும் நகருக்குச் செல்கிறாள். செல்லும் வழியில் ஐவானைச் சந்தித்து அவனையும் கூட்டிச் செல்கிறாள்.

இரைபின் என்பவன் விவசாயிகளை எல்லாம் ஒன்று சேர்த்து கூட்டம் நடத்துகிறான். அக்கூட்டத்தின் நடுவே உரையாற்றும் போது திடீரெனக் காவலர்கள் அவனைத் தாக்கி உதடு கிழியச் செய்கின்றனர்.

துண்டறிக்கை விநியோகிக்கும் பொறுப்பை ஐவானிடம் ஒப்படைத்தனர். தாய், இக்நாட், நிக்கோலாய் போன்றவர்களுக்கு பாவெலின் புரட்சிக் கருத்துக்களைக் கூறினாள்.

சிஜோவ் என்பவன் தாயிடம் நாளை உன் மகன் பாவெல், ஆண்ட்ரி இருவருக்கும் வழக்கு விசாரணை என்று கூறினான். தாய் பாவெலை விசாரிக்கும் கைதிக் கூண்டைப் பார்க்கிறாள். அவள் கண்ணிற்கு அது தொட்டிலாகத் தெரிகிறது. நீதிமன்றத்தில் வழக்கு விசாரணை தொடங்கப்பட்டது. வழக்கின்படி சம்பந்தப்பட்டவர்களை அழைத்து நீதிபதிகள் விசாரணை செய்கின்றனர்.

நீதிமன்றத்தில் பாவெல் புயலெனப் பேசினான். நீதிமன்றத்தில் அங்கு கூடியிருந்தோர் அனைவரும் பாவெலைப் பார்த்தவண்ணம் இருந்தனர். நீதிமன்ற வாதங்களுக்குப் பிறகு தீர்ப்பு வழங்கப்பட்டது. தீர்ப்பில் பாவெல், ஆண்ட்ரி இவர்களோடு சேர்ந்த இன்னும் சிலரையும் நாடு கடத்த வேண்டும் எனத் தீர்ப்புக் கூறப்பட்டது.

மாஸ்கோ என்னும் நகருக்குத் தாய் துண்டுப் பிரசாரம் விநியோகம் செய்ய முற்பட்டு இரயில் நிலையத்திற்குப் பெட்டியைக் கொண்டு செல்கிறாள்.

சட்ட விரோதமான வாசகங்கள் அடங்கிய துண்டப்பிரசுரத்தைக் கண்ட காவலர்கள் தாயைத் தாக்கினார். நிலை குலைந்த தாயை, ஐவான் தனது வண்டியில் ஏற்றிக்கொண்டு மருத்துவமனை வாசலுக்குச் சென்றான்.

தாய்காவியக் கதைப்பொருளானது ஐம்பத்தொரு அத்தியாயங்களில் அமைந்துள்ளது.

**கதைக்கரு**

"கதைக்கு மிகவும் முக்கியமானது 'கரு'வாகும். கதைக்கு நல்ல வடிவ அழகைத் தருவதாகும். இரத்தமும் சதையுமாக அமைந்த மனித உடலுக்கு ஓர் அழகிய வடிவைத் தருவது உள்ளே இருக்கும் எலும்புக் கூடாகும். அதுபோல் நாவலுக்கு வடிவ அமைப்பாய் விளங்குவது பிளாட்டாகும். கதையின் பல்வேறு பகுதிகளையும் ஒன்றாய் இணைத்து வடிவைத் தருவது பிளாட்டாகும். ஏதாவது ஒரு சிறு பகுதியை அகற்றி விட்டாலும் கதை அமைப்பு கெட்டுவிடும் என்று சொல்லத்தக்க அளவிற்குப் பிளாட் சம்பவங்களை வட்டமாக இணைத்துக் கொண்டிருக்கிறது."[42]

"கதைக்கரு என்பது பொருளை மையமாகக் கொண்ட கதை உருவாகிறது. நாவல் இலக்கியத்தின் முழு அமைப்பிற்கும் அடிப்படையாக அமைவது கதைக்கருவேயாகும்.

"எந்த ஒரு கதைக்கும் கரு அவசியம். கரு எதுவாக இருந்தாலும் மனித மனத்தைக் கவரும் வகையில் அது அமைத்து இருக்க வேண்டும்."[43]

"கதைக்கரு வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி ஒரு சிக்கலான விளைவு அது வரலாற்றிலிருந்து கண்டமைந்ததாக இருக்கலாம். அல்லது நாட்டுக் கதையிலிருந்து புராணக் கதைகளிலிருந்து அமைந்ததாக இருக்கலாம்."[44] கதைக்கான கருவை இம்முறையில் இருந்து தான் எடுக்க வேண்டும் என்பதற்கு வரையரையேதுமில்லை "பொதுவாக நாவலின் மையக் கருத்தினைக் குறிப்பிடப் பயன்படுத்தப்படும் கலைச்சொல் கரு எனப்படும். பாடுபொருள் என்றும் மையநோக்கம் என்றும் குறிப்பிடுவது மரபு. கருவை இலக்கியத்தில் வெளிப்படையாகக் காணுதல் இயலாது. கலைஞரின் தாய் காவியக் கருப்பொருளாகவும் கதைக்கருவாகவும் அமைந்து வருவது தொழிலாளர் புரட்சியாகும். முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் இடையே நடக்கும் போராட்டமே கதையாக அமைந்துள்ளது.

தன் வாழ்க்கையே போராட்டம் என்று குறிப்பிடும் கலைஞர் போராட்ட வாழ்வை மையமிட்ட தாய் காவியத்தைக் கவிதை நடையில் படைத்திருப்பது பொருத்தமானதாகும்.

மூலக்கதையில் உள்ள வேற்றுமொழிப் பாத்திரப் பெயர்களை அப்படியே கலைஞர் எடுத்தாண்டுள்ளது அவர் பெருந்தன்மையையும், மேலோர்க்குத் தரும் மதிப்பையும் ஒருசேரக் காட்டியுள்ளன.

உள்ளீடுகளில் அமைந்துள்ள புலப்பாட்டு நெறியைத் தொகுப்பது ஆய்வின் நோக்கம். புலப்பாட்டு நெறி என்பதைப் பற்றி மேனாட்டுத் திறனாய்வாளர்களின் கருத்துக்களைக் காண்பது அவசியமாகின்றது.

# அடிக்குறிப்புகள்

1. *கலைஞர் மு.கருணாநிதி,* **தொல்காப்பியப் பூங்கா**, *ப.78.*
2. *மே. நூ., ப. 29*
3. *மே. நூ., ப. 40*
4. *மே. நூ., ப. 533*
5. *மே. நூ., ப. 78.*
6. *மே. நூ., ப. 137*
7. *மே. நூ., ப. 149*
8. *மே. நூ., ப. 162.*
9. *மே. நூ., ப. 165.*
10. *மே. நூ., ப. 193.*
11. *மே. நூ., ப. 190.*
12. *மே. நூ., ப. 204.*
13. *மே. நூ., ப. 243.*
14. *மே. நூ., ப. 245.*
15. *மே. நூ., ப. 252.*
16. *மே. நூ., பக். 288 - 289.*
17. *மே. நூ., ப. 294.*
18. *மே. நூ., ப. 300.*
19. *மே. நூ., ப. 306.*
20. *மே. நூ., ப. 357.*
21. *மே. நூ., ப. 366.*
22. *மே. நூ., ப. 370.*
23. *மே. நூ., ப. 374.*
24. *மே. நூ., ப. 382.*
25. *மே. நூ., ப. 400.*

26. மே. நூ., ப. 429.

27. மே. நூ., ப. 464.

28. மே. நூ., ப. 472.

29. மே. நூ., ப. 479.

30. மே. நூ., ப. 485.

31. மே. நூ., ப. 488.

32. மே. நூ., ப. 495.

33. மே. நூ., ப. 507.

34. மே. நூ., ப. 527.

35. ஆர். நல்லக்கண்ணு, **தாய் காவிய அணிந்துரை,** ப.xii

36. மே. நூ., ப. xiii

37. மே. நூ., ப. xiv

38. கலைஞர், **தாய் காவிய வாழ்த்தும் பாராட்டும்,** ப.xix

39. மே. நூ., ப. xx

40. மே. நூ., ப. xix

41. மா. இராமலிங்கம், **இருபதாம் நூற்றாண்டு தமிழ் இலக்கியம்,** ப.80.

42. மா. இராமலிங்கம், **நாவல் இலக்கணம்,** ப.56 - 61.

43. மே. நூ., பக். 62 - 65.

44. மு. வரதராசன், **இலக்கிய மரபு,** ப.130.

# இயல் - 3
# புலப்பாட்டு வரைவிலக்கணம்

படைப்பாளனின் வெற்றிக்கு அவன் கையாளும் நெறிமுறைகளில் புலப்பாட்டுத்திறம் தனி இடம் பெறுகின்றது. படைப்புத்திறனாய்வு வகைகளில் புலப்பாட்டுத் திறனுக்குரிய வரையறை பல்வேறு அறிஞர்களால் முறைபடுத்தப்பட்டுள்ளது. புலப்பாட்டுத் திறனாய்வின் வரைவிலக்கணத்தைத் தொகுப்பது இவ்வியலின் நோக்கமாகும்.

**புலப்பாட்டு நெறி**

கிரேக்க சொல்லான Rhetoric என்பதற்குச் சொல்லாட்சிக்கலை என்று பெயர். ஒரு மொழியைச் செவ்வனே எழுதவும், பேசவும் உதவும் கோட்பாடுகளை இச்சொல் குறிக்கிறது. ஒரு பேச்சாளன் தன்னுடைய கருத்துக்களைச் சபையினர் உணர்ச்சிப்பிழம்பாக ஏற்றுக் கொள்ளுமாறு பயன்படுத்த வேண்டும். பேச்சாளர் அதற்கான உத்திகளைக் கண்டுபிடிப்பதில் கவனம் செலுத்த வேண்டும். சபையினர் தன் கருத்தை ஏற்கச் செய்யத் தக்க வழிமுறைகள் என்ற அரிய விளக்கத்தைப் பின்னர் வந்த இலக்கண ஆசிரியர்கள் ஒத்துக் கொண்டனர். 18ஆம் நூற்றாண்டில் இலக்கியக் கொள்கையில் இக்கொள்கை சிறந்ததோர் இடத்தைப் பெற்றது.[1]

எடுத்துக் கொண்ட வேலையில் (Persuation) கிடைக்கக்கூடிய எல்லா வசதிகளையும் கண்டுணரும் கலை, புலப்பாட்டு நெறியாகும். சொற்கலை, கவிதைக்கலை ஆகியவற்றிற்கு இடையே உள்ள வேறுபாடுகளைத் தெளிவுபடுத்திய அங்கதக் கவிஞர் கோரஸ்

கவிதையின் நோக்கம் அறிவு புகட்டல் அல்லது களிப்புண்டாக்கல் அல்லது முரண்பாடு என்று குறிப்பிட்டுள்ளார்.[2]

ஒரு கலைப்படைப்பானது முக்கியமாக அவ்வாசிரியனின் குண, மன உணர்ச்சித் திறன்களில் வெளிப்பாடு தற்சார்புக் கொள்கையாகின்றது. இலக்கியம் ஒரு பொதுப்படைப்பு. இந்நோக்கு சொற்கலை இலக்கிய ஆராய்ச்சியை வளர்த்துள்ளது. ஓரிலக்கியப் படைப்பில் அமைந்துள்ள பல தன்மைகளையும், வாசகர் நிலையில் நின்று இக்கொள்கை ஆராய்கின்றது. ஒருவர் தன் மனக்கருத்தை மற்றவனுக்குப் புலப்படுத்த மொழியைக் கருவி ஆக்குகின்றார். சொல்ல வந்த கருத்தை மற்றவன் மனங்கொள்ளுமாறு கலைஞன் படிப்பவனிடத்தோ, கேட்பவனிடத்தோ விரும்பும் தன்மையை ஒன்றுபடுத்த வேண்டும். இந்நிலை உருவாகப் படைப்பாளன் பல உத்திகளைக் கையாளுகின்றான். பொருளைப் புலப்படுத்துவதுடன் வேட்ப மொழியும் சொல்லாக்கக் கலையாகச் சொல்லாட்சிக் கலை விளங்குவதால் அக்கலையைத் தமிழில் புலப்பாட்டு நெறி என்று வழங்கப்படுகின்றது.

**கிரேக்கப் புலப்பாட்டு நெறி**

கோரஸ் என்பவர் புலப்பாட்டு நெறியின் முதல்வர் ஆவர். இவர் நீதிமன்ற பேச்சுக்களையும், விவாதங்களையும் புலப்பாட்டு நெறிக்குள் அடக்கி உணர்த்தியவர். உடன்பாட்டு முறையிலும் (conformation) மறுத்துக் கூறல் முறையிலும் (Refasination) விவாதத்தை அமைத்து வாதாடி வெற்றி பல பெற்றவர்.[3]

திதியாஸ் (Tilias) கோரஸின் மாணவர், இவர் லிசியாஸ் (Lysias) ஐசோக்ட்டீஸ் (Isoenraty) ஆகியோரின் ஆசிரியர். இவர்கள் புலப்பாட்டு

நெறியில் முரண் அணி (Artithesis) இணையணி (Paallesim) ஆகிய உத்திகளைக் கையாண்டனர். ஐசோக்ட்டீஸ் பேச்சுக்கலையைக் கல்வி நிலையவைகளில் பாடமாக்கிக் கற்பித்தவர். இப்பள்ளியில் பணம் படைத்தோர் பலர் பயின்றனர்.[4]

இவர்களது கொள்கைகளைப் பிளாட்டோ, அரிஸ்டாட்டில் போன்றோர் ஏற்கமறுத்து, பேச்சுக்கலைக்குரிய பள்ளி ஒன்றை நிறுவி, புலப்பாட்டு நெறி என்னும் நூலை அரிஸ்டாட்டில் படைத்தார். இவர் எழுதிய மற்றொரு நூல் கவிதையியல் (poetries) என்பதாகும். பேச்சுக்கலைக்கு, தவறுகளைப் போக்குவது, அறிவூட்டுவது, குறிப்புப் பொருளைத் தெரிவிப்பது, அற்றம் காக்கும் கருவியாக அமைவது ஆகிய நான்கு பயன்களைச் சுட்டியுள்ளார்.[5]

கலைஞன் தனக்கென மொழிநடையைப் படைத்துக் கொள்கின்றான். நடை என்பது மனிதன் தன் எண்ணங்களை வெளியிடும் தனிமுறை என்பர்.[6] ஹெர்மோ ஜெனிஸ் (Hermogenes) என்பவரும், எப்தோனியஸ் (Aphthorus) என்பவரும் கருவிகளை (Theme) அடிப்படையாகக் கொண்டு புலப்பாட்டு நெறிபாடநூல்களை வெளியிட்டனர். லான்ஜினியஸ் (Longinius) எழுதிய Lenthe Sablime என்ற நூல் இலக்கியத் திறனாய்விற்குப் பெரிதும் துணை நிற்பதாகும்.[7]

இங்கிலாந்தில் 16ஆம் நூற்றாண்டில் புலப்பாட்டு நெறி பற்றிய சிந்தனை மேலோங்கியது. ஆங்கிலப்பள்ளிகளில் புலப்பாட்டுநெறி பாடமாக்கப்பட்டது. தாமஸ்வில்சன் புலப்பாட்டுக்கலை (Atro Rhetorie) என்ற சிறப்புமிக்க நூலைப் படைத்தவர்.

ஆங்கிலப் புலப்பாட்டு நெறியில் 17ஆம் நூற்றாண்டு ஒரு திருப்பு முனையாகும். ராயல் சொசைட்டி என்ற கழகம் தோன்றி புலப்பாட்டு நெறி வளர்ச்சிக்குத் துணை நின்றது.

இலக்கியத்தோடு தொடர்புகொண்டு திறனாய்வுக் கலையாகப் புலப்பாட்டு நெறி 18ஆம் நூற்றாண்டில் வளரத் தொடங்கியது. 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் புலப்பாட்டு நெறி பற்றிய பல நூல்கள் எழுந்தன. அவற்றுள் ஐ.எ.ரிச்சாடு எழுதிய புதிய புலப்பாட்டு (New Rhetorie) என்ற நூல் குறிப்பிடத்தக்கது.[8] புதிய புலப்பாட்டு நெறியில் அமெரிக்காவும், இங்கிலாந்தும் பெரும்பங்கு வகித்து வருகின்றன.

அறிஞர்கள் தாகே கருத்துக் செறிவினை விளக்க, பல்வேறு சொற்களைத் தேர்வு செய்து இணைந்து, தொடரமைப்பாக வெளிப்படுத்தியுள்ளார்.

புலப்பாட்டுத்திறன் தமிழில் ஒரு தனித்த இயலாக வளரவில்லை எனினும், புலப்பாட்டுத்திறனின் கூறுகள் பழங்காலந்தொட்டு இருந்து வந்துள்ளது.

புலன்கள் ஐந்து. புலன்களை ஒருங்கிணைக்கப் பயன்படும் சிந்தையும் ஒரு புலமாகும். கண்ணுக்குக்காட்சி அமைகிறது. இலக்கியம் கருத்திற்குப் புலப்படுகிறது. புலப்படுதல், புலப்படுத்துதல் ஆகிய சொற்களுக்கு, விளங்குதல், விளங்க வைத்தல் என்பது பொருள்களாகும்.[9] புலப்பாட்டுத்திறன் என்ற சொல், தெளிவாகப் புரிய வைத்தல் என்ற பொருளைத் தருகின்றது.

புலப்பாடு என்பதைப் புலம் + பாடு என்று பிரிப்பது மரபு. புலன் என்ற சொல்லிற்கு அறிவு, இடம், ஒலி, ஐம்புலன், திக்கு, நன்மை, மேட்டுநிலம், வயல், கூர்த்தமதி என்ற தமிழகராதி ஒன்பது வகையான பொருள்களைச் சுட்டியுள்ளது.[10]

புலனுணர்வால் உந்தப்பட்ட பேச்சாளன் தன் பேச்சு பொதுமக்களிடம் மதிப்பை ஏற்படுத்துவானாயின் அவனே புலப்பாட்டு நெறியாளன் என்பர்.[11]

பேச்சுக்கள் அறிவூட்டும் நோக்கத்தைக் கொண்டதாக அமைதல் வேண்டும். அப்பேச்சு கருத்துப் பொழிவுகளாக மட்டுமல்லாமல், மகிழ்வூட்டும் பண்பினையும் பெற்றிருத்தல் வேண்டும்.[12]

பேச்சாளர்களது ஒழுக்கத்தைப் பொறுத்து, அவர்கள் கூறும் கருத்துக்கள் மக்களால் பின்பற்றப்படுகின்றன. பேச்சாளர்கள் நேர்மை, வாய்மை போன்ற நற்பண்புகளின் உறைவிடமாகத் திகழவேண்டும்.[13]

புலப்பாட்டு நெறியில் பெரிதும் கவனம் செலுத்திய குவிண்டலியான் என்பவரும் இக்கருத்தை வலியுறுத்தியுள்ளார்.[14]

கிரேக்க நாட்டு வரலாற்றில் டெமஸ் தனிஸ்சொற்போர் வன்மைக்காகப் பெயர் பெற்றவர். கிரேக்கர்களின் பேச்சுக் கலைநடைக்கு Attie style என்று பெயர். இயற்கையின் திறன், அனுபவம், தன்னம்பிக்கை, நடை ஆகிய ஒரு பேச்சாளனுக்குத் தேவை என்று கிரேக்கர்கள் கருதினர்.[15]

பேச்சு அல்லது எழுத்தின்மூலம் தன்வயப்படுத்தக்கூடிய கலையே புலப்பாட்டு நெறி என்று ஆங்கில அகராதி விளக்கம் தருகின்றது.[16]

இலக்கிய ஆய்வில் இதன் நிலைப்பாட்டை அறிந்த அறிஞர்கள் புலப்பாட்டு நெறியினை இலக்கியக்கலை என்றும் திறனாய்வுக்கலை என்றும் கூறினர்.[17]

படைப்பாளர்கள் பயன்படுத்தும் புலப்பாட்டுக்கூறுகள் மறைமுக வேலை செய்து வாசகரின் மனத்தில் இலக்கியத்தை ஆழப்பதிக்கிறது என்பர்.[18]

கேட்போரை இணங்க வைக்கும் வகையில்மொழியை ஒரு குறியீட்டுக் கருவியாகப் பயன்படுத்தும் வகை புலப்பாட்டு நெறியாகிறது. ஒரு குறிப்பிட்ட சூழலில் கேட்போரை இணங்க வைக்கும் முயற்சி புலப்பாட்டு நெறிக்குரியது. கருத்துப் பரிமாற்றக் கருவியான மொழிகளைச் செப்பமுற அமைத்து ஒழுங்குசெய்து கொள்வதை விளக்கும் கலை புலப்பாட்டு நெறியாகும்.

**தமிழில் புலப்பாட்டுத் திறன்**

தமிழ் இலக்கண, இலக்கியங்களில், மெய்ப்பொருள் நூல்களில் மொழிநடை, எடுத்துச் சொல்லும் முறை, தொகை, உரை மரபுகள் போன்றவை புலப்பாட்டு நெறியின் கூறுகளாகும்.

கடுஞ்சொல்லும், அலங்காரச் சொல்லுமின்றி தெளிவான சொற்களால் நல்ல நடையில் கருத்துக்கள் விளங்க வேண்டும் என்பதைக் குறிக்க, 'நன்மொழி புணர்தல்'[19] என்ற தொடர் அமைந்துள்ளது.

தமிழில் புலப்பாட்டு நெறிப் பற்றிய பொது நெறிகளை அறிமுகப்படுத்துகிற நிலையில் மட்டும் உள்ளது. புலப்பாட்டுத் திறனைப் பற்றிய அணுகுமுறைகள், வளர்க்க வேண்டிய நிலையில் உள்ளது.

ஆராய்ச்சி நெறி முறைகளும் ஒருவகைப் புலப்பாட்டு முறையாகும். தொல்காப்பியர் ஆராய்ச்சியாளர் உலகம் வியக்க பல உண்மைகளைத் திறம்பட படைத்துள்ளார். தமிழ் மொழியைப் பேசவும் எழுதவும் எழுத்து, சொல், பொருள் என்ற பகுப்பில் நூல் படைத்துள்ளார். பொது, சிறப்பு என்ற நிலைகளை அனைத்து இயல்களிலும் அமைத்துள்ளார். தம் கருத்துக்களைக் குறிப்பிடும்போது, முன்னோர் கருத்துக்களை ஏற்றுக்கொள்வதை, 'என்ப', 'என்மனார்புலவர்' போன்ற சொற்கள் உணர்த்தியுள்ளன.

ஆராய்ச்சி நெறிமுறைக்கும், புலப்பாட்டுத்திறனுக்கும் மீது வேறுபாடு உண்டு. ஆராய்ச்சி நெறிமுறை தொடங்கும் முன்பே தொடங்குவது, புலப்பாட்டுத்திறன் எழுதும்போது, பேசும்போது கையாளப்படுவது.[20]

இலக்கியம் வெளிப்படுத்தும் உணர்ச்சி வாசகன் மனத்தில் பாதிப்பை ஏற்படுத்தும்போது சிறந்த இலக்கியமாகிறது. இலக்கிய மாந்தர்களின் வழி வெளிப்படுத்தும் உணர்ச்சி கருத்துப் புலப்பாட்டிற்கு உதவும் கூறாகும்.

ஒரு பாடலில் கூறப்படும் செய்தி, மலர் பற்றிய தாயினும், கடல் பற்றியதாயினும் கண்ணாற்கண்டது போல் காதால் கேட்டதுபோல் ஐம்புலன்களாலும் உணர்ந்ததுபோல் படைப்பதே மெய்ப்பாடு.[21]

ஒரு பொருளோடு ஒரு பொருளை ஒப்பிட்டுக் கூறுவதன்மூலம் எந்த ஒரு கருத்தையும் எளிமையாக உணர்த்திவிடமுடியும். இச்செயலைச் செம்மையாகச் செய்வது உவமை. உவமை அணிகளின் தாய்.

+உவமையின் பயன், புலன் அல்லதெனை புலனாக்குதலும், அலங்காரமாகிக் கேட்போர்க்கு இன்பம் பயத்திலும்[22] என்று இளம்பூரணரின் உரையும், உவமந்தானும் பொருள் புலப்பாடே[23] என்று நச்சர் உரையும் குறிப்பிடத்தக்கன. புலப்பாட்டு நெறிக்கு உவமை செய்யும் பணியினை மேற்குறித்த வகைகள் சுட்டியுள்ளன.

மக்களின் சிந்தனையைத் தூண்டி சுவையூட்டும் வகையில் புலவர்கள் சொற்களையும், தொடர்களையும் முன்பின் மாற்றி கவிதைகள் புனைவர். தொல்காப்பியர் அவற்றை நிரல்நிறை, சுண்ணம், அடிமறி, மொழி மாற்று என்று நான்கு வகையாகக் குறிப்பிட்டுள்ளார் (தொல், சொல், எச்ச நூற்பா 8). இப்பாகுபாட்டைத் தொல்காப்பியர் மொழி புணர்இயல்பு என்று குறிப்பிட்டுள்ளதைப் பிற்காலத்தவர் பொருள்கோள் என்றழைத்தனர். கற்பவர்களைச் சிந்திக்க வைப்பதற்குக் கையாளும் முறைகள் பொருள்கோள் எனப்பட்டது. இப்பொருள்கோள் உத்திவகை புலவரால் வேண்டுமென்றே பயன்படுத்தும் தன்மையின.[24]

பழந்தமிழ் அக இலக்கியங்கள் குறிப்புப் பொருளை உணர்த்துவதில் சிறப்பிடம் பெற்றுள்ளன. குறிப்புப்பொருளை உணர்த்த தொல்காப்பியர் உள்ளுறை, இறைச்சி என்று இரு பகுப்புகளை அமைத்துள்ளார்.

எழுதுவதில் தெளிவு வேண்டும் என்பதால் தெளிவெனப்படுவது பொருட்புலப்பாடே என்று தண்டியலங்காரம் என்னும் அணியிலக்கண நூல் சுட்டியுள்ளது.

தமிழில் தொடக்கக்கால நூல்கள் செய்யுள் வடிவில் அமைவது மரபு. அவற்றிற்கு உரை விளக்கம் தருவதற்காக உரையாசிரியர் மரபு தோன்றியது இலக்கணத்திற்கும் இக்கருத்து பொருந்தும்.

தொல்காப்பியத்திற்குப் பலர் உரை செய்திருப்பினும், எழுத்திற்கு இளம்பூரணர், சொல்லுக்குச் சேனாவரையர், பொருளுக்குப் பேராசிரியர் என்று கூறும் மரபுத்தொடர் நினைக்கத்தக்கது. இவ்வடிகள் அவரவர் புலப்பாட்டு நெறிகளால் உயர்ந்துள்ளதை உணரமுடிகின்றது.

உரையாசிரியர்களின் கருத்துப்புலப்பாட்டினை உணர்ந்தோர், உரையாசிரியர்களும் திறனாய்வனர்களே என்றுணரத் தலைப்பட்டனர்.

இலக்கண உரையாசிரியர்களில் நச்சர் தமிழ் இலக்கியங்களுக்கும் உரை கண்டு சிறப்புற்றவர் என்பதை,

> நச்சினார்க்கினியன் எச்சில்
> நறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்

என்ற அடிகள் சுட்டியுள்ளது.

**புலப்பாட்டுச் சிந்தனையாளர்களின் கருத்துரைகள்**

புலப்பாட்டு நெறியின் சிறப்பியல்புகளை உணர்ந்த சிந்தனையாளர்கள், படைப்பாளர்களுக்குரிய அறிவுரைகளை வழங்கியுள்ளனர்.

கேட்டோ என்பவர், பேச்சாளன் நல்லவனாக இருத்தல் வேண்டும். இல்லையெனில் அவன் கேட்பவர்களைச் சூழ்ச்சித் திறத்துடன் நடத்தித் தீய காரியங்களுக்கு உட்படுத்தும் கொடியவனாகக் கருதப்படுவான்[26] என்று விளக்கியுள்ளார். பேச்சாளனின் ஒழுக்கம் முக்கியமானது என்பதை மேற்குறித்த கருத்து உணர்த்தியுள்ளது.

கென்னத்பர்க் என்பவர் குறியீடுகளுக்கு ஏற்ப செயல்படக்கூடிய உயிர்களின் கூட்டுறவிற்கு உட்படுத்தும் வண்ணம் அமைந்த மொழியின் குறியீட்டுப் பண்பாடே புலப்பாட்டு நெறி[27] என்று குறித்துள்ளார். இக்கருத்தால் மொழியின் பயன்பாடு புலப்பாட்டுக் கலையில் பெறுமிடம் உணர்த்தப்பட்டுள்ளது.

ஒரு கருத்தைப் பல பகுதிகளாகப் பிரித்து ஆராய்ந்து மீண்டும் ஒன்று சேர்த்து மதிப்பீடு செய்வதைக் குறிக்கும் சொல் புலப்பாட்டு நெறியாகும். புலப்பாட்டு நெறியாளர் அன்றாட பேச்சு வழக்கினைக் காட்டிலும் கலைநலம் மிகுந்த செயற்கையான மொழியினைப் பயன்படுத்துவர்.[28]

வாட்லி என்பவர் உடன்பட்டும் மறுத்தும், கருத்துக்களை வலிவுபடுத்தவும், பொலிவுபடுத்தவும் உதவும் கட்டுரையே புலப்பாட்டு நெறி என்பார்.[28]

புலப்பாட்டு நெறி என்பது எந்தச் சூழலிலும் சாத்தியமான அனைத்து விதிமுறைகளையும் ஒரு துறை என்பது சாக்ரடீஸ் கூறும் விளக்கமாகும்.[29]

தருக்க அளவையிலிருந்து தோன்றியது புலப்பாட்டு நெறி (Rhetronic is an off shoot Joom Logic) என்று அரிஸ்டாட்டில் மேலும் விளக்கி உள்ளது[30] குறிப்பிடத்தக்கது.

ரிச்சர்டு மிகேயோன் என்பவர் புலப்பாட்டு நெறி என்பது நன்றாகப் பேசுதல், எழுதுதலின் வகைகள் மட்டுமல்ல. அது எளிதில் புரிந்துகொள்ள இயலாத மறைபொருளினை வெளிக்கொணர்ந்து விளக்குவதாகும்[31] என்பர். பிறர் அறியாப் பொருள்களை வெளிப்படுத்துதல் வேண்டும் என்னும் கருத்து குறிப்பிடத்தக்கது. இக்கருத்து புலப்பாட்டு நெறியின் உள்ள உள்ளீட்டைச் சுட்டியுள்ளது.

பீட்டர் என்பவர் கண்டுபிடிப்பு, அமைப்பு ஆகியவற்றைத் தருக்க முறையினில் அடக்கி நடை வெளியீட்டினை மட்டுமே புலப்பாட்டு நெறியாகக் கருதியவர்.[32]

ஐசா கிரட்டிசு என்பவர் புலப்பாட்டு நெறியினை, அற நெறியினை மெய்யாகவே நடைபயிலும் ஆன்மாவின் புறத்தே தெரியும் நிழலாகக் கருதியவர்.[33] உள்ளத்தில் தெளிவுற்ற கருத்தும், வெளிப்படுத்தும் கருத்தும் ஒத்திருக்க வேண்டும் என்ற சிந்தனை குறிப்பிடத்தக்கது.

பிறர் விளங்கிக் கொள்ளும் விதமாகவும், விரும்பிக் கேட்கும் வகையாகவும் உள்ளக்கருத்துக்களை வெளிப்படுத்துதற்குக் கருவியாகிய மொழிநடையின் அமைப்பு புலப்பாட்டு நெறியாகும்.[34]

ரிச்சட் வாட்லி என்பவர் எழுதிய Element of Rhetonie என்ற நூல் புலப்பாட்டு நெறி கலைக்கு உரிய சிறந்த நூலாகப் பெயர்பெற்றது.[35]

*தமிழில் தொல்காப்பியத்தை எடுத்து புலப்பாட்டுக் கூறுகளை அணி இலக்கண நூல்களில் அமைந்துள்ளன. அணி என்பது செய்யுட்கு அழகு செய்து நிற்பதாம்.[36] செய்யுளிலிருந்து தனியே பிரித்துணர்வதற்கு ஏற்ற அணி எதுவுமில்லை.[37] அணியானது கருத்துப் புலப்பாட்டோடு இணைந்த ஒன்று என்பதை மேற்குறித்த கருத்து தெளிவுபடுத்தியுள்ளது.*

*அணி என்ற சொல்லின் விளக்கம் 1.கவிதையை அழகுபடுத்துவது, 2.கவிதையில் அமைந்திருக்கும் நுட்பமான கருத்தை வெளிப்படுத்தல், 3.இலக்கியப் புலமைக்கு வளம் சேர்ப்பது ஆகியவை அடிப்படைகளாகும் என்பர். புலப்பாட்டு நெறி நெடுங்காலத்திற்கு முன்னரே தமிழகத்தில் வேரூன்றி இருந்ததை உணர முடிகின்றது.*

*தண்டியலங்கார அணிநூல் இலக்கண நூல், வைதருப்ப நெறி உருவாகப் பத்து நெறிகளைச் சுட்டியுள்ளதை,*

**செறிவே, தெளிவே சமநிலை இன்பம்**
**ஒழுஇசை யுதாரம் உய்த்தலில் பொருண்மை**
**காந்தம் வலியே சமாதி என்றாங்கு**
**ஆய்ந்த ஈனாரங் குணனும் உயிரா**
**ஆய்ந்த மென்ப வைதருப் பம்மே (நூ.பா.14)**

*என்ற நூற்பா சுட்டியுள்ளது.*

*படைப்பை உருவாக்கும்போது கருத்துத் தொய்வு ஏற்படாமல் செய்ய வேண்டும் (செறிவு) கருத்துக்களைப் பிறர் விளங்கிக் கொள்ளும் வண்ணம் எடுத்துரைத்தல் வேண்டும் (தெளிவு) எழுத்து வகைகள் அனைத்தும் சமமாகப் பயின்று வரல் வேண்டும். சமநிலை சொல்லாலும், பொருளாலும் இன்பம் பயத்தல் வேண்டும் (இன்பம்) ஓசையின்பம்*

இருத்தல் வேண்டும். (ஒழுஇசை). படிப்பவர் பொருள் புரிந்து மகிழ வேண்டும் (உதாரம்) பிழையின்றி சொல்ல வேண்டும். (உய்த்தலின் பொருண்மை). உலக இயல்பு மாறாமல் அமைய வேண்டும் (காந்தம்) வலியுறுத்திக் கூறவேண்டும் (வலி) ஒப்புடையவேறு பொருளோடு ஏற்றிக்கூற வேண்டும். (சமாதி)

புலப்பாட்டு நெறி முறைகள் மேலை நாட்டார்களால் கூறப்படினும், தமிழகத்தில் புலப்பாட்டு நெறி என்ற பெயர் இல்லாவிடினும், மேலை நாட்டார்கள் கூறும் புலப்பாட்டு வரைவிலக்கண கூறுகள் தமிழிலும் இருந்துள்ளதைத் தொல்காப்பியமும், உரையாசிரியர்களும் அணியிலக்கணமும் மெய்ப்பித்துள்ளன.

தொல்காப்பியர் சுட்டியுள்ளது உவமையான உத்திமுறைகள் பழந்தமிழரின் புலப்பாட்டு நெறியினைச் சுட்டியுள்ளதாகக் கருத இடம் உண்டு. கலைஞனின் படைப்புகள் வெற்றியடைய அவன் கையாளும் உத்திமுறைகள் காரணமாகின்றது.

கலைஞரின் புலப்பாட்டு நெறி தொல்காப்பியப் பூங்காவில் அமைந்துள்ள திறத்தினைத் தொகுப்பது அவசியமாகின்றது.

# அடிக்குறிப்புகள்

1. *சச்சிதானந்தம்,* **மேலை இலக்கிய அகராதி,** *ப.155.*
2. *மே. நூ., ப. 155.*
3. *ப. தெட்சிணாமூர்த்தி,* **புலப்பாட்டு நெறி,** *ப.29.*
4. *மே. நூ., ப. 29.*
5. *மே. நூ., ப. 30.*
6. *மே. நூ., ப. 29.*
7. *மே. நூ., ப. 29.*
8. *மே. நூ., ப. 31.*
9. *நா. கதிர்வேல் பிள்ளை,* **தமிழ்மொழி அகராதி,** *ப.1010.*
10. **தமிழ்ப்பேரகராதி,** *ப.2787.*
11. Peten Dixon, **Retorie**, P.2.
12. Thomas wilson. **'The Art or Retonigue', The English Critical Tradition,** p.2
13. Richenl, L. Granes, **Rhetorie and Composuhion**, p.297.
14. Collens, **Encyclopedia,** Vol.20, P.36.
15. *பி.தெட்சிணாமூர்த்தி,* **புலப்பாட்டு நெறி,** *ப.16.*
16. Oxford Ilhus trted Dixon, Vol.2, p.1448.
17. Geerge Saintslruy, '**A History of English Criticism**, p.203.
18. **Encyclopaedia Britanica,** Voc 15, P.799.
19. *தமிழண்ணல், அம்.எஸ்.இலக்குமணன்,* **ஆய்வியல் அறிமுகம்,** *ப.166.*
20. *மேலது, ப.171.*
21. *தமிழண்ணல்,* **தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகள்,** *ப.41*

22. தொல்காப்பியம், **இளம்பூரணர் உரை,** உவம இயல், *ப.396.*
23. மே.நூ. **நச்சர் உரை உவம இயல்** *ப.276.*
24. இரா. தமிழரசி, **தமிழ் இலக்கிய உத்திகள் ஓர் அறிமுகம்,** *ப.24.*
25. பி.தெட்சிணாமூர்த்தி, **புலப்பாட்டு நெறி,** *ப.52.*
26. John D.Jump, **Rhetorie Petei Dixon. The Critical Jdiom**, p.4.
27. Text book, '**Methedlogy and Rhetoric**, p.33.
28. John D.Pump, **'Rhetoric Peter Dixon'. The Critical Jdiom**, p.3.
29. நெல்லை க.சுப்பிரமணியன், **மேலை நாட்டுப் புலப்பாட்டு நெறி,** *ப.1.*
30. மேலது., *1.*
31. மேலது., *3.*
32. மேலது., *3*
33. மேலது., *4*
34. மேலது., *1*
35. **Encyclopaedia Bitanica** Voc 19, p.247.
36. சிங்காரவேலு முதலியார், **அபிதான சிந்தாமணி,** *ப.208.*
37. ம.ரா.போ.குருசாமி, **தமிழ் நூல்களுள் குறிப்புப்பொருள்,** *ப.97.*
38. சிவ.மாதவன், **பாரதியார் கவிதைகளில் அணிகலம்,** *ப.11.*

# இயல் - 4

# இலக்கணப் புலப்பாட்டுத் திறன்

கீழ்க்கண்ட வகைகளால் கலைஞரின் இலக்கணப் புலப்பாட்டுத்திறம் வகைப்படுத்தப்பட்டுள்ளது.

(1) நாடக விளக்கப் புலப்பாடு

(2) பாடம் நடத்தும் புலப்பாடு

(3) தன்னுணர்வுப் புலப்பாடு

(4) கதைச் சொல்லும் புலப்பாடு

(5) விரிவுரைப் புலப்பாடு

(6) அகத்துறை உணர்வுப் புலப்பாடு

(7) காட்சி விளக்கப் புலப்பாடு

(8) பாத்திர வாயிலாகச் செய்தி உணர்த்தும் புலப்பாடு

(9) உலக வரலாற்றுப் புலப்பாடு

(10) சமுதாயக் குறை கூறும் புலப்பாடு

(11) ஓவியக் காட்சிப் புலப்பாடு

(12) உரையாடல் புலப்பாடு

(13) சீர்திருத்தப் புலப்பாடு

(14) திருவிழாப் புலப்பாடு

(15) அறிவியல் புலப்பாடு

(16) எளிய விளக்கப் புலப்பாடு

(17) பழைய நாடகப் புலப்பாடு

(18) எழுச்சி நடைப் புலப்பாடு

(19) ஆரிய மறுப்புப் புலப்பாடு

(20) கவிதை விளக்கப் புலப்பாடு

(21) தமிழ் வழிப் புலப்பாடு

(22) உயர்வு தாழ்வு மறுப்பு புலப்பாடு

(23) விளக்கக் குறிப்புப் புலப்பாடு

(24) தருக்கப் புலப்பாடு

(25) வாழ்வியல் தத்துவப் புலப்பாடு

(26) சமுதாயச் சிந்தனைப் புலப்பாடு

(27) சொற்பொருள் விளக்கப் புலப்பாடு

(28) எதிர்நிலைப் பாத்திரத்தை உயர்த்தும் புலப்பாடு

(29) நகைச்சுவைப் புலப்பாடு

(30) மரபு மாற்றும் புலப்பாடு

(31) வரலாற்று விளக்கப் புலப்பாடு

(32) நடப்பியல் விளக்கப் புலப்பாடு

(33) புதுமை விளக்கப் புலப்பாடு

(34) தன் படைப்பை இணைக்கும் புலப்பாடு

(35) பிறர் உரையை எடுத்தாளும் புலப்பாடு

(36) தன்னை உயர்த்தும் புலப்பாடு

(37) தலைப்புப் புலப்பாடு

(38) தெய்வப் புலப்பாடு

(39) முன்னோர்களைச் சுட்டல் புலப்பாடு

(40) பழைய இலக்கியப் புலப்பாடு

(41) வடசொற்கள் புலப்பாடு

என்ற பட்டியல் சுட்டியுள்ளது.

**நாடக விளக்கப் புலப்பாடு**

"தொல்காப்பியர், 'எழுத்து' என்று ஓலையில் தலைப்பு எழுதிவிட்டு சிந்தனை உறக்கத்தில் ஆழ்ந்தார். அவர் எழுதப்போகும் இலக்கண இலக்கியக் கருவூலத்திற்கான கனவில் மிதக்கத் தொடங்கினார்.

இமைகள் மூடியிருந்தன எனினும்; நெடுநேரம் மழை நீரில் ஊறிய நெல்லுக்குள்ளிருந்து அரிசி தலை காட்டுவது போல வெள்ளை விழிகள் இமைகளின் இடுக்குகளில் ஒளிகாட்டிய வண்ணமிருந்தன.

ஏட்டில் பதிந்து உழவு செய்வதற்கு முன்பு, கையிலிருந்த எழுத்தாணியைக் காத்திருக்கச் செய்துவிட்டு அவர் இதயத்தில் ஆழ உழுதிடும் பணி நடைபெற்றுக் கொண்டிருந்தது.

செதுக்கிச் சிலை வடிக்க உளியும், ஓவியம் தீட்டத் தூரிகையும் போல 'எழுத்து' நூல் படைக்க தேவையாகும்.

எல்லா மொழிகளுக்கும் ஒலிதான் மூலம் என்பதாலும் இஃது எழுத்ததிகாரம் என்பதாலும் முதல் நூற்பா எழுத்து எனத் தொடங்குகிறது. தொல்காப்பியரைப் பின்பற்றி அய்யன் வள்ளுவரும் 'அகர முதல எழுத்தெல்லாம்' என்று திருக்குறளை எழுத்தில் தொடங்கியுள்ளது குறிப்பிடத்தக்கது.

தமிழ்மொழியில் உள்ள பல்லாயிரக்கணக்கான சொற்களை ஆய்ந்து பார்க்கும்போது, அவையனைத்தும் முப்பது எழுத்தொலிக்குள் அடங்கிடும் என்ற வரம்பு, தொல்காப்பியக் காலத்திற்கும் முன்பே வழி வழியாக வந்த ஒன்றாகும்.

காப்பியரின் அந்தக் கனவில் ஒலியெழுப்பியவாறு எழுத்துகள் அணிவகுத்து வீறுநடை போட்டு வந்து கொண்டிருந்தன.

ஒவ்வொரு முதலெழுத்தும் அவர் முன் நடந்து வந்து; வணக்கம் தெரிவித்து விட்டு வரிசையில் நின்றன. அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ,

ஓ, ஔ என ஒரு முன் வரிசை அமைந்தது. பின் வரிசையில் க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் ஆகிய எழுத்துகள் அணி வகுத்தன.

அப்போது சுவர் ஓரமாக ஒரு நிழல் தென்பட்டது. அதைத் தொடர்ந்து இன்னொரு நிழலும் தென்பட்டது. அந்த இரு நிழல்கள் எழுப்பிய ஒலி சற்று குறுகியதாகக் கேட்டமையால், அந்த வேறுபாட்டை உணர்ந்த தொல்காப்பியர் விழி திறந்து நோக்கினார்.

"ஒரு நிழல் : என் பெயர் 'அ' கரம் என்றது!,

இன்னொரு நிழல்; என் பெயர் 'உ' கரம் என்றது!"

தொல்காப்பியர் அந்த நிழல்களைப் பார்த்து; "நீங்கள் குற்றியலிகரம் குற்றியலுகாரம் என்ற வரிசையில்தான் இடம் பெறுவீர்கள். உங்களை முதல் எழுத்துகள் முப்பதின் வரிசைகள் வைக்க முடியாது" என்று கூறிவிடுகின்றார். அப்போது கையில் ஒரு கம்புடன் ஒரு புதுமையான எழுத்துருவம் அங்கே தோன்றி "இந்த முப்பதோடு என்னை இணைக்க ஒப்புகிறீர்களா?" என்று கேட்டது.

தொல்காப்பியர் "என்ன; என்னை மிரட்டுகிறாயா? நீ ஆயுதமேந்தி ஆய்த எழுத்தாக வந்தால்; நான் அஞ்சி நடுங்கி உன்னை முதல் எழுத்துக்கள் வரிசையில் நிற்க வைத்து விடுவேன் என்ற நினைப்பா?" என்று கேட்கின்றார்.

அவரது சீற்றம் உணர்ந்த ஆய்த எழுத்து; அய்யனே! என்னைத் தங்கள் விருப்பம்போல் அமர வைக்கலாம். முதல் எழுத்து வரிசையில் எனக்கு இடமளிக்காவிடினும், தேவைப்படும் முக்கியமான சமயங்களில் தான் உதவிக்கு வருவேன்!" என்று அடக்கமாகக் கூறியது.

தொல்காப்பியர் கேலியாகச் சிரித்துக் கொண்டே, எழுத்ததிகாரத்தின் முதல் நூற்பாவை எழுதி முடித்துவிட்டு; "நீ எனக்கு உதவிட வருகிறேன் என்கிறாய்; நல்ல வேடிக்கை!" என்று புன்னகை புரிந்தார்.

"ஆமாம்! தாங்கள் எழுதிய முதல் நூற்பாவிலேயே எனக்கு இடம் கொடுத்து விட்டீர்களே, என் திறமையைப் பார்த்தீர்களா?" என்று ஆய்த எழுத்து மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தது. தொல்காப்பியர்; அவர் எழுதியதைத் திரும்பப் படித்துப் பார்த்தார்.

"முப்பஃதென்ப", என்னும் தொடரில் ஆய்த எழுத்து வந்து அமர்ந்து கொண்டதை அவரும் வியப்புடன் நோக்கி நிறைவான மகிழ்ச்சி கொண்டார் என்ற கருத்து கலைஞரின் நுட்ப மதியைச் சுட்டியுள்ளது.

தமிழ் எழுத்துகள் 'அ' முதல் 'ன' இறுதியாக முப்பது எழுத்துகள் எனக் கூறுவர்; சார்பு எழுத்துக்களான குறுகிய ஒலியுடைய 'இ'கரம், குறுகிய ஒலியுடைய 'உ' கரம், ஆய்த எழுத்து ஆகிய மூன்றும் இல்லாமல் முப்பது எழுத்துகள்.[1]

**குறிப்பு**

மூன்றும் எழுத்துகள் இல்லாமல் முப்பது எழுத்துகள் தமிழின் முதல் எழுத்துகள் என்பதால்; அம் மூன்று எழுத்துக்களைக் குற்றியல் இகரம் என்றும் குற்றியல் உகரம் என்றும் ஆய்த எழுத்து என்பதை,

> எழுத்தெனப்படுவ
> அகர முதல் னகர விறுவாய்
> முப்பஃதென்ப
> சார்ந்துவரன் மரபின் மூன்றலங்கடையே[2]

**அவைதாம்**

**குற்று இயல் இகரம்**

**ஆய்தம் என்ற**

**முப்பால் புளினியும் எழுத்து ஓர் அன்ன**[3]

என்ற நூற்பாக்கள் சுட்டியுள்ளன.

எழுத்துக்களை நடிகர்களாகப் புலப்படுத்தியுள்ளது கலைஞரின் நெஞ்சம். ஆய்த எழுத்தைப் பேச வைத்த நுட்பம் நினைக்கத்தக்கது. இப்பகுதி நாடகப் புலப்பாட்டினை வெளிப்படுத்தி உள்ளது.

**பாடம் நடத்தும் புலப்பாட்டுணர்வு**

ஆசிரியர் வகுப்பறையில் மாணவர்களைப் பார்த்துக் கேட்டார். "உயிர் எழுத்துக்களை எப்படி நினைவு வைத்துக் கொள்கிறீர்கள்."

**"அய்யா நான் சொல்லட்டுமா?"**

எனக் கேட்டான் மாணவன் மணிவாசகன் - சொல்லேன் பார்க்கலாம் என்றார், ஆசிரியர்!

"பன்னிருகை முருகனை நினைவில் வைத்துக்கொண்டு; உயிர் எழுத்து பனிரெண்டு என்பதை உறுதிப்படுத்திக் கொள்கிறேன்" என்று பதில் வந்தது.

"ஓ! பக்தி பூர்வமாகப் பதில் அளித்திருக்கிறாள்? நல்லது! எனப் புன்னகை புரிந்தார் ஆசிரியர்.

பூங்கொடி என்ற மாணவி பதில் சொன்னாள்; "அய்யா! குறிஞ்சி மலர் பனிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் பூக்கும் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்கிறேன். அப்போது உயிர் எழுத்து பனிரெண்டு என்பதும் ஞாபகத்திற்கு வந்துவிடும்" என்றாள்.

ஆசிரியர், ஓர் உழவர் மகனைக் கூப்பிட்டு; "தம்பீ; நீ எப்படி உயிர் எழுத்துக்கள் எத்தனை என்பதை மனத்திற் பதிய வைத்துக் கொள்கிறாய்?" என்று கேட்டார்.

அவன் சொன்னான்; "தை மாதம் தமிழர் திருநாள் பொங்கல் வந்தால்; புத்தாடை புனைவோம் - இல்லம் புதுக்குவோம் - கதிர் வணங்குவோம் - காளை மாட்டுக்கும் பசுவுக்கும் அணிமணி பூட்டுவோம் - இவ்வாண்டு அந்த விழா முடிந்தால் அடுத்த ஆண்டு அந்த விழா எப்போது வருமெனப் பனிரெண்டு மாதங்களை எண்ணிக் கொண்டிருப்போம் - அதேபோல் பனிரெண்டு எழுத்துகள் உயிர் எழுத்துக்கள் என நினைவில் வைப்போம்" என்றான்.

ஆசிரியர் நிமிர்ந்து உட்கார்ந்து; "சரி-மெய் எழுத்துக்கள் எத்தனையென்று எவ்வாறு நினைவில் கொள்ளுகிறீர்கள்?" என்று வினவினார்.

"சபரிமலை அய்யப்பன் கோயில் பதினெட்டுப் படிகளை நினைத்துக் கொண்டால், மெய் எழுத்துக்கள் பதினெட்டு என்ற எண்ணிக்கை மனதில் நினைவுக்கு வந்துவிடும் அய்யா" என்றான் அம்மாணவன்.

பூங்கொடி, என்ற மாணவி வேகமாக எழுந்து "சேரன் செங்குட்டுவன், கண்ணகிக்குச் சிலையெடுத்திட கல் கொண்டு வர "குயிலாலுவம்" என்ற இடத்தில் கனக விசயர் என்ற ஆரிய மன்னருடன் போரிட்டு வென்றான். அவன் தலையில் கல்லேற்றச் செய்தான். அப்போது அவன் முழக்கமிட்டான்; "தேவாசுரப் போர் பதினெட்டு ஆண்டுகள் நடந்தது! பாரதப்போர் பதினெட்டு நாட்கள் நடந்தது!

இமயம் வந்து இந்தச் செங்குட்டுவன் நடத்திய போர் பதினெட்டு நாழிகையில் முடிந்துவிட்டது” என்று அவ்வீர உரையை நான் நினைவில் எப்போதும் வைத்திருப்பதால் அவ் உணர்வோடு, மெய் எழுத்துக்கள் பதினெட்டு என்பதை நீங்கள் கேட்டவுடன் சொல்லிவிட்டேன் என்றாள்.

ஆசிரியர் நயமாகப் பதில் கூறிய பூங்கொடி என்ற மாணவியைப் பாராட்டினார். பக்தி பூர்வமாகவோ அல்லது பகுத்தறிவு அடிப்படையிலோ பதில்கள் அளிக்கப்பட்டாலும் இரண்டுமே பொருத்தமானவைகளாக இருக்கின்றன எனக்கூறி அந்த மாணவர்களுக்கு அவர் வாழ்த்து தெரிவித்தார்.[4]

முருகனையும், சபரிமலை படிகளையும் சுட்டிய கலைஞர் தன் பகுத்தறிவு கொள்கைக்கு மாறுபட்டுவிடுமோ என்று எண்ணி உயிரெழுத்து பனிரண்டு என்பதற்குக் குறிஞ்சிப்பூ பூக்கும் பனிரெண்டு வருட கால அளவையும், மெய்யெழுத்துக்கள் பதினெட்டை நினைவில் கொள்ள சேரன் செங்குட்டுவன் போரிட்ட பதினெட்டு நாழிகை கால அளவு விளக்கப்பட்டுள்ளது.

**தன்னுணர்வுப் புலப்பாடு : உயிர் மெய்க்குரிய இலக்கணஉரை கூறுமிடத்து.**

தன்னுணர்வை வெளிப்படுத்தும் செய்தியைக் கலைஞர் புலப்படுத்தியுள்ளார் என்பதை,

“காந்தியடிகள் சிலையருகே அமர்ந்திருந்த என் பார்வை அங்கிருந்து வடதிசையில் நேராக இருக்கும் அண்ணா நினைவிடத்தை வட்டமிட்டது.

அந்நினைவிடத்தில் வானோக்கி நிமிர்ந்து நிற்கும் உயர்ந்த கம்பத்தின் உச்சியில் மின் விளக்கு ஒளியுமிழ்ந்து கொண்டிருந்தது.

அவர் மறைந்தபோது வானொலியில் நான் வாசித்த கவிதாஞ்சலி நினைவுக்கு வந்தது.

என்ன இருந்தாலும் தமிழ் தந்த அருங்கொடையைப் பாருங்கள். 'அ' வை முதல் எழுத்தாகக் கொண்ட அண்ணா நமக்குத் தலைவர் - இன்றைக்குக் 'க' வை முதல் எழுத்தாகக் கொண்ட கலைஞர் கருணாநிதி நமக்குத் தலைவர்.

தமிழில் 'க்' என்ற மெய் எழுத்து தான் நான்! அத்துடன் 'அ' என்ற உயிர் எழுத்து சேர்ந்ததால்தான் 'க' என்ற உயிர்மெய் எழுத்து, என் பெயரில் முதலாக அமைந்தது. அதனால் புரிந்து கொள்ளுங்கள்; 'க்' என்னும் மெய்யுடன் 'அ' என்னும் உயிர் சேர்ந்தே கருணாநிதியாக இயங்குகிறது[5] என்று குறிப்பிட்டுள்ளது மகிழத்தக்கது.

உயிரின்றி மெய் இயங்காது என்பதைக் கலைஞர் தன்னை மெய்யாகவும், அண்ணாவை உயிராகவும் கொண்டு தன் பெயரைச் சுட்டியுள்ளார். அண்ணாவின் மீதுள்ள பற்றினை விளக்க தொல்காப்பிய நூற்பாவைக் கலைஞர் கையாண்டுள்ளது நினைக்கத்தக்கது.

**கதை சொல்லி நூற்பா விளக்கும் புலப்பாடு**

'மாத்திரை' என்பதற்கு உரை கூற வந்த கலைஞர் ஒரு கதையைச் சொல்லி விளங்க வைத்துள்ளார். மேற்குத் திசையில் வெள்ளித் தட்டுக்குத் தங்கமுலாம் பூசியது போன்று ஒளியுமிழ்ந்து கொண்டிருந்த

கதிரவன் இருளில் மூழ்கிட; தொடர்ந்து பிறை நிலா, பிள்ளையார் கோயில் வாசலில் உடைத்த தேங்காயில் சிதறிய துண்டு போல வானில் மிதந்த முன் இரவு நேரம். அச்சிற்றூரின் திருக்குளத்தில் தவளைகளின் 'அரகரா' குரல் கூட அரைகுறைக் குரலாகவே கேட்டுக் கொண்டிருந்தது.

தலையில் ஒரு கிழிந்த குல்லாய் கறுப்பு நிறத்தில், உடலில் ஒட்டைகள் நிறைந்த காக்கிச் சட்டை, வரிந்து கட்டிய அழுக்கு வேட்டி இப்படி ஒரே மாதிரியாக இரண்டு பேர். நடுத்தர வயதினர். இருவர் கைகளிலும் சற்று நீண்ட பளபளக்கும் கத்தி. தெருவின் ஓரமாகத் திருக்குளத்தை ஒட்டியுள்ள புதர்களில் ஒளிந்தும் மறைந்தும், சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டும், குடிசைகள் மட்டுமே நிறைந்த அந்தப் பகுதியில் நடு நாயகமாக விளங்கிய ஒரே ஒரு மச்சு வீட்டின் பக்கமாக அவர்கள் இருவரும் வந்து சேர்ந்து வீட்டின் சுவர் ஓரம் பதுங்கிப் பதுங்கி நடந்து கொண்டிருந்தனர்.

எளியவர்கள் வாழும் அந்த வட்டாரத்தில் அவர்கள் தேட்டை (திருட்டு) போடுவதற்கு அவ்வீட்டைத் தேர்ந்தெடுத்தனர். இருவரும் ஒருவருக்கொருவர் சாடைகாட்டிக் கொண்டு; இருவரின் ஒருவன் மட்டும் துணிவை வரவழைத்துக் கொண்டு பலகணி வழியாக உள்ளே பார்வையைச் செலுத்தினான். கண்களுக்கு எதுவும் தென்படவில்லை. எண்ணெய் விளக்கின் வெளிச்சம் மட்டும் வீட்டுக்குள் நிறைந்திருப்பது தெரிந்தது. கண்ணில் எதையும் காணவில்லையென்றாலும் காதில் ஏதோ ஒரு ஒலி!

அதுவும் வலியினால் முனகுதல் போன்ற ஒலி-அ, இ, உ, எ,ஒ என்று ஒரு இளம் பெண்மணியின் குரல் ஒலி!

பலகணியருகில் நின்று கொண்டு அந்த ஒலியைக் கேட்ட ஒருவன் மற்றவனிடம் சொன்னான்; "பிள்ளைப் பேறு போல இருக்கு இடுப்பு வலி வேதனை" என்று! இருவரும் கூர்ந்து கவனித்தனர். தொடர்ந்து இன்னொரு முதியவளின் குரல் "ஒரு மாத்திரை! ஒரு மாத்திரை! என்று கேட்கவே; திருடவந்தவர்கள் பேசிக்கொண்டனர்.

"ஏய், மருத்துவச்சி, மாத்திரையொன்றைக் கொடுத்து அந்தப் பெண்ணை விழுங்கச் சொல்கிறாள் போல இருக்கிறது!" என்றான் ஒருவன்.

இருவரும் மெல்லப் பேசிக் கொண்டிருக்கும்போது அவ்விளம் பெண்ணின் குரல், ஆ, ஈ, ஊ, ஏ, ஐ , ஓ, ஔ என்று முனகல் போல ஒலிப்பதாக அவர்களுக்குக் கேட்டது. "இப்ப இதுக்கு இரண்டு மாத்திரை" என்றாள் முதியவள்.

"ஏய், ஒரு மாத்திரையில் வலி குறையவில்லை. மருத்துவச்சி இப்போது இரண்டு மாத்திரை கொடுக்கிறாள்" என்றான் இன்னொருவன்.

திருடர்கள் இருவரும் கருத்துப் பரிமாறிக் கொண்டு; "சரி, சரி வா போகலாம். பிரசவ நேரத்திலே போயி, பாவம் பெண்ணைத் துன்பப்படுத்துவது கூடாது" என முடிவு செய்து கொண்டு அங்கிருந்து புறப்பட்டனர். அவர்கள் சென்ற பிறகு வீட்டுக்குள் இளையவளும் முதியவளும் பேசிக் கொண்டார்கள்.

"பெண்ணே, அ,இ,உ,எ,ஒ ஆகிய ஐந்து எழுத்துக்களும் ஒரு மாத்திரை ஒலிக்கும் குறில் எழுத்துக்கள்; ஆ, ஈ,ஊ, ஏ, ஐ, ஓ. ஔ ஆகிய

ஏழு எழுத்துக்களும் இரண்டு மாத்திரை ஒலிக்கும் நெடில் எழுத்துகள். மெய் எழுத்துகள் ஒவ்வொன்றுக்கும் ஒலி அளவு அரை மாத்திரை!" என்று முதியவள் கூறினாள்.

இளம்பெண்,

"வாத்தியாரம்மா! எழுத்துக்களை வகை பிரித்து நன்றாகச் சொல்லிக் கொடுத்தீர்கள்! ஒரே ஒரு சந்தேகம்!" என்றாள்.

கேளடி பெண்ணே; என்ன சந்தேகம்? என்று முதியவள் கேட்டாள்.

"மாத்திரை, ஒரு மாத்திரை, இரண்டு மாத்திரை, அரை மாத்திரை என்கிறீர்களே; என்ன அது?" என்று கேட்டாள் இளம்பெண்.

"சாதாரணமாக கண்களை இமைப்பதும், விரலை நொடிப்பதும் ஒரு மாத்திரை என்ற ஒலி அளவாகும். இப்போது புரிகிறதா?" என்றாள் முதியவள்.

"புரிகிறது அம்மா - தொல்காப்பியத்திலே நீங்கள் சுட்டிக்காட்டிய இந்த மாத்திரைகளை; ஏதோ மருந்து மாத்திரை; வீட்டில் யாருக்கோ வலித்தொல்லை - பிரசவ வேதனை என்று நினைத்து இரண்டு திருடர்கள் பரிதாபப்பட்டு ஓடிவிட்டார்கள்" என்று இளம்பெண் கூற,

அப்படியா? உனக்கு எப்படித் தெரியும் என்று முதியவள் வியந்தாள்.

"அம்மா; உங்களுக்குப் பார்வை கொஞ்சம் மங்கல் - நான் அவர்களைப் பலகணிப் பக்கம் பார்த்தேன் - அவர்கள் பேசியதையும் கேட்டேன்!" என்று சொல்ல,

"பார்த்தாயா? தமிழ் இலக்கணம் நம்மைக் காப்பாற்றியிருக்கிறது - பெண்ணே! மருந்தையும் மாத்திரை வடிவில் தருவதுண்டு! ஆனால் இலக்கணத்தில் ஒலி அளவை 'மாத்திரை' என்று கூறுகிறார் தொல்காப்பியர்![6] என்று சொல்லி முதியவள் உரைவிளக்கத்தை முடித்தாள்.

மனித உடலை நோயிலிருந்து காப்பது (மருந்து) மாத்திரை. மொழியைப் பிழை இன்றி பேச பயன்படுவதும் மாத்திரை (அளவு) என்று உலகியல் உணர்வோடு நூற்பாவிற்குக் கலைஞர் உரை விளக்கம் தந்துள்ளது அவரது உலகியல் உணர்வினைப் புலப்படுத்தியுள்ளது.

திருடர்கள் தவறாகப் புரிந்து கொண்டு ஓடியதை உணர்ந்த ஆசிரியை, தமிழ் இலக்கணம் நம்மைக் காப்பாற்றி இருக்கிறது" என்று கூறுவதாகக் கலைஞர் சுட்டியுள்ளார்[7] இலக்கணம் இலக்கியத்தைக் காப்பாற்றும், இலக்கணமும் இலக்கியமும் அதுவாழும் மக்களைக் காப்பாற்றும் என்ற குறிப்புப் பொருளையும் கலைஞர் உய்த்துணர வைத்துள்ளது மகிழத்தக்கது.

**விரிவுரை அமைவில் உரை விளக்கப் புலப்பாடு**

கலைஞர் மேடைப் பேச்சு அனுபவத்தை வைத்து உரை கூற முற்பட்டுள்ளது.

"பழங்காலத் தமிழ்ப் பெருமன்னர்கள், புலவர் பெருமக்கள் எனப் பலரின் திருவுருவப் படங்கள் நிறைந்திருந்த பொலிவுமிகு மண்டபத்தில் தமிழ்த்தேன் பருகிடத் தவித்திருக்கும் ஒரு கூட்டத்தின் மத்தியில் 'இனம்' என்னும் தலைப்பில் விரிவுரையாற்றிக் கொண்டிருந்தார். விரிந்த நெற்றியும் விழிகளில் கூர்மையும், சற்றே நரைத்த இளந்தாடியும் கொண்ட வளவன் என்னும் பெருமகன். வற்றாத நதிபோலக் கருத்துக்களை வாரி வழங்கும் ஆற்றல்மிகு அறிஞன் பேசத் தொடங்கினான்,

"தமிழர்கள் என்போர் ஒரே இனம் - ஆனால் தமிழ்தான் மூன்று இனங்களைக் கொண்டது. மொழி பேசுவோர் ஒரே இனமாக இருக்கும்

போது அவர்கள் பேசும் மொழி எப்படி மூன்று இனங்களாகப் பிரிந்து விளங்குகிறது.

தமிழ் என்ற சொல்லில் 'த' என்பது வல்லினம்! 'மி' என்பது மெல்லினம்! 'ழ்' என்பது இடையினம்! இப்படி மூன்று இனத்தையும் மொழி இணைத்துக்கொண்டு வேறுபாடு விலக்கித் திகழ்கிறது! அம்மொழி பேசும் தமிழர் எத்தனை முரண்பாடு கொண்டு பல பிரிவுகளாகப் பிளவுபட்டுக் கிடக்கின்றனர். சிந்தித்துப் பாருங்கள். வல்லினம், மெல்லினம், இடையினம் ஒன்றுபட்டு 'தமிழ்' என்றே தகத்தகாய ஒளி பரப்பிடும்போது;தமிழர்கள் பல கூறுகளாகப் பிளவுபட்டுப பாழ்பட்டுக் கிடப்பது நியாயந்தானா?" (தொ.பூ.ப.65) என்று கலைஞர் ஒரு கேள்வியைக் கேட்கின்றார்.

வல்லினம், மெல்லினம், இடையினம் கலந்திருக்கும்போது தமிழர்கள் மட்டும் பிளவுபட்டிருப்பது நியாயம் தானா? என்று கேட்கும் தமிழினத் தலைவர் கலைஞரின் ஏக்கம் உண்மையின் பாற்பட்டது.

> **வல்லெழுத்தென்ப கசடதபற[8] (எழு. நூ.பா.19)**
> **மெல்லெழுத்தென்ப ங ஞ ண ந ம ஊ[9] (எழு நூ.பா.20)**
> **இடையெழுத்தென்ப யரல வழள[10] (எழு நூ.பா.21)**

என்ற நூற்பாக்களுக்கு விளக்கம் சொல்ல 'வந்த கலைஞர், ஒற்றுமையில்லாமல் சிதறிக் கிடக்கும் தமிழினத்தைக் கண்டு கலங்குவது குறிப்பிடத்தக்கது.

தம் கருத்தை, முன்னோர் கருத்தாகக் கூறும் தன்மைப் புலப்பாடு,

அந்தணர் என்பது ஆரியரைக் குறிப்பது மல்ல; மறை என்பது அவர்களது வேதமுமல்ல! தமிழரில் அறிவுசால் நல்லோர் அந்தணர் எனப்படுவர் - தமிழர் அறநெறி நூலை மறையென்றும் போற்றுவர். எனவே அறிவு நூல்கள், அறிஞர் தந்த இலக்கிய இலக்கணம், இவற்றுக்கு

யாருக்கோ பெருமை சேர்க்காதீர்! தமிழுக்குத் தமிழர்க்கு உரிய சிறப்பை, நமக்கு நாமே மறப்பதும், மறைப்பவர்க்குத் துணை நிற்பதும் தீதினும் தீது பெருந்தீது!"[11] அந்தணர் என்ற சொல் ஆரியரைக் குறிக்க வந்த சொல் அல்ல என்று பனம்பாரனார் கூறுவதாகக் கலைஞர் அமைந்திருப்பது நுட்பமான புலப்பாட்டுத் திறனாகும்.

**அகத்துறை உணர்வுப் புலப்பாடு**

சித்திரை நிலவு அவள்! நெற்றிக்கண் படைத்தவனாயினும் அவன் நித்திரையைக் கலைத்திட கனவில் வந்து ஆடக்கூடிய கட்டழகி! மொட்டவிழ்ந்த பருவமும்; மொட்டவிழா உருவமும் கொண்டவள்!

கொட்டிக் கொண்டிருக்கும் அருவியின் அருகில் நிற்கிறாள். அவள் விழிகளோ அருவியில் குளித்துக் கொண்டிருக்கும் அந்த ஆணழகனின் உருண்டு திரண்ட மேனியையே உற்று உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கின்றன. அவன், அவள் அங்கு வந்து நிற்பது அறியாமல் அருவி நீரையே ஆடையாகக் கொண்டு நீராடும் காட்சி, அவளின் வெட்கத்துக்கு விடை கொடுத்துவிட்ட காம உணர்வுக்குத் தூபம் போடுகிறது.

நல்ல உடை நனைந்து விடுமே என்ற கவலை, கடுகளவுமின்றி, அவன் மீது பாய்ந்தாள். அருவிக்குள் இருந்த அவன் நடுங்கிப் போனான். 'நாயகனே! நடுக்கமேன்!" என்றபடி அந்தத் துடுக்குக்காரி; அவனை இழுத்து உதட்டில் ஒரு முத்திரை பதித்து விட்டாள்.

அவளைத் தள்ளிவிட்டு, தொலைவில் கிடந்த துண்டை எடுத்து இடுப்பில் சுற்றிக் கொண்டு; 'என்ன காரியம் செய்தாய்?' என்று கடுமொழி கூறினான். கடுமொழிகளை வாரி இறைத்தான்.

"எல்லாச் சொற்களிலும் உயிர் ஈற்று முன், உயிர் வரும்போது உடம்படுமெய் தோன்றும் என்றும், அதன் வடிவை நீக்கார் என்றும், ஏற்றுக் கொள்வர் என்றும் சொல்லிவிட்டு 'மா + இலை = மாவிலை' என்பது உடம்படுமெய் ஆயிற்று என்றீர்கள்; நம்மைப் பாருங்கள், அந்த உடம்படுமெய்தானே இது! உயிர் ஈற்று முன் உயிர் கலக்கும்போது நம் மெய் இரண்டறக் கலத்தல் இலக்கணப்படி ஏற்கத் தக்கதுதானே! உருபு கொளல் வரையார் என்றுதானே கற்பித்தீர்கள்"[12] என்று காதலி கூறுவதாகக் கலைஞர் புலப்படுத்தியுள்ளார்.

இந்நூற்பாவிற்குப் பில் கணியம் என்ற நூலும் துணை செய்கின்றது.

**காட்சி விளக்கப் புலப்பாடு**

அகராதியில் 'அங்கதம்' என்ற சொல்லுக்கு, மார்பு - தோளணி - பழிச்சொல் - பாம்பு - பொய் - யானையின் உணவு எனப் பல பொருள் உண்டு.

'மானம்' என்ற சொல்லிற்கு தன் மதிப்பு, அகங்காரம், வலி, குற்றம், நேசம், அன்பு, கற்பு எனப் பொருள்கள் கொள்ள இடமுண்டு.

> **ஆடூஉ மகடூஉ ஆயிருபெயர்க்கும்**
> **இன்னிடை வரினும் மானமில்லை**[13]

என்பது நூற்பா. சாரியை என்றால் புறக்கூத்து என்ற பொருள் மட்டுமல்ல; சார்ந்து வரும் இடைச்சொல் என்றும் பொருள் உண்டு. தொல்காப்பியத்தில் எழுத்ததிகாரத்தில் வரும் நூற்பா ஆணையும், பெண்ணையும் குறிக்கின்ற ஆடூஉ, மகடூஉ என்னும் இரு பெயர்களில் வல்லெழுத்தேயன்றி 'இன்' சாரியையும் வரலாம் - அதனால் குற்றமில்லை என்கிறது. ஆடூஉவின் தங்கை,மகடூஉவின் அண்ணன் - மாதவியாகவும், கோவலனாகவும் நடிப்பது குற்றமில்லை என்று சொல்ல வந்த நான்

வல்லெழுத்தேயன்றி 'இன்' சாரியை, இடை வரினும் மானமில்லை என்ற வார்த்தையை நூற்பாவில் உள்ளதை அப்படியே மாணவர்க்குச் சொன்னதை, அதே நினைவில் இங்குச் சொல்லிவிட்டேன். மானம் என்றால் குற்றம் - மானமில்லையென்றால் குற்றமில்லை என்றுதான் பொருள்! என்று ஆசிரியர் கூறுவதாகக் கலைஞர் சுட்டியுள்ளது காட்சிப் புலப்பாடாகும்.

**பாத்திரங்களின் வாயிலாக நூற்பா விளக்கப் புலப்பாடு**

பத்தாண்டுகளுக்கு முன்பு கொள்ளிடம் ஆற்றங்கரையில் காலூன்றிக் கம்பீரமாக நடக்க முடியாமல், கடுமையான வெயில் கொளுத்தும் வேளையில் கம்பூன்றி நடந்து கொண்டிருந்தாள் ஒரு கிழவி. மரத்தடியில் அமர்ந்து மாடு மேய்த்துக் கொண்டிருந்த ஓர் இளைஞன் அவளைப் பார்த்துப் பரிதாபப்பட்டுக் கையில் கொஞ்சம் பழங்களுடன் கிழவியின் அருகில் வந்து, அவள் கையைப் பற்றிக் கொண்டு "பாட்டீ! இந்தக் கொளுத்தும் வெயிலில் எங்கே போகிறாய்? உன்னால் நடக்கக் கூட முடியவில்லை. இந்தா பழம் சாப்பிடு" என்று கையிலிருந்த நாவற் பழங்களைக் கொடுத்தான். அதைப்பாட்டி உற்றுப் பார்த்துவிட்டு இளைஞனை நோக்கிச் 'சுட்ட பழமா? சுடாத பழமா? என்றாள் குறும்பாக!

"கிழங்களுக்குக் கிண்டல் கேலி மட்டும் போகாதே! நான் முருகனில்லை! முதலில் பழத்தைச் சாப்பிடு!" என்றான் இளைஞன்.

கிழவி, பழங்களைச் சுவைத்துக் கொண்டே, அவன் தோளைத் தொட்டு,

"ஏன் தம்பி, இந்த வயதில் படிக்காமல், இப்படி மாடு மேய்க்கிறாயே; ஏன்?" என்றாள்.

"படித்துக் கொண்டுதான் இருக்கிறேன். விடுமுறை நாட்களில் மட்டும் இந்த வேலை" என்றான் இளைஞன்.

வீட்டில் யாருமில்லையா? என்றாள் கிழவி.

"அப்பாவுக்குக் காசநோய் - நான் பள்ளிக்குப் போகும் நாளில் அம்மாதான், மாடு மேய்த்து, பராமரித்து, பால் கறந்து வீட்டைப் பாதுகாக்கிறாங்க!" என்றான் இளைஞன்.

"அய்யோ பாவம்! இந்தக் கஷ்டத்திலே என்ன படிக்க முடியும் நீ? என்ன படிச்சு என்ன வேலைக்குப் போகப் போறே?" என்று கிழவி கேட்க,

"தமிழ் படிக்கிறேன். தமிழ் ஆசிரியராக வேலை பார்க்க ஆசை!" என்றான் இளைஞன்.

"அப்படியா? நல்லது! உன் தமிழ் ஆசான் இலக்கியங்கள் சொல்லித் தருகிறாரா?" என்று கிழவி கேட்க

"ஓ! திருக்குறள் - தொல்காப்பியம் எல்லாம் சொல்லிக் கொடுக்கிறார்!" என்றான் இளைஞன்.

"அப்படியானால் எனக்கும் கொஞ்சம் இலக்கியம் தெரியும் - நானும் ஓய்வு பெற்ற தமிழ் ஆசிரியைதான் - உன்னை ஒரு கேள்வி கேட்கிறேன், பதில் சொல்கிறாயா?" என்று கேட்க

கேள் பாட்டி ; பதில் சொல்கிறேன்! என்றான் இளைஞன்.

"என்னை அழைத்துக் கொண்டு போகச் சோழன் வரும் என்கிறேன். இப்போது சோழன் உயர்திணையா? அஃறிணையா? என்று கிழவி கேட்க

"பாட்டி நீ சொல்லும் சோழன், உன் மகனாகவோ, பேரனாகவோ இருந்தால் உயர்திணை! அல்லது அந்தச் சோழன் பேருந்தாக இருந்தால் அஃறிணை!" என்றான் இளைஞன்.

தம்பி ; எப்படிச் சொல்கிறாய்? இலக்கணம் என்ன? என்று கிழவி கேட்க

"பாட்டி ; இதோ தொல்காப்பியம் எழுத்ததிகாரம்

**அஃறிணை விரவும் பெயர்**

**இயல்பு மாருள வே**[14]

என்று கூறுகின்றான்.

இரு திணைக்கும் உரிய பெயரைப் பொதுப் பெயர் என்பார். அதனால் நான் சொல்வது பொருந்துகிறது. ஆண்பால் உயர்திணையான சோழன், அஃறிணையானது இப்போது இயல்பு"

"அன்புப் பேரனே! அன்று ஔவையிடம் ஆற்றலைக் காட்டியதாகக் கூறப்படும் அந்த முருகனைக் காட்டிலும் நீ சிறந்தவன். அவன் தமிழாற்றலைப் பழத்தில் காட்டினான். நீயோ பழந்தமிழ் இலக்கணத்தில் காட்டியுள்ளாய்! வாழ்க! வாழ்க!" என்று மூதாட்டி வாழ்த்துவதாக கலைஞர் உரை படைத்துள்ளார். இளைஞனைக் கிழவி,

வாழ்த்திக் கொண்டிருக்கும்போதே சோழன் வந்துவிட்டான்; இல்லை, இல்லை வந்துவிட்டது. இளைஞன் உச்சியில் முத்தமீந்து கிழவி, பேருந்தில் அவன் உதவியுடன் ஏறிக் கொண்டாள்.[15] என்று பாத்திரங்களின் வாயிலாக நூற்பாவிற்கு விளக்கம் சுட்டியுள்ளது நயம்மிக்கது.

இருதிணை பொதுப் பெயரை உணர்ந்த சோழன் பெயர் தாங்கிய பேருந்தைக் கலைஞர் சுட்டி இலக்கண எடுத்துக்காட்டை எளிமை ஆக்கி உள்ளது மகிழத்தக்கது. இந்நூற்பாவிற்கு, சிறுவனும், தமிழ் மூதாட்டி ஔவையும் குறிப்புப் பொருளாக அமைந்துள்ளனர்.

**உலக வரலாற்றோடு உரை விளக்கப் புலப்பாடு**

"இலக்கியத்தில் அரசியலைக் கலக்கக் கூடாது என்ற உறுதிப்பாட்டுடன் தொல்காப்பியப் பூங்காவுக்குள் நுழைந்துள்ளேன். ஆங்குள்ள மலர்களை நுகருகிறேன் எனினும்; இயற்கையாகவே சில எடுத்துக்காட்டுகள் கட்சி அரசியலாக இல்லாமல் பொது அரசியலாக அமைந்திடுவது ஒதுக்க முடியாததாகிவிடுகிறது என்ற கலைஞரின் எண்ணம் அவர் கொண்ட அரசியலுணர்வினைச் சுட்டியுள்ளது.[16]

இரண்டாம் உலகப் போர் நடந்தபோது அமெரிக்காவைச் சார்ந்து சில நாடுகளும், இட்லரின் ஜெர்மனியைச் சார்ந்து சில நாடுகளும் போரில் ஈடுபட நேரிட்டது. இருபுறமும் தலையாய நாடுகளாக இறுதி முடிவெடுக்கும் செல்வாக்குடன் இருந்த நாடுகளைச் சார்ந்துதான் நேசநாடுகளின் வரிசையும், அச்சு நாடுகளின் வரிசையும் அமைந்தன என்பதை கடந்த கால வரலாறு உணர்த்தியுள்ளது. இக்கருத்து இரண்டாவது உலகப் போர்க்காலம் பற்றியது.

இந்நாளில் நாடுகள் என்ற நிலையில் இல்லாவிடினும், ஒரு நாட்டில் உள்ள அரசியல் இயக்கங்கள், அந்நாட்டின் ஆளுங்கட்சிகளையோ அதிபர்களையோ தேர்வு செய்திட, அணிகள் அமைகின்ற இன்றியமையாமை ஏற்படுகிறது.

தனித்து நின்று போட்டியிடுகிற வலிமை, பேரியக்கங்களுக்கு இருப்பினும்; வலிவுடன் இருப்பது தவறில்லை என்னும் எச்சரிக்கையுடன் பல்வேறு இயக்கங்கள் கொண்ட அணிகள் ஒன்றாக இணைகின்றன.

அவ் அணிகளில் இடம் பெற்றாக வேண்டிய அவசியமும் கட்டாயமும், தமக்கெனத் தனித்தன்மையே இல்லாத, சார்ந்து மட்டுமே இருக்கக்கூடிய நிலை இயக்கங்களுக்கு ஏற்பட்டு விடுகிறது.

அவ் இயக்கங்களின் நிலைமைதான் குற்றியலிகரம், குற்றியலுகரம் ஆய்தம் என்ற மூன்று எழுத்துக்களுக்கும் அமைந்துள்ளது என்பது தெளிவான உண்மையாகும்.[17]

தமக்கென்று தனித்தன்மை இல்லாததும், சார்ந்து இயங்கிட வேண்டுமென்பதுமான நிலையுடைய குற்றியலிகம் (இ) குற்றியலுகரம் (உ) -ஆய்தம் (ஃ) என்னும் மூன்று எழுத்துக்களும், தாம் சார்ந்திடும் முதல் எழுத்துக்களின் பிறப்பிடத்தைத் தம் பிறப்பிடமாகக் கொண்டு ஒத்த அளவில் தமக்குரிய இயல்பில் இயங்கும்[18] என்பது இலக்கணம். இந்நூற்பாவின் விளக்கத்தால் உலக வரலாறு அறிந்த அரசியல்வாதி கலைஞர் என்பதை உணர முடிகின்றது.

**சமுதாயக் குறைபாட்டைக்கூறி உரை விளக்கப் புலப்பாடு**

அரண்மனை போன்ற தோற்றமும், ஆதிசேடன்மீது அறிதுயில் கொள்வது போன்ற முகப்பு மண்டபமும் கொண்ட அந்த மடத்தின் திண்ணையில் ஒரு குட்டிச் சாமியார் அமர்ந்து வெளியிலிருந்து யாரோ வருவதற்காக எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

அருகில் உள்ள பூசை அறையின் கதவு, உள்ளிருந்து திறக்கப்படும் தாழ்ப்பாள் ஒலி கேட்கிறதா? என்று காதை தீட்டிக் கொண்டும், கண் இமை கொட்டிக் கொண்டும் கவனித்திடவும் தவறவில்லை.

கதவு திறக்கப்படவில்லை. அவர் எதிர்பார்த்துக் கணக்கிட்டிருந்த நேரத்திற்கு முன்பே, ஆதினகர்த்தருக்கு இலக்கியப் பாடம் கற்பிக்கும் ஆசான், நெற்றியில் பட்டை நாமத்துடனும் கையில் புத்தக அடுக்குடனும் குட்டிச்சாமியின் அருகில் வந்தவாறு,

**என்ன சின்னச்சாமி; நலந்தானே?**

*என்றார்.*

*“அய்யா, ஆசான்! நான் இந்த மடத்தின் இளையவர்! என்னை என்னவோ; தீக்குளித்துச் செத்தானே கீழப்பழூர் சின்னச்சாமி; அவனை அழைப்பதுபோல் அழைக்கிறீரே?” என்று சின்னச்சாமி பதிலளித்தார்.*

*‘மன்னிக்கவும்; அவன் சிங்கத் தமிழனாச்சே!’ என்று ஆசான் கூற*

*‘நான் இங்கே காவல் இருப்பதால் அசிங்கத் தமிழனா?’ என்று சின்னச்சாமி கோபமுள்ளார்.*

*“அதிருக்கட்டும்; இரவுக்கிளி வந்திருப்பார்களே; பறந்து போய் விட்டார்களோ?” என்று ஆசான் கேட்க,*

*“ஓய், ஆசான்! இதென்ன கொஞ்சம் கூட பயம் இல்லாமல் கேட்கிறீர்?” என்று சின்னச்சாமி அதட்ட,*

*“இதற்கென்ன பயம்? அரியைப் பூசிக்கும் மடாதிபதிகள் அயர்ந்து போய்த் துயில் கொள்கிறார்களா? அல்லது தொடர்ந்து தியானமா? என்று கேட்கிறேன்” என்று ஆசான் சமாளிக்க,*

**அதற்காக இலக்கணத்தை மீறிக் கேள்வி எழுப்புவதா? என்று சின்னச்சாமி வினவ**

*“துறவிகள் சிலர், துறவு இலக்கணத்தையே மறந்தும் துறந்தும் எவ்வளவோ காலமாகிறதே! ஆமாம்; சின்னசாமி! நான் எந்த இலக்கணத்தை மீறிவிட்டதாகக் கூறுகிறீர்?” என்று ஆசான் சேட்க.*

*“இரவுக்கிளி போய் விட்டார்களா? என்று பன்மையிலே கேட்கிறீர்! ஒரு மடாதிபதிதான் உள்ளே இருக்கிறார்; மடாதிபதிகள் என்று பன்மையில் உரைக்கிறீர்! உமது கூற்றுப்படி அறைக்குள்ளே எத்தனை மடாதிபதிகள்? எத்தனை கிளிகள்? ஒரு மடாதிபதியும் பல கிளிகளுமா? அல்லது ஒரே கிளியும் பல மடாதிபதிகளுமா? என்று தன் இலக்கணப் புலமையைச் சின்னச்சாமி காட்டிவிடுகின்றார்.*

"சின்னசாமி; குழப்பாதீர்! நான் இலக்கணப்படி தான் கேட்டுள்ளேன். ஒருவனையும் ஒருத்தியையும் சுட்டிச் சொல்லும் பன்மைச் சொல்லும், ஒன்றனைச் சொல்லும் பன்மைச் சொல்லும், உலக வழக்கில் உயர்த்திச் சொல்லும் சொல்லலாம். இலக்கண வழக்கல்லவாம் என்று, தொல்காப்பியர் 'பால்வழுவமைதி' என இலக்கணம் கூறியிருக்கிறார்"[19] என்று ஆசான் கூற,

"அப்படியா; என்று குட்டிச்சாமியார் வாயை அகலமாய்த் திறக்கவும், அறையின் கதவு மெல்லத் திறக்கவும் சரியாக இருந்தது. பஞ்சணையிலிருந்து விடுபட்ட பஞ்சவர்ணக்கிளி, நடக்க முடியாமல் நடந்து, மடத்தின் பின்புற வழியாக வெளியேறுகிறது" என்று கலைஞர் உரை படைத்துள்ளார்.

பால்வழு அமைதிக்கு உரை கூறவந்த கலைஞர் சமுதாயக் குறையான மடாதிபதியின் காம விளையாட்டைச் சான்றாகக் காட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது. இப்பகுதியில் துறவிகள் துறவு இலக்கணத்தை மறந்து எவ்வளவு காலமாகின்றது என்று கூறும் தொடர் உண்மையின் பாற்பட்டது.

**ஓவியக் காட்சியின் வாயிலாக உரை விளக்கப் புலப்பாடு**

"ஓவியம் வரைந்து கொடுக்கிறேன். சிற்பியாயிற்றே நீங்கள். நீங்கள் விரும்பும் ஓவியம் போலவே சிலையொன்று வடித்துக் கொடுங்களேன்."

ஓவியம், முதலில்!

சிலை, அடுத்ததாக!

காதலி, காதலன் கேட்டது போலவே ஓவியம் தீட்டி முடித்து, அவனை அறைக்குள் அழைத்து ஓவியத்தைக் காட்டினாள்.

காதலன் காதலி கட்டித் தழுவியிருக்கும் கவின்மிகு ஓவியம். இறுகத் தழுவியிருந்ததில் அவளது ஒரு மார்பகம் மட்டும் எடுப்பாகத் தெரிந்தது. இருவிழிகளில் ஒரு விழி கன்னத்தோடு கன்னம் வைத்திருந்த காதலனின் கன்னத்தில் மறைந்திருந்தது. காதலனின் தோளில் அவளது அவிழ்ந்த கூந்தல், மல்லிகைச் சரத்துடன் புரண்டு கொண்டிருந்ததால் அவன் தோள் ஒன்று மட்டும் தெரிந்தது. அவளது மற்றொரு தோளையும் அவன் கரங்கொண்டு அணைத்திருப்பது போல அவ் ஓவியம் விளங்கியது.

"இரண்டு கண்கள் இருப்பினும் ஓவியத்தில் ஒன்றுதான் தெரிகிறது. ஓவியத்தில் இரண்டு மார்பகங்கள் காணப்படவில்லை. ஒன்றுதான் உள்ளது. மூங்கிலனைய உன் தோளையும் அவ்வாறே தீட்டியுள்ளாய். கண்கள், தோள்கள், மார்பகங்கள் என்றில்லாமல்; கண்ணும், தோளும், மார்பகம் மட்டுமே காண்கிறேன். தொல்காப்பியர் கூற்று அப்படியே தோய்ந்திருக்கிறது இந்த ஓவியத்தில்!" என்று தலைவன் பாராட்டுவதாகக் கலைஞர் உரைவிளக்கத்திற்கு ஓவியத்தைக் காட்டியுள்ளார்.

கண், தோள், மார்பகம் - இவையும் இவை போன்ற பிறவும், பன்மைப் பொருளை உணர்த்தும் சொற்கள் என்றாலும் இரண்டு கண்கள், இரண்டு தோள்கள் என்பது போல் பன்மையாகவே உணர்த்தப்பட வேண்டுமென்ற வரையறை கிடையாது. இவற்றையும், இவை போன்ற பிறவற்றையும் ஒருமையில் உணர்த்தினாலே பன்மையென விளங்கிவிடும்.[20] வினைக்கேற்பப் பன்மையிலும் உணர்த்துவதில் தவறவில்லை[21] என்பது நூற்பாவின் பொருளாகும்.

**உரையாடல் வழி உரைவிளக்கப் புலப்பாடு**

"ஓ ; நீங்கநூல் நிலையமே வைத்திருக்கிறீர்களா? ஆயிரம் நூல்களாவது இருக்குமா?" என்று கண்ணகியைப் பார்த்து அருணன்

கேட்டவாறு விழிகளை அவள் மீது மேயவிட்டான். அவளுக்கு அதைப் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. வேறு பக்கம் திரும்பி, புத்தகங்களைத் தேடினாள்!

'திருக்குறள் உரை நிறைய இருக்கிறது!'

என்றார்.

கண்ணகி, இடைமறித்து "அது வேண்டாம் பாரதிதாசனின் 'பாண்டியன் பரிசு' இருக்கிறதா?"

இதுவரையில் மௌனமாக இருந்த கண்ணகியின் தாய், "அப்படியென்றால் தொல்காப்பிய உரையாவது இருக்கிறதா?" என்று கேட்கவே - உடனே உரிமையாளர் கோகலே, "மகாபாரதம் மலிவுப் பதிப்பு இருக்கிறது" என்றார்[22] என்ற தொடர்கள் சுட்டியுள்ளது.

மேற்குறித்த உரையாடலில் நேருவின் உலகச் சரித்திரம் காந்தியடிகளின் சத்திய சோதனை, அண்ணாவின் இருபரம்பரைகள், வெள்ளை மாளிகை, புலவர் குழந்தையின் இராவண காவியம், பாரதிதாசனின் பாண்டியன் பரிசு, எதிர்பாராத முத்தம், தமிழச்சியின் கத்தி, மகாபாரதம் ஆகிய நூல்களைக் கலைஞர் சுட்டியுள்ளது நினைக்கத்தக்கது. ஒவ்வொரு வீட்டிலும் ஒரு நூலகம் இருக்க வேண்டும் என்ற அறிவுரையைக் கலைஞர் இடையே அமைந்திருப்பது வரவேற்கத்தக்கது.

**சீர்திருத்தக் கருத்தோடு விளக்கப் புலப்பாடு**

சீர்திருத்த முறையிலே திருமணம்னு பத்திரிகையிலே எழுதியிருக்கு - அழைப்பிதழிலே "விவாக சுப முகூர்த்தம்னு மஞ்சள் தடவி, அய்யர் தேதி, லக்னம் எல்லாம் குறித்துக் கொடுத்திருக்கிறாரோ? என்று ஒருவர் வினவ -

"அப்படியா? விவாக சுப முகூர்த்தம்னா எழுதியிருக்கிறாரு? பார்த்தீங்களா? அய்யர் அவர் வேலையைக் காட்டியிருக்காரு! பரவாயில்லை; அய்யர் வந்து நாள் குறிச்சிருந்தாகூட, இது பெரியார் சொன்ன முறைப்படி எனது மகன் மணவிழாதான். அதனால் 'மணவிழா அழைப்பிதழ்' என்றே தலைப்புப் போடுங்க!" என்று கூற, எனது மகன் என்று கூறுவது தவறு என்று எனக்கு மகன் என்பதே சரி என்று இலக்கணத்தைக் குறிப்பிடுகின்றார்.

எனது மகன் என்று எழுதும்போது; உயர்திணையுடன் 'அது' என்ற ஆறாம் வேற்றுமை உருபுக்குப் பதிலாக, நான்காம் வேற்றுமை உருபாகிய, 'கு' வருதல் வேண்டும். இல்லையேல் 'எனது' என்று குறித்திடும்போது திணை தவறாகிவிடும். எனவே 'கு' உருபை இணைத்து 'எனக்கு மகன்' என்பதே சரியாகும்."[23] (தொ.பூ.ப.110-114) என்ற கருத்தை உணர்த்த திருமண மடலையும், சீர்திருத்த கருத்தையும், ஆரியரை எதிர்க்கும் சிந்தனையையும் ஒரு சேர கலைஞர் அமைத்துள்ளார்.

**திருவிழாவின் வாயிலாக விளக்கப் புலப்பாடு**

பாரதப் போரில் அரவானைக் களப்பலி கொடுத்து போர் தொடங்குவதாகவும், அவன் இறந்தவுடன் மஞ்சள், குங்குமம், மாங்கல்யம் இழப்பதற்காக அலிகள் கலந்து கொண்டு மாரடித்து அழுது புலம்பி மாங்கல்யம் அறுப்பது என்பது ஒரு திருவிழாவாக நடைபெறுவதுண்டு.

கனவில் கண்ணபிரான் வருவது போலவும் அவனுடன் பஞ்ச பாண்டவர்களும் பாஞ்சாலியும் இருப்பது போன்றதுமான காட்சி - பாண்டவர்களின் வனவாசத்தில் ஒரு கட்டமாக, யாருமறியாமல் மாறுவேடத்தில் அவர்கள் அஞ்ஞாத வாசம் செய்ய வேண்டுமென்பது

*நிபந்தனை! இல்லையேல் தருமன், துரியோதனனுடன் ஆடிய சூதாட்டத்தில் வைத்து இழந்த நாடு கிடைக்காது. பாண்டவர்கள் ஒவ்வொருவரும் மாறுவேடம் பூண்டு மறைந்து வாழ்கிறார்கள். அவர்களில் அலியாக மாறி, மறைந்து திரியும் அர்ச்சுனன், கண்ணபிரானைத் தனியாக சந்திக்கிறான்; ஆம்; அரவாணி இராதாவின் கனவில்!*

“*அர்ச்சுனா! ஆண்மை திரிந்த பேடியைப் பற்றி இலக்கணம் சொல்லும் தொல்காப்பியம், ஆண்மை திரிந்த பிறகு அவர்களை ஆண்மைத் தன்மையைச் சுட்டுகிற சொல்லுடன் சேர்த்துச் சொல்லக் கூடாது. பேடி வந்தான், போனான், பேசினான் என்று சொல்லாமல், பேடி வந்தாள், போனாள் என்றே சொல்ல வேண்டும்*[24] என்பதை

**ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி**

**ஆண்மை அறிசொற்கு ஆகு இடன் இன்றே**[25]

*என்ற நூற்பா சுட்டியுள்ளது.*

*இராதா கனவில் கண்ணன் பேசுவதாகக் கலைஞர் குறிப்பிட்டுள்ளார். தமிழகத்துத் திருவிழாக்களில் அரவாணிகளின் விழா தென்னார்க்காடு மாவட்டத்தில் நடைபெற்று வருவதைக் கலைஞர் உரை விளக்கத்திற்காக எடுத்தாண்டுள்ளார்.*

**அறிவியல் செய்தியோடு உரைவிளக்கப் புலப்பாடு**

“*டார்வின் சித்தாந்தம், குரங்கிலிருந்து மனிதன் தோன்றிய விதம் பற்றி அறிவியல் ரீதியில் விளக்கி வெற்றி கண்டிருக்கிறது. உலகில் பரிணாம வளர்ச்சி காரணமாகப் பல்கிப் பெருகிய மனித சமுதாயத்தில் ஏறத்தாழ ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, முறையான வாழ்வுக்குத் தயாராகிக் கொண்டது தமிழ் இனம்.*

உயிர் வாழ்வது வேறு; அவ் வாழ்வை வரையறுத்து வாழ்க்கை நடத்துவது என்பது வேறு. அத்தகைய வாழ்க்கை அமைந்திட தொடர்புச் சாதனங்கள் தேவை. அந்தத் தொடர்புச் சாதனங்களில் முதன்மையானதும், காலம் கனியக் கனிய இன்றியமையாததாக இருக்கின்றது.[26]

உலகில் பல தகுதிகளில் உருவான இனங்கள் மொழிச் சாதனத்தைப் பயன்படுத்திக் கொள்ளத் தொடங்கின . அவற்றில் மொழியில் இலக்கியம் கண்டு, அதற்கு இலக்கணமும் கண்டு, ஐயாயிரம் ஆண்டுக்கு முன்பு ஆரம்பமான வளர்ச்சிக்கு இரண்டாயிரம் ஆண்டுக்கு முன்னர் மெருகேற்றிக் கொண்ட பெருமையும் வரலாற்றுச் சிறப்பும் தமிழ் இனத்துக்கு உண்டு.

தமிழ் மக்களின் நாகரிகத்திற்குரிய சான்றாகத் தொல்காப்பியப் பொருளதிகாரம் விளங்குகின்றது. இப்பகுதியில் பழங்கால வாழ்க்கை முறைக் குறிப்புகள், ஒழுக்கம் பற்றிய பல செய்திகள், தொல்காப்பியத்திற்கு முன்பே தமிழ் நிலத்தில் நடைமுறையில் இருந்தன எனினும்; அவற்றையும் செப்பனிட்டுச் சேர்த்தும் தம் காலத்து வாழ்க்கை முறை நிலைமைகளையும் தொல்காப்பியர் தொகுத்து, இலக்கிய மணம் வீசும் இலக்கணப் பூங்கொத்தாக வழங்கியிருக்கிறார் என்பது தான் நம்மைப் பெருமிதம் கொள்ளச் செய்வதாகும்.[27]

நிலத்தை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனப் பிரித்து ஒவ்வொன்றிலும் முறையே கண்ணன், முருகன், இந்திரன், வருணன் என வழிபடு தெய்வங்களைக் கற்பித்துக் கொண்டு போற்றி வாழ்ந்தனர்.[28]

வறண்டு வளம் திரிந்துவிட்ட 'பாலை' நிலங்களுக்குத் தான் எந்தத் தெய்வமும் இல்லை என்பது, இந்தச் செய்யுளில் இருந்து தெரிகிறது.

பாலை நிலத் தெய்வமாக வர யாரும் விரும்பவில்லை போலும்!

பகுத்தறிவுச் சிந்தனையில் வாழும் கலைஞர் வாய்ப்புக் கிடைக்கும் போது பகுத்தறிவுச் சிந்தனைக் கருத்துக்களைக் கூறத் தயங்குவதில்லை. பாலைக் கொடுமைக்காகப் பயந்து ஒரு தெய்வமும் வரவில்லையோ[29] என்று கேட்பது குறிப்பிடத்தக்கது.

**எளிய விளக்கம் கூறி உரைவிளக்கப் புலப்பாடு**

பொருளதிகாரத்தில் பழந்தமிழ்ச் சொற்கள் அல்லது சொற்றொடர் களுக்கு உரையெழுதிய உயர்ந்தோர் பலரும்; அன்றும் சரி, இன்றும் சரி அவற்றைப் படிப்போரின் புலமை குறித்துக் கவலைப்படாமல்; இசை நிகழ்ச்சியில் குழுமியிருக்கின்ற ஆயிரக்கணக்கான 'ரசிகர்'களுக்கிடையே சுமார் நூறு பேருக்கும், இசைவாணருக்கும் மட்டுமே தெரிந்த இசை நுணுக்கங்களை வெளிப்படுத்திப் பாடுவதே போல்; இயல்பாக அனைவருமே படித்து எளிதாகச் சுவைக்கக்கூடிய உரைகளையோ, விளக்கங்களையோ வழங்காமல் கற்பாறைப் பாதைகளிலேயே இலக்கியப் பயணத்தை நடத்தியுள்ளனர்[30] என்ற தொடர்கள் பழைய உரைகளின் கடின தன்மையைச் சுட்டியுள்ளன.

திணை என்றால் ஒழுக்கம், குலம், நிலம் தொடர்பாக வழங்கப்படும் பெயர்.

உயர்திணை என்பது மக்களையும், அஃறிணை என்பது மக்கள் அல்லாதவற்றையும் குறிக்கும்.

அகத்திணை என்பது தலைவன் தலைவியரின் உள்ளங்கள் இணைதல், பிரிவு, ஊடல் போன்ற செய்திகளையும் பொதுவில் இல்லற வாழ்க்கையையும் கூறுகிற அகம் எனப்படும் உள்ளத்தை அடிப்படையாகக் கொண்டது.

ஆடவன் காதலித்துப் பெண் காதலிக்காமல் இருந்தாலும், பெண் காதலித்து ஆடவன் காதலிக்காமல் இருந்தாலும் அதைக் 'கைக்கிளை' என்றும், வலியச் சென்று கூடுவதற்கு முனையும் பொருந்தாக் காதலைப் பெருந்திணை என்பதுதான் தொல்காப்பியர் கருத்து.

ஐந்திணை என்பது, தலைவனும் தலைவியும் அன்பால் பிணைந்து கூடி மயங்குவதைக் குறிஞ்சித் திணை எனவும், கூடிய பிறகு அவர்கள் பிரிந்திடும் நிலையைப் பாலைத்திணை எனவும், ஊடல் கொள்ளுவதை மருதத்திணை எனவும், ஊடல் காரணமாகவோ வேறு காரணமாகவோ பிரிவு காலத்தில் காத்திருந்து வரவு பார்த்தலை, முல்லைத் திணை எனவும், பிரிந்த நாட்களின் எண்ணிக்கை பெருகிட இரங்கலுக்குரிய நிலை அடைவதை நெய்தல் திணை எனவும் கூறப்படுகிறது.[31]

தலைவன் தலைவிக்கிடையே கூடலோ, ஊடலோ, பிரிவோ எதுவும் எல்லாத் திணைகளிலும் நிகழக்கூடியதே! இங்கே திணை என்பதை இடமென்றோ நிலமென்றோ கொண்டிடல் வேண்டும்.[32]

அகத்திணைக்கு மாற்றாக அல்லாமல் வேறொரு திணையாகக் குறிக்கப்படுவதே புறத்திணையாகும்!

அகம் எனப்படுவது; காதல், இல்வாழ்க்கை என்று ஆடவர் பெண்டிர் இருவர்க்கு மட்டுமே உரியதானதும், பிறருடன் பகிர்ந்து கொள்ள முடியாததுமானது என்றிருக்கும் நிலையில், புறம் என்பது

இல்வாழ்க்கையைக் கடந்து வெளியே நிகழக்கூடிய போர்கள், பொருளீட்டும் செயல்கள், பொதுப்பணிகள் போன்ற பகிர்ந்து கொண்டு ஆற்றக்கூடியவை என்ற நிலையுடையதாகும்.[33]

ஐவகை நிலங்களிலும் நிகழ்வுற்ற மாந்தர் வாழ்வில் வீசிய தென்றல், அடித்தபுயல், வெடித்த நில நடுக்கம் போன்றவற்றை அடுத்தடுத்துத் தொடர்ந்து எழுதுவதற்கு இந்த எளிமையான விளக்கம் பயன்படுமென்று நம்புகிறேன்.[34]

அகத்திணையில் காணும் நிகழ்வுகள் போல, புறத்திணை நிகழ்வுகளும் பொதுவாக எல்லா நிலங்களிலும் சிறப்பாக, குறிப்பிட்ட நிலங்களிலும் காணக் கூடியவை.

தொல்காப்பியத்திற்கு உரை எழுதியவர்கள் புலமை பெற்றவர்களுக்கு மட்டும் புரியும்படி எழுதியுள்ளதைக் கலைஞர் சுட்டி, பாமரனும் புரிந்து கொள்ளும் வகையில் திணைக்குரிய விளக்கத்தினைக் கூறி இருப்பது மகிழத்தக்கது.

**பழைய நாடகக் கதை விளக்கப் புலப்பாடு**

“வேண்டாம் ; நாட்டுப் பொறுப்பை கைவிடாதீர்கள் இந்தக் காட்டுப் பூவையும் கைவிடாதீர்கள்!”

“காட்டுப் பூவா நீ? இல்லை - என் உயிர்ப்பூ - ஆம்; என் உயிர்ப்பே நீ தான்!”

“மறதியா? இந்த ரதியையா? இதோ மறக்கமாட்டேன் என்பதற்கு அடையாளம்; இந்தக் கணையாழி!”

துஷ்யந்தன் சகுந்தலையின் விரலில் கணையாழி அணிவித்து, அவள் விரல்களை முத்தமிடுகிறான்....

*(நாடகத்தின் மற்றக் காட்சிகள் தொடர்வதற்கு முன்பு மேடையின் பக்கமுள்ள ஒப்பனை அறைக்கு இருவரும் வருகிறார்கள்; ஒப்பனை திருத்தவும், உடைகள், அணிகள் திருத்தவும்)*

*துஷ்யந்தன் வேடமிட்டவன், சகுந்தலை வேடமிட்டவளை ஒப்பனை அறையில் நெருங்கி வந்து;*

*"என்ன தாமரை, கணையாழி அணிந்த விரல்களை முத்தமிட்டேனே; இன்னும் சுவைக்கிறதா அது?" என்று கேட்டுப் பல்லை இளிக்கிறான்.*

**நாடகத்தில்தான் நான் சகுந்தலை! நீங்கள் துஷ்யந்தன்!**
**வாழ்க்கையிலும் அப்படியே இருந்தால் என்ன?**
**பண்போடு பேசுங்கள்; உமது வயது என்ன? என் வயது என்ன?**[35]

*"திடமான வாலிபர்தான் நான் - நீ இன்றைய அரும்பு; இன்னும் சில நாட்களில் மலர்! அரும்பு விரைவில் மலராகும் பெண்ணே; என் போன்ற ஆடவனை நினைத்து உருகினால்!"*

**வீண் கனவு வேண்டாம்; விலகிச் செல்வீர்!**
**நாடகத்தில் அடுத்த காட்சி; நான் உன்னை மறந்துவிடுவது போல!**
**கணையாழி காணாமற் போன பிறகு தானே அந்தக் காட்சி!**
**காணாமற் போவதற்குள் கட்டித்தழுவி ஒரு முத்தம் கொடுத்தால்...**
**அது இப்போதே காணாமற் போகட்டும்**[36]

*என்று அவள் கணையாழியைக் கழற்றி ஒப்பனை அறைக்குள் வீசுகிறாள் - வெளியே வேகமாக நடக்கிறாள்; நடக்கும்போதே ஆசிரம முடியலங்காரத்தைக் கலைக்கிறாள்.*

*"அய்யோ பெண்ணே; கணையாழியை மீனல்லவா விழுங்க வேண்டும்? அதுவல்லவா கதை?"*

அதற்குள்ள நீ என்னை விழுங்கிவிடாதே

தாமரை ; நீ மிதப்பதற்கேற்ற தண்ணீர்க்குளம் நான்! [37]

அவளை இழுக்கிறான். அவள், சீறிச் சினந்து அவனைத் தள்ளிவிட்டு ஓடி விடுகிறாள். அந்தக் கோபத்தையும் ரசித்தவாறு நாடக துஷ்யந்தன் அசைவற்று நிற்கின்றான். அவர்களுக்குள் நடந்தது ஒரு தலைக்காதல். அவ்வொரு தலைக் காதலுக்குப் பெயர் தான் கைக்கிளை என்று பெயர் என்று உரை கூறும் கலைஞரின் எளியநாடக வெளிப்பாடு குறிப்பிடதக்கது.

கைக்கிளையை விளக்க சாகுந்தலா நாடக நடிகர்களைக் கலைஞர் இணைத்துள்ளது நயம்மிக்கது.

கடற்கோள் எனக் குமுறிப் பொங்கும் வலிமையினால் காமந்தணித்துக் கொள்ளப் பாய்ந்திடும் செயலும், 'பெருந்திணை' எனப்படும்.

பெருந்திணை விரைவில் அழிவைத் தருவதால் கலைஞர் கடற்கோள் என்று பொருந்தாக் காமத்தைச் சுட்டியுள்ளார்.

இருபாலார்க்கும் - இளமை தீர்ந்த பின்னும்; இனி வரும் சந்ததியினர்க்கும், அந்தச் சந்ததியினர் உள்ளிட்ட மொத்தச் சமுதாயத்திற்கும்; "இருக்கும் காலம் வரையில் என்ன செய்யலாம்" எனும் நினைப்பே இருக்க வேண்டுமேயல்லாமல்; இன்பத்துப் பாலை இறுதிப் பாலாகக் குறளில் வைத்திருப்பதற்குக் காரணம் 'இறுதி! இறுதி!' என இனியும் பருகிக் கொண்டிராமல் 'இதுவே இறுதி' என எண்ணி முடிப்பதற்காகத்தான் என்பதை உணர்ந்து மன்பதைத் தொண்டினைத் தொடருதல் வேண்டும்[38] என்ற தொடர்கள் கலைஞரின் எண்ண

வெளிப்பாடாகும். இத்தொடருள், கால எச்சரிக்கையும், சமுதாயத் தொண்டின் சிறப்பையும் ஒருசேரக் காட்டியுள்ளார்.

அல்லவை பட்டியலில் வருவது எவை எனக்காட்டவே; அறிவுச்சுடர் கொளுத்தி இவையும் அல்லவை என உணர்த்த பெருந்திணை பற்றிக் குறிக்கப்பட்டது.[39]

அதற்காக விளையும் போர்களில் ஒன்றையும் ஔவைத் தமிழச்சி விவரித்துப் புகழ்வதைப் புறநானூறு குறிப்பிட்டுள்ளதைக் கலைஞர் கையாண்டுள்ளார்.

புறத்திணையியல் ஐந்தாம் நூற்பாவிற்கு உரை எழுத வந்த கலைஞர் எழுச்சி நடையில் நூற்பா கருத்தைவளமாகப் படைத்துள்ளார்.

**எழுச்சிநடை புலப்பாடு**

"ஒரு வீரத் திருமகனைப் பெற்றதற்காகப் பெருமையடைகிறேன். நீ வாள் சுழற்றிப் பகைப் புலத்தை வெற்றி காண விடை கேட்பது கண்டு வீங்குகின்றன என் தோள்கள்! விம்மிப் புடைக்கிறது என் நெஞ்சம்! உம்; கோட்டை நோக்கிப் புறப்படு! கொடிப்படை, குதிரைப்படை, ஆட்படை, யானைப்படை எதுவானாலும் பொடிப் பொடியாக்கு! ஆணை கிடைத்துவிட்டது; அரசிளங்குமரா! புறப்படுக!"[40] என்ற தொடர்கள் வீரனொருவரை மன்னன் பாராட்டுவதாக அமைந்துள்ளது. இத்தொடர்களில் சொற்கள் எழுச்சியை உண்டு பண்ணுவனாகப் படைக்கப்பட்டுள்ளன.

**மறுப்புப் புலப்பாடு**

பிறருடன் போட்டியிட்டும் அல்லது தாமே முயற்சி மேற்கொண்டும் வெற்றி பெற வாய்ப்புண்டு . வாகை என்பது போரில்

அடையும் வெற்றியை மாத்திரம் குறிப்பிடுவதல்ல. வாழ்க்கையில் ஓர் உன்னதமான குறிக்கோளை நல்லொழுக்க வழியில் அடைவதைக் குறிப்பதாகவும் கருத இடமுண்டு.

வாகையின் இயல்பு, இலக்கணம் இவற்றையொட்டி தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் அதன் பாகுபாடு விவரிக்கப்பட்டிருக்கிறது.

புறத்திணையில் வரும் இருபதாம் நூற்பா "அறுவகைப்பட்ட பார்ப்பன பாக்கமும்" என்று தொடங்குகின்றது.

அதென்ன "பார்ப்பன பக்கம்?" தொல்காப்பியத்தில் பார்ப்பனர் எங்கே வந்தனர்? கேட்கத் தோன்றும்!

அவர்கள் வந்து விட்டனர். ஆனால் அவர்கள் வரப்போகின்றனர் என்பது, சொல்லதிகாரத்திலேயே சுட்டிக்காட்டப்படுகிறது! முன்னால் மணியோசை வந்தால், பின்னால் யானைவரும் என்பதை எப்படியோ அறியாமல் இருந்துவிட்டனர் தமிழ் மக்கள்![41]

கழனிகளில் கதிர் நடுவே களை முளைப்பது; அறிவித்து விட்டு முளைப்பதில்லை[42] என்ற தொடரில் வடமொழியைக் கலைஞர் களர் என்று சுட்டியுள்ளது ஆழம் பொதிந்தது.

வடமொழி ஒலி நீக்கப்பட்ட தமிழ் எழுத்துக்களுடன் அமைந்த சொற்கள் வடசொல்லாகும்.

தொல்காப்பியர் காலம் கி.மு.ஏழாம் நூற்றாண்டு என்று ஆய்வு செய்துள்ள ஆன்றோர்கள் அறுதியிட்டுக் கூறுகின்றனர். 2500

ஆண்டுகளுக்கு முன்பே, வடமொழி, மோப்பம்பார்த்து முடித்து, ஆரியர்கள் நுழைவுக்குத் தமிழ் நிலத்தில் வழி அமைத்துக் கொடுக்கப்பட்டுவிட்டது.[43]

அவர்கள் வந்து அமர்ந்துவிட்டார்கள் என்பதற்குச் சான்றாகத்தான் வாகைத் திணையில் பாகுபாடு குறிக்கும் அறுவகைப்பட்ட பார்ப்பன பாக்கமும் என்ற நூற்பா அமைந்திருக்கிறது.

ஆரியர் வரவும், அவர்கள் புதிதாக வகுத்த தமிழர்க்குப் புறம்பான மரபும், தொல்காப்பியர் வாழ்ந்த காலத்தில் அல்லது அவர் தோன்றுவதற்கு முன்பு நம் நிலத்தையும் இனத்தையும் வளைத்து விட்டன என்பது தெளிவாகும்![44] ஆரியர்கள் சூழ்ச்சியால் தமிழ் நிலத்தை வளைத்துவிட்டனர் என்பது கலைஞரின் எண்ணம்.

பார்ப்பனர் கடமையாக ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறு வகையும்; அரசர் கடமையாக ஓதல், வேட்டல், ஈதல், படை உதவி வழங்குதல், குடிகளைப் பாதுகாத்தல் ஆகிய ஐந்து வகையும்; வணிகர்க்கும் வேளாளர் எனும் உழவர் பெருங்குடியினர்க்கும் கடமைகளாக ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வணிகம், கால்நடை பேணுதல் ஆகிய ஆறு வகையும், கடந்த காலம், நிகழ்காலம், வருங்காலம் என்னும் மூவகைக் காலத்தையும் கணித்து ஆய்ந்திடும் நல்லறிவாளன் கடமையும், எட்டு வகை ஒழுக்கம் போற்றும் துறவோர் கடமையும், பாகுபாட்டினை அறிந்த படைத்தலைவர் கடமையும், வாள் கொண்டோர், தோள் கொண்டோ போரிட்டு வெற்றி பெறுதலன்றி இந்தக் கடமைகள் வழியில் வெற்றி விளைப்பதே நிலையானது என்று புலவர்கள் கூறுவார்கள் என்பது தொல்காப்பியர் எண்ணம்.[45]

இவற்றில் கோடிட்டுக் காட்டப்படும் கடமைகள் வாழ்க்கை நெறியை உயர்த்தக் கூடியவை எனினும்; பார்ப்பனருக்கும், பாராள்பவருக்கும் ஏனையோர் சிலருக்கும் பாகுபாடு செய்த கடமைகளில் வேட்டலும் வேட்பித்தலும் தமிழ் நிலத்துக்கு வித்தியாசமானவைகளாகும்.[46]

வேட்டல் என்றால் வேள்வித்தீ வளர்த்தல்; வேட்பித்தல் என்றால் வேள்வி செய்ய வைத்தல் ஆகும்.[47]

வேள்வியும் யாகமும் வேதியர்களின் சாதுர்யத்தால் தமிழ் நிலத்தில் வேர்விட்டுக் கிளை பரப்பி விழுதுகளும் விடத்தொடங்கி விட்டன. "வீரத்தால் வெற்றிகளைக் குவிக்கலாம்; அதற்கு வெஞ்சமர் புரிவதுடன் விவேகத்தாலும் வாழ்க்கையின் வெற்றிக்கு விதவிதமான நற்செயல்களை நாடு கடந்த அளவில் கூட நடத்தி மகிழலாம். அவற்றை மறுத்து எதற்காக இந்த வீணான வேலையாக வேள்வியும் யாகமும்? வேண்டாமிது!" வேந்தன் தரப்பு இப்படி வெகுண்டு பேசுகிறதே என்று வேதியர் தரப்பு விட்டுவிடுமா?

சகலகலா வல்லமையுடன் சாதுர்யப் பொடியும் தூவினால்; அந்த மௌடீகச் சாம்பிராணிப் புகையிலே மன்னர்கள் மயங்கித்தானே தீர வேண்டும்.[48]

வேட்டலும் வேட்பித்தலும் மெல்லத் தொடங்கிக் காட்டு வெள்ளமெனக் கரைபுரண்டன.

வேல், வாள், ஈட்டி, கட்டாரி எனப் போர்க் கருவிகள் ஏந்தி, புரவி மீதமர்ந்து போர் போர் என முழங்கியவர்கள்,

"காதலிலே கவிதையிலே களம் போகும் பேச்சு; காதல் தலைவனுக்கும் தலைவிக்கும் தாயகமே மூச்சு!"

எனக் குரல் எழுப்பியவர்கள் ஓம குண்டங்களுக்கு முன்னால் குனிந்து வணங்கிக் கூன் போட்டுக் கொண்டு "கோமயம்" பருக வேண்டும்; வேள்விக்கும் யாகத்திற்குமாக![49] என்ற தொடர்களால் தமிழ் மன்னர்களும் ஆரியத்திற்குத் துணைபோனதைக் கலைஞர் குறிப்பிட்டுள்ளார்.

இதன் தொடர்ச்சி, இமயம் வரை சென்று கண்ணகி சிலை அமைக்கக் கல் எடுத்து, கனகவிசயர் தலையிலே ஏற்றிவந்தானே; அந்த சிலப்பதிகாரத்துச் சேரன் செங்குட்டுவனையும் விட்டபாடில்லை! வேத மந்திரம் அந்த வீராதி வீரனையும் வீழ்த்திக் காட்டியது! (தொ.பூ.ப.243)

படையெடுப்பும், கண்ணகிக்கான கல் எடுப்பும் முடிந்து கனகவிசயரையும் கொண்டு வந்து சிறையிலும் அடைத்தாயிற்று. மாடலமறையோன் என்னும் ஆரிய குருநாதர் அரசனைச் சந்தித்தார். அருள் உபதேசம் பொழிந்தார். அது பலித்தது. வடவேந்தர்கள் விடுதலை செய்யப்பட்டனர். மாடலனின் அறிவுரையை ஆணையாக ஏற்று வேள்விக்கும் ஏற்பாடு செய்தான். அந்தவேலை, வில்லவன் கோதையிடம் விடப்பட்டது[50] என்ற தொடர்களால் தமிழ் மண்ணில் ஆரியம் புகுந்ததைக் கலைஞர் குறிப்பிட்டுள்ளது நினைக்கத்தக்கது.

"பழந்தமிழகத்தில் மக்களை நிலவகையாற் பகுத்தல் அல்லாது முழுவகையாற் பகுத்துரைக்கும் வழக்கம் என்றுமே நிலவியதில்லை"

வருணங்கள் வர, வேள்வி யாகம் என்ற தருணங்கள் தோன்ற வாகைத் திணையிலேயே பார்ப்பனர் வருகை தந்துவிட்டனர்.[51]

"இத்திணையை 'வாகைத் திணை' என்பதைக் காட்டிலும் 'ஆரியர் வருகைத் திணை' என்றால் அற்புதமாய்ப் பொருந்தும்! (தொ.பூ.ப.245) என்று கலைஞர் குறிப்பிட்டுள்ளது நினைக்கத்தக்கது. தன் கருத்தோடு இணைந்த, நாவலர் சோமசுந்தர பாரதியாரின் கருத்தையும்,

பெரும்புலவர் வெள்ளை வாரணாரின் கருத்தையும் கலைஞர் அவர்கள் தொகுத்துள்ள திறம் பாராட்டத்தக்கது.

**கவிதையால் நூற்பாவிற்கு விளக்கப் புலப்பாடு**

அவலச் சுவை நிறைந்த காஞ்சித் திணையின் துறைகளைப் பட்டியலிடும் நூற்பாவும் அதற்குச் சுருக்கமான பொழிப்புரையாக கலைஞர் கவிதை வடிவில் படைத்துள்ளதை,

அகத்திணை புறத்திணையில்
அகத்திணை திணைகளுக்கும்

விளக்கம் தருகின்ற பணியினை அகல
விளக்கின் ஒளிபோலத் தந்துள்ளேன் எனினும்;

அனைத்துத் திணை விரிவாக்கம்
நினைத்தெழுத இயலாவிடினும்

காஞ்சித் திணையை விட்டுவிட்டால்
காஞ்சியே கனவில் வந்து கடிதோச்சி

மெல்ல எறியாதா? அந்த
வெல்ல மனம் எனக்குத் தெரியாதா?

அனுதினமும் அணுப்பொழுதைப் பிளந்து அதிலொரு
நுனிப்பொழுதை நூறு பங்காக்கி அந்தத்

தனிப்பொழுதைக் காஞ்சிக்கே தந்து நெஞ்ச
இனிப்புடனே காலம் கழிப்பவன் நான்!

நிலையில்லா வாழ்க்கையினை நினைவூட்டி
நீர்மேல் குமிழியெனும் உவமையும் சொல்லி,

அலைகின்ற மனத்துக்கு நங்கூரம் பொருத்தி
மலையளவுப் புகழை மன்பதையில் நிறுத்தி,

நிலைபெறவே வாழ்வதுதான் நிகரில்லாக் காஞ்சி.
தலைகொடுத்துத் தன்மானம் காத்திடக்

கூற்றுவனின் ஆற்றல் கூறி அச்சுறுத்தும் போதும்
'நேற்றிருந்தார் இன்றில்லை' எனும் கூற்றுதனை

உணர்ந்தவன்தாய் நீ யென் றுரைத்து
உலகில் எஞ்சியுள்ள நற்பணியை

ஒரு துளியும் மிச்சமின்றி முடித்திடவே
உத்திரவு தருவதுதான் காஞ்சி.

பேணுதற்கு யாருமில்லாமல் போய்விடினும்,
பேய் கூட உதவிடவே வந்துவிடும், உன்

பேருழைப்பால் தமிழர் நலன்
சீர்பெற்றுத் திகழ்வதையே புகழ்ந்தவாறு!

மாற்றாரை வென்று திரும்பாவிடின் தன்னை
மாங்குடி மருதன் பாடாது போகட்டு மென

வஞ்சின முரைத்த பாண்டிய மன்னனாய்
வஞ்சகப் பகைவரை வீழ்த்திடும் காஞ்சி

விழுப்புண்பட்டு வீழ்ந்துள்ள கணவனை
விழிநீரால் குளிப்பாட்டு செய்வித்த வீரமகள்,

இவன் குருதி என் குருதியுடன் கலக்கும் வரை
இருவரையும் யாருமே தொடாதீர்கள்!

கொழுநனை மாய்த்த கொடுவேல் கொண்டே
குத்திக்கொண்டு சாய்ந்த குலக்கொடியின் காஞ்சி.

தந்தையும் தாயும் சாவூர் செல்லும் நேரம்
தந்திடுவீர் அவர் மகளை யென்று

பெண் கேட்டுப் போர் தொடுத்து வந்தவனை, முதுகில்
புண் பெற்று ஓடவைத்த ஒப்பற்ற காஞ்சி

வேல் பாய்ந்த தன் மார்பையும்
பால் நிலா போல் முகத்தையும்

ஆல் படரும் கொடி போல
ஆளன் தலையோடு அவள் சேர்த் தணைத்த காஞ்சி.

இன்னொரு மனையில் இறந்த கணவனுக்காகப்
பொன் நிகர் மேனியாள் புலம்பித்தவித்து

பின்னொரு வாழ்க்கை எதற்காக வென்று
மின்னலாய்ப் பாய்ந்து நெருப்புக்கிரையான காஞ்சி.

கன்னல் அல்ல உயிர் என்று காட்டுதற்கும்
கற்பின் பெருமை நிலை நாட்டுதற்கு மட்டுமே

பெண் இனத்தார் செய்யும் இந்தத் தியாகம்;
மண்ணில் ஆண் எவன் செய்வான் எனக் கேட்டு,

கண் இனமாம் பெண் இனத்தை வாழவைத்து,
கண் விழிக்க வைத்த காஞ்சி.

இத்திணையை இதற்குமேல் எழுத எனக்குத்
திணைத்துணையும் தெம்பில்லை; அதனாலே நிறுத்துகிறேன் [52]

*என்ற கவிதை அடிகள் சுட்டியுள்ளது. எழுதிய கவிதை காஞ்சித்திணை எனினும் அக்கவிதையின் ஊடே காஞ்சியில் தோன்றிய அறிஞர் அண்ணாவின் நினைவை கலைஞர் இணைத்துள்ளனர் என்பதை,*

காஞ்சித்திணையை விட்டுவிட்டால்
.... ............
வெல்லமனம் எனக்குத் தெரியாதா?
தனிப்பொழுதைக் காஞ்சிக்கே தந்து நெஞ்ச
இனிப்புடனே காலம் கழிப்பவன் நான்[53]

*என்ற அடிகள் சுட்டியுள்ளது.*

*தமிழ்வழியைச் சுட்டும் புலப்பாடு : தமிழ் மண்ணிற்கென்று தனிவழி உண்டு. அவ்வழியை ஆரிய நாகரிகம் கலைக்க முற்பட்டுள்ளது என்பதை,*

மறையோர் தேயத்து மணமுறை எட்டு என்று
தொல்காப்பியர் சுட்டிக்காட்டுவது ஏன் என்று புரியும்.

'பிரமம்' என்று பெயர் பெறுமாம்
'பிரசாபத்தியம்' எனும் பெயரோ;
...................
........ ...........

ஆசிரியன் ஒருவன் வேள்வி மூட்டச் செய்து

அதன் முன்னே ஆரணங்கைக் காணிக்கையாக்கல் தெய்வீக மணம்

என்றும்,

. . . . . . . . . . . . . . .

. . . . . . . . . . . . . . .

அதற்குப் பெயர் 'அசுர' மணமென்பார்;

அவள் விருப்பத்திற்கு மாறாக நடத்தும் மணம்; "இராக்கத" மென்றும்

.. . . . . . . . . . . . . .

கட்டி வைக்கும் மண நிகழ்வுக்கு

அட்டியின்றிப் பெயர் வைத்தார் "பைசாச" மென்றும்[54]

என்று குறிப்பிட்டுள்ள கலைஞர் வெள்ளை வாரணார் கருத்தை அப்படியே எடுத்தாண்டு தம் கருத்திற்கு வலிவு சேர்த்துள்ளது நினைக்கத்தக்கது.

**சீர்திருத்த கருத்துப் புலப்பாடு**

பெரியாரின் பாசறையில் பயின்ற கலைஞர் நல்ல நேரம் பார்த்துத் திருமணம் செய்யும் கருத்தினை வலியுறுத்திய வேதியர்களுக்கு ஒரு கேள்வியைக் கேட்பது போல் கண்ணகியின் கதையைச் சுட்டி சீர்திருத்த புலப்பாட்டை வெளியிட்டுள்ளதை,

நல்ல நாள் நல்ல நேரம் கணித்துத்தான்

எல்லோரும் மகிழ மணவிழா நடந்தபின்

நாளும் நேரமும் துணையாய் நில்லாது,

வாளும் வேலுமாய் அவள் வாழ்வைத் துளைத்தது!

பார்ப்பனர் ஓதிய மந்திரமும் – கோள்

பார்த்துக் குறித்த நல் ஓரையுமே

பாதுகாத்திடவில்லை அவர்களையென்று

பகரும் சான்று, சிலப்பதிகாரம்![55]

என்ற தொடர்கள் சுட்டியுள்ளது.

நல்ல நேரம் பார்த்து திருமணம் நடந்த கண்ணகியின் மங்கலநாண் நிலைத்ததா? என்று கலைஞர் கேட்கும் நாத்திக வாதத்திற்கு விடைகூற முடிவதில்லை.

**உயர்வு தாழ்வை மறுத்தல் புலப்பாடு**

இளம்பூரணர் எழுதிய உரையில்

அந்தணர் அரசர் வணிகர் என

மேலோர் மூவர் என்பது

ஆண்டிருந்த மூவேந்தர் மரபே என்றும்

அவர் ஆளுகையின் கீழிருந்த குடிமக்களையே

கீழோர் என்று குறித்தனர் என்றும்

ஆன்றோர் பலர் காரணம் தந்துள்ளனர்.[56]

'மேலோர் மூவர்' என்றது, அந்தணர், அரசர், வணிகர் என்னும் மேற்குலத்தார் மூவரையும் குறித்தது எனவும் 'கீழோர்' என்றது நாலாம் வருணத்தவராகிய வேளாண் மாந்தரைக் குறித்ததெனவும் கொண்டு உரைவரைந்த இளம்பூரண அடிகள், "இதனாற் சொல்லியது, முற்காலத்துக் காரணம் பொதுப்பட நிகழ்தலின் எல்லார்க்கும் ஆம் என்பதும், பிற்காலத்து வேளாண் மாந்தர்க்குத் தவிர்ந்தது எனவும் கூறியவாறு போலும்" என விளக்கத்தந்துள்ளார். இவ்விளக்கத்தினைக் கூர்ந்து நோக்குங்கால் "எல்லார்க்குங் காரணம் பொதுப்பட நிகழ்ந்த முற்காலம்" என்றது, தமிழகத்தில் நால்வகை வருணப் பாகுபாடு இடம் பெறாத தொன்மைக் காலத்தினையும் அக்காலத்தில் எல்லா

மாந்தர்க்கும் வதுவைச் சடங்காகிய காரணம் பொதுவாக அமைந்த திறத்தினையும் 'பிற்காலத்து வேளாண் மாந்தர்க்குத் தவிர்ந்தது' என்றது, பிற்காலத்தில் ஒரு குலத்துக்கு ஒரு நீதியாக வருண வேறுபாட்டினை அடிப்படையாகக் கொண்டு தரும சாத்திரத்தில் வகுக்கப்பட்ட வதுவைச் சடங்கினை வேளாண் மாந்தர் ஏற்றுக் கொள்ளாமையால் அவர்க்கு அது தவிர்ந்தது என்னும் உண்மையினையும் உய்த்துணரவைத்தல் அறியத்தகுவதாகும்.

ஆசிரியர் தொல்காப்பியனார் தமிழ் மக்களை நிலவகையாற் பகுத்துரைத்ததல்லது குலவகையாற் பகுத்துரையாமையாலும், இந்நூற்பாவில் 'மேலோர் மூவர்' என இன்றிவர் என்னும் எண்ணியற் பெயராற் குறிக்கப்பெற்றோர் தமிழகத்தை ஆட்சி புரியும் முடியுடை வேந்தர் மூவருமே என்பதனை 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு! எனவரும் நூற்பாவில் ஆசிரியர் தெளிவாகக் குறித்துள்ளமையாலும் நன்குணரலாம். இனி ஈண்டுக் 'கீழோர்' என்றது அம்மூவேந்தரது ஆட்சியின் கீழ் வாழும் குடிமக்கள் எல்லோரையும் குறிப்பதாகும்.

நச்சினார்க்கினியரின் உரையும் விளக்கமும் இளம்பூரணர் உரையினை அடியொற்றி அமைந்தன[57] என்ற வெள்ளை வாரணார் உரையைக் கலைஞர் முழுதும் எடுத்தாண்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**தருக்க நடை புலப்பாடு**

அய்யர் என்னுஞ் சொல் தலைமைச் சிறப்புடைய பெரியோரைக் குறித்து வழங்குந் தனித்தமிழ்ச் சொல்லாகும். அச்சொல் ஈண்டு தமிழ்க்குல முதல்வராகிய முன்னோரைக் குறித்து நின்றது. இதனை 'ஆர்ய' என்னும் வட சொல்லின் திரிபாகப் பிறழ வுணர்ந்து இத்தொல்காப்பியச் சூத்திரத்திற்கு மாறுபடப் பொருள் கூறினாருமுளர்.

*பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் அய்யர் காரணம் யாத்தனரெனவே, அவை தோன்றாத காலம் மிக முந்தியதென்பதும், அக்காலத்தில் இத்தகைய வதுவைச் சடங்குக்கு இன்றியமையாமை நேர்ந்ததில்லையென்பதும், 'அய்யர் யாத்தனர் காரணம் என்ப' எனத் தொல்காப்பியனார் தமக்கு முன்னோர் கூற்றாக வைத்துரைத்தலால் இக்கரண வரையறை அவர் காலத்துக்கு முன்னரே தமிழ் முன்னோர்களால் விதிக்கப்பட்டதென்பதும் நன்கு துணியப்படும். முன் பொய்யும் வழுவுந் தோன்றாத களவு மணத்தின்பின் அவை தோன்றியதற்குத் தமிழரொடு தொடர்பில்லாத வேற்றினத்தராது வருகையே காரணமாதல் வேண்டும்*[58] என்ற தொடர்கள் கலைஞரின் தருக்கப் புலமையைச் சுட்டியுள்ள திறம் நினைக்கத்தக்கது.

**வாழ்வியல் தத்துவப் புலப்பாடு**

காமம் மறைந்தபின் இல்லாளோடு அறம் செய்து அமைதியுறல் மாந்தர் கடன் என்று தொல்காப்பியர் கூறியதற்கு உரையாகக் கலைஞர்,

வாழ்க்கையின் இறுதிக் காலம் பற்றிக் காப்பியர் வரைவதை
வற்றாத நதியொன்று கடலில் கலப்பதோடு ஒப்பிடலாம்!

மலைகளில் தோன்றிக் காடுகள் கழனிகள் தாண்டி;
ஆழியை அடையுமுன்னர் ஆயிரம் நன்மைகள் புரியும்.

முடிவுரையை அலைகடலில் எழுதுவதால்; நதி
முழுவதும் முற்றுப் பெற்றதாக நினைப்போரில்லை!

வாழ்ந்து முடித்தோரின் வரலாற்று ஏடுகளும் - அவர்
வழித் தோன்றல்களால் தொடர்ந்து வாழ்வதுண்டு!

நதிக்கும் அந்த நிலைமைதான்;
நல்லோர்க்கும் அந்தப் பெருமைதான்!

உதயத்தில் 'சுள்' எனக் கதகதப்புடன் பிறந்து
உச்சியேறிக் கடும் வெப்பம் பொழிந்து - மேற்கில்

மறைவதற்கு முன்பு மந்தமாருதம் வீசி ; இந்த
மன்பதைக்கே மகிழ்வு தரும் கதிரோன் போல

இல்லற வாழ்வில் பயன் எல்லாம் பெற்றும் தந்தும்
இறுதிக் கட்டத்தில் இருக்கும் முதியோர்,

இனிய மக்கள் தம்மைச் சூழ்ந்து இருக்கவும்,
இதம்தரும் உற்றார் இணைந்து இருக்கவும்;

அறவழியொன்றே இறைவழியென்று
அமைதியிற் கழிப்பதே அரும்பெரும் பேறாம்![59]

என்ற தொடர்கள் சுட்டியுள்ளது. இளமை இன்பம் பயப்பது முதுமையில் அமைதியைத் தேடுவது வாழ்வின் சிறப்பு என்ற தத்துவத்தைக் கலைஞர் நுட்பமாக விளக்கியுள்ளார்.

**சமுதாய சிந்தனைப் புலப்பாடு**

பழம் பெரும் தமிழ் இலக்கியங்களாயினும், இலக்கணக் கருவூலமாம் தொல்காப்பியமாயினும்; பெண்களை ஊமையாகவும், அடிமைகளாகவும் சித்தரிக்கின்றன எனக் குறை கூறுவோர் உண்டு.

எழுச்சியுற்ற பெண்கள் என்றும், பெண்ணுரிமைப் போர் என்றும் முழக்கங்கள், மூலை முடுக்குகளில் எல்லாம் எழுந்துள்ள இந்தக் காலத்திலேயே; இன்னமும் பெண்களின் சுதந்திரம் பல இடங்களில் கேள்விக் குறியாகவே இருப்பதை அன்றாடம் அறிய முடிகிறது!

அறிவுடையவர்கள் பட்டியலில் ஆடவர் இடம் பெற்றிருப்பது போலவே பெண்டிரும் இடம் பெற்றுள்ளனர்.

பள்ளி, கல்லூரிகளில் நடைபெறும தேர்வுகளில் ஆண் மாணவர்களைக் காட்டிலும், பெண் மாணவர்களே எண்ணிக்கை அடிப்படையில் அதிக விழுக்காடு இருக்கிறார்கள் என்பது அதிகாரபூர்வமான ஆதாரமாகவும் அமைந்து வருகிறது; ஆண்டுதோறும்! ஆட்சி நிர்வாகப் பொறுப்புகளிலும், அலுவல் பொறுப்புகளிலும் கூட அவர்கள் ஆடவர்களுடன் போட்டியிடுகிற அளவுக்குப் புகழ் பெற்று விளங்குவதையும் இக்காலத்தில் காண முடிகிது.

இம்முன்னேற்றத்துக்கிடையிலேயும் அங்கொன்றும் இங்கொன்று மாகவும் சிலபகுதிகளில் பரவலாகவும் ஆணாதிக்கத்தின்பிடியிலே பெண்கள் சிக்கிச் சீரழிவதும்; குருட்டு நம்பிக்கைகளுக்கு ஆட்பட்டு வைதீகப்படுகுழிகளில் வீழ்வதும், மாயம் மந்திரமென்ற அறியாமைக்கு அடிமையாகிப் பகுத்தறிவை இழப்பதுமான செயல்களில் ஆடவர் எண்ணிக்கையைப் பெண்டிர் எண்ணிக்கை மிஞ்சக் கூடியதாகவே இருக்கிறது.

இந்தச் சூழலிலும் பெண்களின் முன்னேற்றம்; விஞ்ஞானம், கல்வி; ஏன் பாதுகாப்பு போன்ற துறைகளில் கூட கணிசமான அளவுக்கு வளர்ந்து கொண்டுதானிருக்கிறது.

இக்கால கட்டத்துப் பெண்களின் நிலையோடும், அவர்கள் அனுபவிக்கும் உரிமைகளோடும், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட கால கட்டத்துப் பெண்களின் நிலை - ஆண்களின் நிலை ஆகியவற்றைப் பழம்பெரு வரலாறுகளிலோ, இலக்கியங்களிலோ

படித்துப் பார்த்துவிட்டு அவற்றைத் தவறாகவும், தரக் குறைவாகவும் விமர்சித்துக் கொண்டிருப்பதைவிட; அக்கால நிலையை அறிந்து கொள்ளத் துணை புரியும் சாதனங்களாக மட்டுமே அவற்றைப் பார்க்க வேண்டும் - பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதைப் புரிந்து கொள்வதே அறிவுடையோர் செயலாகும்.

அக்கால நிலையைச் சுட்டிக்காட்டும் இலக்கியங்களை, நாம் வழி காட்டிகளாகக் கொள்ள வேண்டும் என்பதில்லை.

அவை நமக்கு நல்லதாகவோ அல்லதாகவோ ஊட்டும் அடிப்படைக் கருத்து என்ன? முழுமையாகவோ, பாதி அளவோ கால் பகுதியோ அவற்றில் நாம் எடுத்துக்கொண்டு அந்த அடிப்படையில்; எந்தத் துறையானாலும் அந்தத் துறையில் முற்போக்கு வழியில் நடை பயில நினைக்கக்கூடாதா? அது அடிப்படைத் தவறா?

அடிப்படையையே தகர்த்துவிட்டு முற்றிலும் புதுமை காண வேணடுமென்று வாதிட்டால்; நம் இல்லத்தில் பாட்டன் - பாட்டிகள் - தாய் தந்தையர் படங்களோ, பயன்படுத்திய பொருள்களோ கூடப் பழமையின் சின்னங்கள, பயன்பட முடியாதவை அல்லது கூடாதவை என்று ஒதுக்கப்பட வேண்டியவைகள்தான்.

பழமை இலக்கியங்கள்; நடக்க முடியாதவை நடந்ததாகக் கூறுபவைகளை நம்பாமல் விட்டுவிடலாம். இன்று மின் சக்தியால் ஓடும் புகை வண்டிகளுக்கும் - அதுபோல இயந்திர உதவியுடன் பறக்கும் விமானங்களுக்கும் இயக்கும் சக்கரங்கள் இருப்பது போல; அமைப்பில் வடிவில் மாற்றமிருந்தாலும் அவற்றைப் போலத் தான் பழங்கால மன்னர்களின் தேர்களும் இருந்தன. இன்றைக்கும் சிற்றூர்களில் மாட்டு

வண்டி சக்கரங்கள் இருக்கின்றன. சீற்றுந்து பேருந்துகளுக்கு கூட அப்படித்தான்!

பண்பாட்டிலும், பழக்க வழக்கங்களிலும், வாழ்க்கை முறையிலும் மலைக்கத்தக்க மகத்தான மாற்றங்கள் ஏற்படினும் அனைத்துக்குமே அசைக்க முடியாத அளவுக்குஅடிப்படைகள் மாறாமல் இருக்கின்றன.

பொருளியலில் இடம் பெற்றுள்ள நூற்பா; அடக்கம், அமைதி, நேர்மை, உண்மையை வற்புறுத்தும் சொல்வன்மை, நல்லறிவு, பிறரிடம் காண இயலாத அருமை - இவை பெண்ணின் பண்புகள் என அறிவிக்கின்றதேயல்லாமல்; பெண்ணுக்கிடப்படும் அறிவுரை ஆணைகள் எனக் குறிப்பிட்டுக் கூறவில்லை.

**செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்**
**அறிவும் அறிவும் பெண்பாலன**[60]

என்பது தொல்காப்பியம் உணர்த்தும் பெண்ணின் நிலையாகும்.

தொல்காப்பியர், பெண்களுக்கு சொல்லப்பட்டுள்ள இயல்புகள் போற்றத்தக்கவையே தவிர, தூற்றத்தக்கவையல்ல என்பதை நடுநிலையோடு சிந்தித்தால் உணரமுடியும்.[61]

பெண்ணினத்தின் முன்னேற்றம் நாட்டின் முன்னேற்றம் என்ற கொள்கையுடைய பாவேந்தர் பாரதிதாசன் வழிவந்த கலைஞரும் அக்கொள்கையைக் கைக் கொண்டுள்ளதை மேற்குறித்த கருத்துத் தொடர்கள் சுட்டியுள்ளன.

**சொற்பொருள் விளக்கப் புலப்பாடு**

'இலக்கியம்' என்பது தமிழா? வடசொல்லா,? என்று ஒரு பெரும் விவாதம்! ஏறத்தாழ ஒரு பட்டிமன்றமே நடந்துவிட்டது. 1949 ஆம்

ஆண்டு மே திங்களில் கோவை மாநகரில் நடைபெற்ற இரண்டு நாள் முத்தமிழ் மாநாடுதான் அப்படியொரு பட்டி மன்றமாக வடிவெடுத்தது. பாவேந்தர் பாரதிதாசன் தலைமையில் மாநாடு, அறிஞர் அண்ணா, ஔவை துரைசாமிப் பிள்ளை, பன்மொழிப் புலவர் அப்பாதுரையார், பெரும்புலவர் வெள்ளைவாரணார் இன்னும் பல புலவர்கள் கலந்து கொண்ட மாநாட்டில் நானும் மேடையில் இருந்தேன்.

இரண்டு நாட்கள் மாநாட்டிலும், தமிழின் வளர்ச்சி, தமிழரின் எழுச்சி குறித்து உரை நிகழ்த்தியது மிகக் குறைவு!

'இலக்கியம்' தமிழா? அல்லவா? என்பது பற்றியே பெரிய பட்டி மன்றம்; பத்தாயிரம் மக்கள் கூடியிருந்த மாநாட்டுப் பந்தலில்! கலைஞர்

"பத்தாயிரம் மக்களைக்கட்டி வைத்துப் பல ஆயிரம் ரூபாய்கள் செலவிட்டு மாநாடு நடத்திப் பெரும் புலவர்கள் பேரறிஞர்களை யெல்லாம் அழைத்து ஒரே ஒரு பிரச்சினைக்காக; அதாவது இலக்கியம் தமிழா அல்லவா என்று முடிவு செய்வதற்கு நேரத்தையும் நினைப்பையும் இருநாட்கள் வீணாக்கியிருக்கிறீர்கள். இதற்குப் பதிலாக இந்தப் புலவர்களெல்லாம் பத்துப் பேரோ எட்டுப்பேரோ ஒரு தனி இடத்தில் கூடி; இந்த ஆராய்ச்சியை நடத்தி முடித்து; இலக்கியம் தமிழா அல்லவா என்பதை உங்கள் சார்பில் ஒருவரே வந்து எங்களுக்குக் கூறியிருக்கலாம்"[62] என்று கூறியது.

மாநாட்டில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. இன்றும் இலக்கியம் என்ற சொல் 'இலட்சியம்' என்ற சொல்லில் இருந்து தோன்றியதா; 'இலங்குதல்' என்ற சொல்லில் இருந்து தோன்றியதா? என்ற விவாதம் தொடர்கிறது என்பதற்காக 'முத்தமிழ் மாநாடு' நிகழ்ச்சி இணைக்கப்பட்டுள்ளது.

உயர்ந்தோர் கிளவி வழக்கொடு புணர்தலின்

வழக்கு வழிப்படுதல் செய்யுட்குக் கடனே[63]

என்பது பொருளியலில் வரும் நூற்பா!

"உயர்ந்தோராக இருந்து அவர்தம் கூற்று வழக்கு வழிப்படுதலின், அவ்வாறு வழக்குப்படுதல் செய்யுட்குக் கடன் என்பது இளம்பூரணர் கருத்து.

நச்சினார்க்கினியர், 'உயர்ந்தோர் கிளவி' என்பதை 'உயர்ந்தோர் கிளவியும்' என்று வசதியாக 'உம்' ஐயும் சேர்த்துக் கொண்டு; அவ் உயர்ந்தோர் கூற்றும் 'வேத நெறி'யோடு கூறுவதால் வழக்கின் நெறியிலே நடத்தல் செய்யுளுக்கு முறைமை என்று குறிப்பிட்டுள்ளார்.

வழக்கு என்பதற்கு பொருள்; நீதிமன்றங்களில் தொடரப்படும் வழக்கு என்பதல்ல!

நம் தாய்மொழி தமிழில் வழங்கப்படும் சொற்கள் மற்றும் சொற்றொடர்கள் வழக்கெனக் கூறப்படுகின்றன!

'உயர்ந்தோர் கிளவி' மட்டுமே அச்சிறப்பைப் பெற முடியும் என்கிறது இளம்பூரணம்!

'உயர்ந்தோர் கிளவி' என்று குறித்ததின் வாயிலாக; 'இழிந்தோர் கிளவி' மட்டுமின்றி 'உயர்ந்தோர் கிளவியும்' எனக் கருத நேரிடும் ; இழிந்தோர் கிளவிக்கும் வழக்கில் இடம் கொடுத்ததாகி விடுகிறது.

தொல்காப்பியம் மரபியலில் வரும் ;

வழக்கெனன்பபடுவதுயர்ந்தோர் மேற்றே

என்னும் மரபியல் நூற்பாவை பெரும்புலவர் வெள்ளைவாரணனார்; தனது தொல்காப்பிய உரை நூலில் மேற்கோள் காட்டி;

உயர்ந்தோர் கிளவியும்

என்பது, உயர்ந்தோரல்லாத இழிந்தோர் கிளவியும் என உணர்த்துவதைச் சுட்டிக்காட்டி; 'வழக்கு' என்பது மொழி வழக்கேயல்லாமல்; 'வேத நெறி' என நச்சினார்க்கினியம் கூறுவதும் பொருந்தாது என்பார்.[64]

"வழக்கென்று சொல்லப்படுவது உயர்ந்தோர் வழங்கிய வழக்கே; என்னை? உலகத்து நிகழ்ச்சியெல்லாம் அவரையே நோக்கினமையின்" என்று பேராசிரியம் தெளிவுபடுத்துகிறது.[65]

என்னடா டபாய்க்கிறே?

என்னம்மா மொறைக்கிறே?

போன்ற இழிந்த சொற்கள் வழக்கு என்னும் இலக்கணத்தில் ஏறிட முடியுமா? எக்காலத்திலும் முடியாது![66]

**எதிர்நிலை பாத்திரத்தை உயர்த்தும் புலப்பாடு**

இராமனை ஆரியன் என்றும இராவணன் திராவிடன் என்று கூறுவது பகுத்தறிவு சிந்தனையாளர்களின் எண்ணமாகும். மனைவியிடம் தலைகுனிவது கல்வியின்போது இயல்பு என்பதைத் தொல்காப்பியர்

மனைவி உயர்வும், கிழவோன் பணிவும்

நினையுங் காலைப் புலவியுள் உரிய[67]

என்று குறிப்பிட்டுள்ளார்.

மண்ணெலாம் வீரம் துள்ளும - மாதர்

கண்ணெலாம் கற்பு சொல்லும்;

விண்ணிலே ஏறுகின்ற

கொடிநிழல் பகையை வெல்லும்;

பண்ணெலாம் மானம் காட்டும்
எண்ணிலாத் திறம் முகிழ்க்கும் மறவர் கோட்டம்

வெண்முகில் குடை பிடிக்கும்
பொன் சுவர்க் கோட்டை மீது

தண்ணென முத்தமிட்டுத் தடங்கடல் தவமிருக்கும்
இன்னுயிர் பெரிதேயல்ல இங்குவாழ் மக்களுக்கு!

மன்னுயிர் காப்பதுவே மாத்தமிழர் இலக்கணம் எனக் கூறும்
தென்னிலங்கைப் பெருங்குடியின் வழிகாட்டி;

தன்மானச் சுடர் விளக்கு – தமிழர் தலைவன்;
எந்நாளும் புகழேட்டில் வாழுகின்ற இராவணன்காண்

இராவணனின் மான உணர்வையும் வீரத்தையும் பெரிதும் வியந்து பாராட்டுகின்ற ஒரு கட்டம் கம்ப இராமாயணத்தில் குறிப்பிடப்படுகிறது. அச்செய்தியைச் சுட்டிக்காட்டுவதற்கு முன்பு தொல்காப்பியம் - பொருளியலில் ஊடலுக்கு வழங்கப்படும் பெருமையை அறிந்துகொள்ள வேண்டும்.

பெருமிதமும் பேராண்மையும் கொண்ட ஆண்மகனாக இருந்தாலும்; கணவன் மனைவிக்கிடையே ஊடல் என்று ஏற்பட்டு விட்டால் மனைவியின் ஊடலைத் தணிக்கக் கணவன் ; மனைவியிடம் பணிந்துதான் ஆக வேண்டும்.

அவைக்களத்தில் உள்ள ஆன்றோர், சான்றோர், அறிஞர்கள் ஆகியோர்; இராவணனிடம் சென்று அவன் இராமனுடன் நடத்தும் போர் குறித்து முறையிடுகின்றனர்.

தோற்பது உறுதி! எனவே அழிவைத் தேடிக் கொள்ளாமல் பணிந்து போவதே மேல் என அறிவுரை கூறுகின்றனர். அப்போது இராவணன்

பஞ்சணையில் ஊடல் வேளையிலும்,
பணிந்து போவது என்பது எனக்குக் கிடையாது என்று!
பணிதல், ஊடல் நாளினும் உளவோ?
என்று கூறினான்[68]

பணிந்து போவது என்ற நிலை இந்த இராவணனின் வாழ்க்கையில், ஊடல் நாளிலும் இருந்ததுண்டோ? இல்லை! கிடையாது! என்று பேசுகிறான் என்று இராவணன் பெருமையைக் கலைஞர் போற்றியுள்ளார்.

**நகைச்சுவைப் புலப்பாடு**

சிவராத்திரி அன்று அதியை அழைத்து வந்து திண்ணையில் அமர வைத்து, தொல்காப்பியர் கூறும் "இறைச்சி" இலக்கணம் கூற, விருந்துக்கு வந்த சைவர், பொருள்புரியாது, தவறாக எண்ணி ஓடிவிடுகின்றார்.

இல்லத்திற்குள் தந்தை, தனயனுக்குத தந்த 'இறைச்சி'க்கான இலக்கண விளக்கம்; ஒரு சைவ மெய்யன்பரை வீட்டைவிட்டு விரட்டி அடித்துவிட்டது; அவர் இலக்கிய இலக்கணமறியாத மெய்யன்பர் என்பதால்! (தொ.பூ.ப.389) என்ற கலைஞரின் உரை விளக்கத்தில் நகைச்சுவை இழையோடி உள்ளது.

**கவிதைநடையில் உரை விளக்கப் புலப்பாடு**

மெய்ப்பாட்டிற்குரிய இலக்கணத்திற்கு தம் கவியால் உரைவிளக்கம் தந்துள்ளதை,

இருபத்தி ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு
எழிலும் பொலிவும் இணைந்திட

கலையும் கரையுளோர் நிலையும் சிறந்திட
புதிய பூம்புகார் படைத்திட்ட போது

நனிமிகு சிறப்புடன் நடத்திய விழாவில்
கனிச்சுவைத் தமிழில் கவியரங்கொன்றில்

தலைமை வகித்து நான் படித்த கவிதையில்
தகுதியுள சில வரிகளைத்

தொல்காப்பியம் மெய்பாட்டியலுக்கு
நல்லதோர் தோரண வாயிலாகத்

தழைக்கும் தமிழால்
அமைத்து வழங்குவேன்!

நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று
அப்பால் எட்டே மெய்ப்பாடென்ப

இலக்கணக் கிழவர் இயம்பிய வழியில்
எட்டுச்சுவையை இனிதே நுகர்வோம்

நகை, அழுகை, இழிவு, வியப்பு
அச்சம், வீரம், வெகுளி, உவகை என

மெய்ப்பாட்டியல் மெய்யாகவே நம்
மெய் சிலிர்க்க வைத்திடு மென்பேன்!

அடம் பிடித்திறுதியில் 'நகை' காட்டி அடையக் கூடும்
'அச்சத்'தால் அடங்குகின்ற ஆளன் கிடைத்துவிட்டால்!

‘இழிவு’ வந்தும் ‘வெகுளா’ தார்நிலை கண்டு
‘வீரர்’க்கு நெஞ்சில் ‘வியப்பு’த் தோன்றும்!

‘உவமை’யும் அழுகையும் ஒரு தாய் மக்கள்
ஒருவரையொருவர் நிழல்போல் தொடர்வர்!

இந்த,

எட்டுச்சுவை
பிட்டுத் தமிழ்

கட்டித் தயிர்
வட்டில் நிறை

கொட்டித் தர
பட்டுக்கொடி

கொற்றக்குடை
மூவேந்தர் அவை

முத்தமிழ்ப் புலவர்
போற்றிய காப்பியர்

ஆற்றலைக் காண
அடுத்துத் தொடர்வோம்[69]

என்ற கவிதை எடுத்தியம்பி உள்ளது. கலைஞருக்குத் தொல்காப்பியப் பயிற்சி உண்டு என்பதை இக்கவிதை தெளிவுபடுத்தியுள்ளது.

**தொல்காப்பிய மரபை மாற்றிக் கூறும் புலப்பாடு**

எள்ளல் என்னும் மெய்ப்பாட்டைக் காலத்திற்கேற்ப கலைஞர் உரைமாற்றம் செய்துள்ளார்.

எள்ளி நகையாடுதல் என்ற சொற்றொடர் நீண்ட காலமாக வழக்கத்தில் இருந்து வருகிறது. மெய்ப்பாட்டியலில் 'எள்ளல்' என்னும் மெய்ப்பாடு எப்போது தோன்றுமென்பதற்கு உரை கண்டோர் பலரும்; முடவர் நடந்து செல்வதைப் பார்க்கும்போதும் எள்ளல் காரணமாக நகைச்சுவை உணர்வு தோன்றுமெனக் கூறியுள்ளனர்.

மனித நேய உணர்வும், பிறரை அதிலும் ஊனமுற்றோரைப் புண்படுத்திப் பேசுவதும், நடப்பதும் கூடாது என்கின்ற சமூகப் பிரக்ஞை விரிவாகப் பரவி வரும் இக்காலத்தில், முடவர் நிலையும் செயலும் எள்ளி நகையாடுவதற்குரியதாகக் குறிப்பிடப்படலாகாது.

தெருவில் மாட்டு வண்டிகளில் அல்லது குதிரை வண்டிகளில் ஏறி மக்கள் பயணித்துக் கொண்டிருக்கிறார்கள். அந்தச் சாலையோரத்தில் ஒரு கறிகாய் வணிகன் - அவனிடத்தில் தெருவில் வாழ்வோர் கறிகாய் வாங்குவது வாடிக்கை! வியாபாரத்தைக் கவனித்துக் கொண்டே அந்த வணிகன், தெருவில் போகும் வண்டிகளைப் பார்த்து, மிகுந்த ஆத்திரத்துடன் டேய் குதிரை வண்டி! "டேய் மாட்டு வண்டி! மெதுவாகச் செல்லுங்கடா! ஏண்டா போகிற வேகத்தில் புழுதி தூற்றிக் கொண்டு போகிறாய்! நான் எழுந்து வந்தால் நடப்பதே வேறு! சவுக்கால் வெளுத்துக் கட்டி விடுவேன்; எச்சரிக்கை!" என்று கத்திக்கொண்டேயிருப்பான்.

வண்டிக்காரர்களும் அந்த வணிகளைப் பொருட்படுத்துவதில்லை. வணிகனோ, தன் வசை புராணத்தை நிறுத்தியதுமில்லை!

ஒரு நாள் ஒரு குதிரை வண்டிக்காரனை, வணிகன் வழக்கம் போல் மிரட்டிக் கத்தினான்.

"வந்தால் என்ன செய்வேன் தெரியுமா? உன் வண்டியெல்லாம் உடைந்து நொறுங்கிவிடும்!

என்னடா முறைக்கிறே! வந்தேன்னா தெரியுமா?" என்று வணிகன் வசைபாடத் தொடங்கியதும்; குதிரை வண்டிக்காரன் வண்டியை நிறுத்திவிட்டு, "எங்கே; வா பார்க்கலாம்!" என்று வணிகனுக்கு அறைகூவல் விடுத்தான்.

வணிகன், வாயை மூடிக் கொண்டான்! காரணம், அவனால் வர முடியாது! காலில்லா முடவன்! அதைப் பார்த்து அனைவரும் சிரித்தனர்.

'எள்ளல்' என்பது இப்படியொரு குறிப்பிட்ட நிகழ்வுக்குத்தான் பொருந்துகிறது! பொதுவில் ஊனமுற்றோர் அனைவருக்கும் பொருந்தாது! பொருத்தவும் கூடாது![70] என்ற தொடர்கள் சுட்டியுள்ளது.

தவலை திருட்டுப் போய்விட்டது என்று காவல் நிலையத்துக்கு எழுத்தில் புகார் கொடுத்தான் ஒருவன். காவல் அதிகாரி படித்துப் பார்த்து விட்டு 'உனக்குத் தலைதான் இருக்கிறதே' என்று சிரித்தார். 'தவலை' என்று எழுதியிருக்க வேண்டியதை பேதைமை காரணமாக 'வ' என்னும எழுத்தைவிட்டு விட்டுத் 'தலை' என்ற புகாரில் எழுதிவிட்டான். அதிகாரி சொன்னதும் அவனும் சேர்ந்து சிரித்துவிட்டு, புகாரை வாங்கி, திருத்தம் செய்து வேறு தாளில் எழுதிக் கொடுத்தான்.

அதிகாரி மீண்டும் சிரித்துக்கொண்டு கேட்டார்;

"எந்தக் கிணற்றிலிருந்து தவளை காணாமற் போனது?" என்று! அதாவது 'ல' கரம் எழுதுவதற்குப் பதில் 'ள' கரத்தை எழுதிவிட்டான்.

பேதைமை காரணமாகத் 'தவலை' தலையென்று ஆயிற்று! சுட்டிக் காட்டப்பட்ட பிறகு, அதனை அறிந்தும் அறியாத 'மடன்' காரணமாக 'தவலை' யை 'தவளை' என்று எழுதிவிட்டான்.

இங்கெல்லாம் 'நகைச்சுவை' தோன்றாமல் இருக்குமா?[71] என்று நகைச்சுவை உணர்வைக் கதை வாயிலாகக் கலைஞர் சுட்டியுள்ளார்.

'எள்ளல்', 'இளமை',யிடத்தும், 'பேதைமை' என்னும் அறிவின்மையிடத்தும், ஓர் இழையளவே அதனின்றும் வேறுபாடுடைய 'மடன்' எனும் உன்மத்தமுடையாரிடத்தும் நிகழ்வனவற்றில் நகைச்சுவை தோன்றும்.[72]

**வரலாற்று விளக்கப் புலப்பாடு**

அழுகை மெய்ப்பாட்டில் வரும் ஒளிவு என்ற பகுதிக்கு உரை எழுதியக் கலைஞர் வரலாற்றுச் செய்திகளைச் சுட்டியுள்ளார்.

கிரேக்க நாட்டு நீதிமன்றத்தில் சிந்தனைச் சிற்பி சாக்ரடீஸ் கூண்டில் நிறுத்தப்படுகிறார். நாட்டுல் இளைஞர்களையெல்லாம் தூண்டிவிட்டுத் தன்னுடைய பேச்சின் மூலமாகக் கிளர்ச்சி செய்கிறார் என்பது அவர்மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டு. அக்குற்றச்சாட்டுகளை முன்மொழிந்தும், வழிமொழிந்தும் நீதிமன்றத்தில் மூவர் முழங்குகிறார்கள். அம்முழக்கம், அச்சிந்தனைச் சிற்பியை இழிவுப்படுத்தும் முழக்கமாகும். அம்மூவர் அனிடஸ், லைகன், மெலிடஸ் என்ற பெயருடையவர்கள்.[73]

குமுறும் எரிமலை! கொந்தளிக்கும் கடல்! இவைகளை விடப் பயங்கரமானவன் சாக்ரடீஸ்! . . . . . . அறிவாயுதமாம் . . . . . அனைத்துலகும் அடிபணியும் அஸ்திரமாம்! . . . . . அந்த ஆயுதம் கிரேக்கத்தில் தயாராகுமானால், நாம் தலைதூக்கவே முடியாது மெலிடஸ்! என்று சொல்கிறாய், லைகன்? என்று அனிடஸ் கூறுகின்றான்.[74]

நான் கல்லுக்குக் கடவுள் உருவம் தரும் சிற்பி!... ஒரு காலத்தில் சாக்ரடீசும் என்னைப் போலச் சிற்பிதான்! இப்போதோ அவன்

சிந்தனைச் சிற்பியாக மாறிவிட்டான். பரவாயில்லை, கல்லைக் கடவுளாக்கும் நானும், கற்பனை மூட்டைகளுக்குத் தெய்வீக மெருகு தரும் கவிஞனாம் மெலிடசும், அரசியல் நிபுணனாம் நீயும் ஒன்று சேர்ந்துவிட்ட பிறகு.... சாக்ரடீஸ் - சமுதாயத்துத் துரும்புதானே; அனிடஸ்! என்று லைகன் கூறுகின்றான்.[75]

சபாஷ் லைகன். சபாஷ்! பொதுமக்கள் கழுதைகளாயிருந்தால்தான் நாம் தூக்கி வைக்கும் பொய் மூட்டைகளைச் சுமப்பார்கள்! குருடர்களாய் இருந்தால் தான் நாம் காட்டுகிற வழியிலே நடப்பார்கள்! நாம் கீறிய கோட்டைத் தாண்டாத கிரேக்க மக்களுக்கு அந்தக் கிழவன் அறிவுக் கண் வழங்குவதற்குள் அவனை நாம் அழித்துவிட வேண்டும்.. என்று மெலிடஸ் கூறுகின்றான்.[76]

இச்செயல் இணையற்ற ஒரு பெரியவரை, சிந்தனைப் புரட்சியாளரை இழிவுபடுத்திட வீசப்பட்ட வேல்களாகும். இச்செயல் 'இளிவு'! என்று சொல்லுக்குரிய இலக்கணமாகும்.[77] தமிழ் இலக்கணத்திற்கு உலக வரலாற்றைச் சான்றாகக் கலைஞர் காட்டியுள்ளது மகிழத்தக்கது.

இந்தியாவின் முதல் பிரதமர் ஜவகர்லால் நேரு, 17 ஆண்டுக் காலம் பரிபாலனம் செய்தவர், பாமரர் முதல் பண்டிதர் வரையில் பாராட்டுகளைப் பெற்றவர், ஆகாயச் சுடர், அமைதிக்கு வெண்புறா பறக்கவிட்டவர் - அவர் மறைந்தபோது அவருடைய உடையிலேயே எந்நேரமும் குடியிருந்த ரோஜா மலர் கண்ணீர் சிந்துவதுபோல் ஒரு கற்பனைக் கவிதையைக் கலைஞர் படைத்துள்ளதை,

கோமானே! கொள்கை வேந்தே! உன்னைக் கொள்ளையிட்ட
கூற்றெங்கே!
என்னடி ரோஜா இன்னமும் அழுகை?
நல்லவர் இருந்தார் நானிலம் வாழ
வல்லவர் இருந்தார் வாரி அணைக்க
போது வருமோ? புலம்பலை நிறுத்து!
பூக்களின் ராணி! புன்னகை காட்டு[78]

*என்ற கவிதை அடிகள் சுட்டியுள்ளது.*

*அழகு ரோஜா தேறுதல் பெறாமல் தேம்பியழுதாள் என்று இழவு என்ற மெய்ப்பாட்டிற்கு பாரத முதல் பிரதமர் மறைவைக் கலைஞர் சுட்டியுள்ளார்.*

**அசைவு - விளக்கம்**

*எந்தப் பெரியாரால் தமிழன் தலைநிமிர்ந்து நின்றானோ, தன்மானம் பெற்றானோ - அந்தத் தந்தை பெரியார் மறைந்தபோது தரணியெங்கும் வாழ்கின்ற தமிழன் எந்த அளவிற்கு தளர்ச்சியுற்றான் என்பதை*

எரிமலையாய்ச் சுடுதழலாய்
இயற்கைக் கூத்தாய்
எதிர்ப்புகளை நடுங்க வைக்கும் இடிஒலியாய்
இன உணர்வுத் தீப்பந்தப் பேரொளியாய்
இழிவுகளைத் தீர்த்துக்கட்டும் கொடுவாளாய்
இறைவனுக்கே மறுப்புச் சொன்ன இங்கர்சாலாய்
எப்போதும் பேசுகின்ற ஏதென்சு நகர் சாக்ரடீசாய்
ஏன் என்று கேட்பதிலே வைரநெஞ்ச வால்டேராய்
எம் தந்தை பெரியாரும் வாழ்ந்திட்டார் இன்றைக்கோ
இறப்பின் மடியினிலே வீழ்த்திட்டார்.
இளவயதில் மறையவில்லை பெரியார்

> நிறைவயது வாழ்ந்துவிட்டே ஓய்வுகொண்டார் எனினும்,
> தாஜ்மகால் திடுமெனத் தரைக்குள்ளே போய்விட்டால்
> அதைக்கட்டி ; ஆண்டுகள் பலவாயிற்றே என்று ஆறுதல்தான் பெறுவோமா?
> தஞ்சைக் கோபுரம் சாய்ந்துவிட்டால் அதற்கு
> வயது அதிகமென்று சொல்லித்
> தாங்குதல்தான் எளிதாமோ? இவரோ,
> தஞ்சைக் கோபுரம்போல் உயர்ந்தவர்
> தாஜ்மகால் போல் சரிதம் படைத்தவர்[79]

என்ற கவிதை அடிகள் சுட்டியுள்ளது.

மெய்ப்பாட்டியலில் 'தளர்ச்சி' என்னும் பட்டியலில் வந்தாலும் தாங்க முடியாத வேதனையினால் அழவைக்கும் நிகழ்ச்சியாகும்.

> இளிவே இழவே அசைவே வறுமை என
> விளிவில் கொள்கை அழுகை நான்கே[80]

மேற்குறித்த நூற்பாக்களுக்குரிய விளக்கத்தினைத் தன் சொந்தக் கவிதைகளால் கலைஞர் அமைத்திருப்பது நினைக்கத்தக்கது.

**நடப்பியலை உரைவிளக்கமாக்கும் புலப்பாடு**

நாட்டின் ஆதி மக்கள், நாதியற்றோர் போல நாற்புறமும் எதிர்ப்புக்கும் இழிவுக்கும் ஆளாகி, நலிந்து கிடந்தபோது இந்திய நாட்டின் அளவில் அவர்களின் பாதுகாப்பு அரணாக இருந்து வலிமை மிக்க வர்ணாஸ்ரம தர்மத்தை எதிர்த்து வாகை சூடி; இந்நாட்டின் அரசியல் சட்டத்தையே உருவாக்கித் தந்த அண்ணல் அம்பேத்கார் அவர்களின் கொள்கைக்கு வாய்ந்த பரிணாம வளர்ச்சிக்கான சான்று நாட்டின் குடியரசுத் தலைவராகத் திருமிகு நாராயணன் அவர்கள் வீற்றிருந்த காட்சியாகும். அண்ணல் அம்பேத்காரின் ஆக்கபூர்வமான உணர்வுகள் அஞ்சா நெஞ்சத் துணையுடன் பெற்ற வெற்றிக்கு அடையாளம்[81] என்று

புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு

மதிமை சாலா மருட்கை நான்கே[82]

என்ற நூற்பாவிற்கு உரை விளக்கம் தந்துள்ளார். தாழ்த்தப்பட்டவர் நாட்டின் குடிமகனாக ஆவது பெருமைக்குரியது.

**புதுமை விளக்கப் புலப்பாடு**

அணங்கே விலங்கே கள்வர்தம் இறை எனப்

பிணங்கல் சாலா அச்சம் நான்கே[83]

என்ற நூற்பாவிற்கு விளக்கம் கூற முற்படும்போது அச்சம் ஏற்படுத்தும் வரிசையில் இறையும் சேர்க்கப்பட்டுள்ளது. இறை என்பது அரசைக் குறிப்பிடுவதாகப் பல உரையாசிரியர்கள் கூறுகின்றனர். 'இறை' எனத் தனிததுப் பொருள் கொள்ளாமல் 'தம் இறை 'என்று இருப்பதை 'தம்மிறை' எனப் பொருள் கொண்டால் தாம் செய்த பெருங்குற்றம் என்பதாகும். பெருங்குற்றம் புரிந்தோர் தண்டனையை எண்ணி 'அச்சம்' கொள்வது நாட்டு நடப்பு. 'தம் இறை' என்றும் 'தம்மிறை' என்றும் தொல்காப்பியம் இரட்டுற மொழிவதை வெள்ளைவாரணனார் சுட்டிக்காட்டி உள்ளதைக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார்.

**தன் படைப்பை இணைத்துக்கூறும் புலப்பாடு**

சிறப்பே நலனே காதல்வலி யோடு

அந்நாற்பண்பும் நிலைக்கள மென்ப[84]

என்ற நூற்பாவிற்கு உரை கூறுமிடத்து உவமை என்பது அதைவிட உயர்ந்தவைகளுடன் உவமிக்கப்பட்டாலும் அவை 'சிறப்பு! - 'நலன்' - 'காதல்' - 'வலிமை' ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு வரும் என்பது இந்த நூற்பாவின் கருத்தாகும்.

இந்நூற்பாவையொட்டி; தான் எழுதிய 'ரோமாபுரிப் பாண்டியன்' என்னும் வரலாற்றுப் புதினத்திலிருந்து சில மேற்கோள்களைக் கலைஞர் தொகுத்துள்ளார்.

'கி.மு.20 ஆம் நூற்றாண்டின் துவக்கத்தில் ஒரு நாள் - சோழப் பெருமன்னன் கரிகாலனின் திருநகரம் பூம்புகார்ப்பட்டினம் புதிய பொலிவு பெற்றுத் திகழ்ந்தது. சோழர் கொடியும், பாண்டியர் கொடியும் பூம்புகாரின் மருவூர்ப்பாக்கக் கடற்கரையையொட்டிய மாளிகைகளில் இணைந்து பறந்தன. பாண்டியன் பெருவழுதியும் சோழன் கரிகாலனும் அன்றைய தினம் புகார் நகரில் சந்தித்துத் தமது நட்புறவை நிலைநாட்டுகின்றனர்.

அப்போது புலவர் காரிக்கண்ணனார் இரு வேந்தர்களையும் பற்றிய பாராட்டு வாழ்த்தினை.

> **நீயே தண்புனல் காவிரிக்**
> **கிழவனை; யிவனே...**

என்று தொடங்கி

> நெல்லும் நீரும் எல்லார்க்கும் எளியவென
> வரைய சாந்தமும் திரைய முத்தமும்
> இமிழ்குரல் முரசும் மூன்றுடன் ஆளும்
> தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே
> என்று முடித்துள்ளார்.[85]

ஒற்றுமைக்கும் உயர்ந்த நட்புக்கும் புகழ்மாலை சூட்டும் நிலையைக் கலைஞர் எடுத்தாண்டுள்ளார்.

இரு மன்னர்களும் ஒன்றாக அவைக் களத்தில் வீற்றிருப்பது போல அந்த அவையில் மட்டுமல்ல; நகர் முழுவதும் இசையும் கூத்தும் ஒன்றிக் கலந்தன என்னும்படியாக எங்குநோக்கினும் ஆடலும் பாடலுமாக ஒத்து நிகழ்ந்தன.

இவ் உவமை ; சிறப்பினை அடிப்படை நிலைக்களமாகக் கொண்டு தோன்றியதாகும்.

சிறப்பு என்பது இயல்பு வகையாலன்றிச் செயற்கை வகையாற் பெறுவதாகும்.

நூற்பாவில் குறிக்கப்பெறும் 'நலன்' என்பது ஒரு பொருட்கண் இயல்பாய்த் தோன்றிய நன்மை. கிணறு தோண்டும்போது ஊற்று இயல்பாகத் தோன்றுவது போல! சிறப்பு! என்பது குளம் அமைத்து அதற்கு ஆற்றிலிருந்து வாய்க்கால் வெட்டி அதன்மூலம் குளத்தில் தண்ணீர் நிரப்புவது போலவாகும்.

அச்சிறப்புதான் சோழன் கரிகாலனும், பாண்டியன் பெருவழுதியும் ஒன்றாக ஓரவையில் அமர்ந்து இணைந்து நட்பு பாராட்டுவது இசையும் கூத்தும் ஒன்றிக் கலந்தது என்னும் உவமைக்கு நிலைக் களமாயிற்று,

அச்சிறப்புதான் சோழன் கரிகாலனும், பாண்டியன் பெருவழுதியும் ஒன்றாக ஓரவையில் அமர்ந்து இணைந்து நட்பு பாராட்டுவது இசையும் கூத்தும் ஒன்றிக் கலந்தது என்னும் உவமைக்கு நிலைக்களமாயிற்று.

மருவூர்ப்பாக்கத்தில் வாழும் வணிகர், யவனர், பட்டாடை பருத்தி ஆடை கம்பளி ஆடைநெய்வோர், பொற்கொல்லர், பூ கட்டுவோர், ஓவியர், சிற்பிகள், மாலுமிகள் மற்றும் பட்டினப்பாக்கத்தில் மருத்துவர்,மறையோர், அரண்மனை அலுவலர், பாணர், இசைவாணர் அனைவரும் நகரை மேலும் அழகுபடுத்தினர்.

கரிகால் சோழனுக்கு மகத நாட்டு மன்னன் வழங்கிய பட்டி மண்டபமும், வச்சிர நாட்டு அரசன் அளித்த கொற்றப் பந்தரும், அவந்தி நாட்டு வேந்தன் தந்த தோரணவாயிலும்; சேர்ந்து ஒளி உமிழ்ந்து புகார் நகரை ஓர்ஓவியப் பொழில் போலவும், சிற்பக் களஞ்சியம் போலவும் ஆக்கியிருந்தன.

நகரின் நலன் விளங்கக் கூறப்பட்டுள்ள உவமையானபடியினால் இவ்உவமை 'நலன்' என்பதை நிலைக்களமாகக் கொண்டு பிறந்ததாகும்.

அவ் வரலாற்றுப் புதினத்தில பிறிதோர் அத்தியாயத்தில் ரோமாபுரியில் ஜூனோ என்ற அழகியைச் சந்தித்தபோது, செழியன்

"அ... டே... ; இந்த ஜூனோவைப் பார்க்கும்போது என் தாமரைநான் ஆண்டவனிடம் வரம் பெற்று தேவதைகளைப் போல இறக்கைகளைக் கட்டிக் கொண்டு இப்படி உரோமாபுரி மண்ணிலே திடீரென்று குதித்திருப்பானோ? என்று எண்ணுகின்றான்.

செழியன் நினைப்பது அவன் தாமரை என்ற தன் தமிழ்நாட்டுக் காதலியிடம் கொண்டுள்ள அன்பை வெளிப்படுத்துவதால்; இவ்வுவமைக்கு நிலைக்களமாக 'காதல்' அமைகிறது.

அப்புதினத்தில் ; முக்கிய பாத்திரங்களில் ஒருவரான கரிகால் சோழனைப் பற்றி கடியலூர் உருத்திரங்கண்ணனார்

திருமாவளவன் தெவ்வர்க் கோச்சிய
வேலினும் வெய்ய கானமவன்
கோலினுந் தண்ணிய தடமென் தோளே[86]

என்று பாடிய அடிகள் இணைக்கப்பட்டுள்ளது.

காதலியின் தோள் மீது கையைப் போட்டுக் கொண்ட காதலன் காட்டு வழி செல்கிறான். அப்போது அவன் அந்தக் காட்டுக்கு உவமை தேடுகிறான்.

கரிகால் திருமாவளவன், தனது பகைவர் மீது வீசிய வேலைக்காட்டிலும் கடியதாம் அந்தக் காடு! காதலியின் தோள்; கரிகாலனின் செங்கோலைப் போல குளிர்ச்சியானது என்பது பாட்டின் பொருள்.

கரிகாலனின் வேல் வலிமைக்கு ; கடிய காடு உவமையாக்கப்படுவது காணும்பொழுது இவ்வுவமைக்கு 'வலிமை' நிலைக்களமாகிறது.

சிறப்பு - நலன் - காதல் - வலிமை இந்நான்கையும் உவமையின் நிலைக்களம் எனக் கூறும்பொழுது ; இவற்றை அடிப்படையாகக் கொண்டில்லாமல் எத்தகைய உவமையும் பிறக்காது.[87]

**பிற உரையாசிரியர் கருத்தை முழுமையாக எடுத்தாளல் புலப்பாடு**

பெரும் புலவர் வெள்ளைவாரணார் நடுநிலை நோக்குடைய நல்ல தமிழறிஞர். இறையன்பர். எச்சார்பும் இல்லாதவர். தமிழ்ச் சார்பு கொண்டவர். மரபியலுக்கு உரைக் கூறவந்த கலைஞர் வெள்ளை வாரணாரின் கருத்தை அப்படியே எடுத்தாண்டுள்ளதை,

"உயர்திணை நான்கு சாதியும் பற்றிய மரபுகளைக் கூறுவனவாக 71 முதல் 85 முடியவுள்ள பதினைந்து சூத்திரங்களும் பிற்காலத்தவரால் இவ்வியலிற் புகுத்தப்பட்ட இடைச் செருகல் ஆகும்.

மக்களை நிலவகையாற் பகுத்துரைப்பதன்றி நிறவகையாகிய வருணத்தாற் பகுத்துரைக்கும் நெறியினை ஆசிரியர் தொல்காப்பியனார் மக்களது ஒழுகலாறுகளை விரித்துரைக்கும் முன்னைய இயல்களில் யாண்டும் குறிப்பிடவேயில்லை. இளமை, ஆண்மை, பெண்மை முதலியன காரணமாகத் தம் காலத்திற் பயின்று வழங்கிய மரபுப் பெயர்களைத் தொகுத்துணர்த்தும் முறையிலேயே ஆசிரியர் இம்மரபியலை அமைத்துள்ளார். இதன்கண் 1 முதல் 70 வரையுள்ள சூத்திரங்களும், 86 முதல் 90 வரையுள்ள சூத்திரங்களும் இம்மரபினையே தொடர்ந்து விரித்துரைப்பனவாக அமைந்துள்ளன. இயல்பாக அமைந்த இத்தொடர்பு இடையுறவுபட்டுச் சிதையும் நிலையில் உயர்திணை நான்கு சாதிகளையும் பற்றிய பதினைந்து சூத்திரங்கள் 71 முதல் 85 வரையுள்ள எண்ணுடையனவாக இதன்கண் இடையே புகுத்தப்பட்டுள்ளன.

முன், அகத்திணை யொழுகலாற்றுக்குரிய மக்களை வகைப்படுத்துக் கூறிய நிலையிலும் புறத்திணை யொழுகலாற்றில் வாகைத் திணைப்பகுதிகளை விரித்துரைத்த நிலையிலும் மக்களை அவர்கள் வாழும் நிலத்தாலும் அவரவர்கள் மேற்கொண்ட தொழில் வகையாலும் பகுத்துரைத்ததன்றி அவர்களை வேளாண் மாந்தரென்றோ, வைசியரென்றோ இவ்வாறு வருணம் பற்றி ஆசிரியர் யாண்டும் குறிப்பிடவேயில்லை. வைசிகன் என்ற சொல், சங்கச் செய்யுட்களில் யாண்டும் வழங்கப்பெற்றிலது. வருணம் நான்கு என்ற தொகையினை ஆசிரியர் முன் தெளிவாகச் சொல்லாத நிலையில் அரசர் வணிகர் என்ற

இருதிறத்தாரையும் 'இடையிரு வகையோர்' என இங்குக் குறிப்பிட்டார் எனல் பொருந்தாது. அன்றியும் அவ்விருதிறத்தோரல்லாத பிறர்க்குப் படைப்பகுதி கூறுதல் இல்லையெனக் கூறும் இவ்வியல் 77ஆம் சூத்திரவிதி, பின்னுள்ள 82 ஆம் சூத்திர விதிக்கும் சங்க நூல்களிற் காணப்படும் பழந்தமிழ் வழக்குக்கும் முற்றிலும் முரண்பட்டதாகும். வேளாண் மாந்தர் என்றதொரு குலப்பிரிவு தொல்காப்பியனாரால் முன்னர்க் குறிக்கப் பெறவில்லை. உரிப் பொருளாகிய ஒழுகலாறு பற்றிய இச்செய்திகள் முதல், கரு, உரி என்னும் பொருட்பகுதிகளை விளக்க அகத்திணையியல், புறத்திணையியல் முதலான முன்னுள்ள இயல்களிற் கூறத் தக்கனவேயன்றி, மரபுச் சொற்களின் வழக்குப் பயிற்சியைக் கூறுதற்கமைந்த இம்மரபியலில் இடம் பெறத்தக்கன அல்ல.

ஆகவே, 71 முதல் 85 வரையுள்ள இச்சூத்திரங்கள் பதினைந்தும் நால்வகை வருணப் பாகுபாடு இத்தமிழ்நாட்டில் உலக வழக்கில் வேரூன்றத் தொடங்கிய மிகப் பிற்காலத்திலேதான் இம்மரபியலில் இடம் பெற்றிருத்தல் வேண்டுமென்பதும், பிற்றை நாளில் களப்பிரர் போன்ற அயல் மன்னரது ஆட்சிக்குட்பட்டுத் தமிழ்நாடு அல்லற்பட்ட நிலையிலே தமிழரது உரிமையுணர்வினைச் சிதைத்ததற்குரிய இத்தகைய அடிமைக் கருத்துக்கள் சில தமிழ் முதல் நூலாகிய தொல்காப்பியத்திலும் அயலாரால் மெல்ல மெல்ல நுழைக்கப்பட்டமை வியப்பிற்குரிய தன்றென்பதும், மனு முதலிய வடமொழி நூல்களால் வளர்க்கப்பட்ட நால்வகை வருணத்தைப் பற்றிய நம்பிக்கை தமிழ் மக்கள் உள்ளத்தில் வேரூன்றி நிலைபெற்றுவிட்ட பிற்காலத்திலே வாழ்ந்த உரையாசிரியர்கள் இளம்பூரணர், பேராசிரியர் முதலிய பெருமக்களாதலின் அன்னோர் தொல்காப்பியத்திற்கு உரை காணும் நிலையில் தம் காலச் சூழ்நிலையில் அகப்பட்டு இடைச்செருகலாகிய இச்சூத்திரங்களைத் தொல்காப்பியனார் வாக்கெனவே உண்மையாக

நம்பி உரையெழுத நேர்ந்ததென்பதும் ஆழ்ந்துணரத்தக்கனவாகும்.[88] என்ற தொடர்கள் சுட்டியுள்ளன.

**தன்னை உயர்த்தும் புலப்பாடு**

> மரபு நிலை திரிதல் செய்யுட்கில்லை
> மரபு வழிப்பட்ட சொல்லினான[89]

மரபு நிலை திரியாச் சொற்களால் செய்யுட்கள் இயற்றப்பட வேண்டும் என தொல்காப்பியம் வலியுறுத்தியுள்ளது.

அதற்கான இலக்கணப் பயிற்சியினை முழுமையாகக் கற்றவனில்லையென்ற காரணத்தினால்தான் இன்றைக்கு அறுபது ஆண்டுகட்கு முன்பு நான் எழுதியவை; கவிதை வரிகளாக இருந்து கவிதையாக அமைந்திடவில்லையென்பதை நானே வெளிப்படையாக அறிவித்து 'கவிதையல்ல' என்ற சொல்லோவிய நூல் ஒன்றை வெளியிட்டிருக்கிறேன் என்று கலைஞர் தன்னிலை விளக்கம் கூறியுள்ளது.

முறைப்படி கவிதை இலக்கணம் படிக்காத கலைஞர் தான் எழுதிய கவிதைகள் சோடை போனதில்லை என்பதை,

இந்த யுகத்தில் கவிதை இலக்கணம் நிறைவாகக் கற்றுள்ள கவிஞன் நான் என நெஞ்சை நிமிர்த்திக் கொள்ளாவிடினும், நான் இதுவரை எழுதியுள்ள கவிதைவரி ஓவியம் எதுவும் காதறுந்த ஊசிகளாய் ஆனதில்லை. காதறுந்த ஊசிகளையும் கவர்ந்திழுக்கும் கண்களாகவே விளங்குகின்றன[90] என்ற தொடர்களால் சுட்டியுள்ளது நினைக்கத்தக்கது. தமிழ்க்கவிஞனுக்கு உரிய செம்மாந்த உணர்வை மேற்குறித்த தொடர்கள் சுட்டியுள்ளது.

**தலைப்புப் புலப்பாடு**

*தொல்காப்பியத்திற்கு எளிய உரைகண்ட கலைஞர் நூற்பா விளக்கத்திற்குரிய தலைப்பைப் பாமரரும் விரும்பு அளவிற்கு நயமாக அமைந்துள்ளதை,*

சொல்லோவியம்[91]
கதம்பக்கனவு[92]
பூம்பொய்கையின் புலம்பல்[93]
விழியாலே மொழிபேசி[94]
காதலால் கசிந்துருகி[95]
எரிந்தது ஈரவிறகு[96]
நாணமா மானமா[97]
புரவியும் பறவையும் தோற்கும்[98]
நரியை நனையாமல்[99]
மெய்யன்பர் அறியாமெய்[100]
எட்டுச்சுவை கொட்டும் இயல்[101]
அறிந்தோர் உணர்வர்[102]

*போன்ற தொடர்கள் சுட்டியுள்ளன.*

**சங்கப்புலவர்கள்**

*காரிகண்ணன்*[103] — *காக்கைப்பாடினி*[105]
*கணியன்பூங்குன்றனார்*[104] — *பொன்முடி ஔவை*[106]

**உரையாசிரியர்கள்**

*இளம்பூரணர், நச்சினார்க்கினியர், சேனாவரையர், கல்லாடர், பேராசிரியர்,*[107]

**சங்கம் மருவிய காலப்புலவர்கள்**

*திருவள்ளுவர்*[108]

*இளங்கோவடிகள்*[109]

**சமயச் சான்றோர்கள்**

*அப்பர்*
*சம்பந்தர்*
*சுந்தரர்* [110]

*மணிவாசகர்*
*வள்ளலார்*
*சமதக்கினி பரசுராமன்* [111]

**மேலை நாட்டார்கள்**

*டார்வின்*[112]

*சாக்ரடீஸ்*[113]

**வடநாட்டவர்**

*மாவீரன் சிவாஜி* [114]

**சமகாலத்தவர்கள்**

காந்தியடிகள்[115]

நேரு[116]

பேரறிஞர் அண்ணா[117] இந்திராகாந்தி[118]

புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்[119]

திரு.வி.க.[120]

ச.தண்டபாணி தேசிகர்[121] கா. அப்பாதுரையார்[126]

முத்துக்கிருட்டிண நாட்டார்[122] ஔவை.துரைசாமிப்பிள்ளை[127]

இராசகோபால்பிள்ளை [123] வெள்ளை வாரணம் [128]

சி.இலக்குவனார்[124]

ச.வே.சுப்பிரமணியன் [125]

கீழப்பழுவூர் சின்னச்சாமி

மொழிக்காகத் தீக்குளிப்பு[129]

செய்த தியாகி

கண்ணதாசன் [130]

போன்றோர்கள் கலைஞர் படைத்த தொல்காப்பிய உரையின் நடுவே சுட்டப்பட்டுள்ளனர்.

**முன்னோர்களைச் சுட்டும் புலப்பாடு**

தமிழ்நாட்டு மக்களுக்காகப் படைக்கப்பட்டுள்ள தொல்காப்பியத்திற்கு எளிய உரை காணவந்த கலைஞர், தமிழ்நாட்டில் வாழ்ந்து வரலாறான முன்னோர்களை உரையின் நடுவே அமைத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

முன்னோர்களைக் குறிப்பிடும் கலைஞர் தான் நாத்திகராக இருந்தாலும், தமிழ்நாட்டு வழிபாட்டுத் தெய்வங்களையும் குறிப்பிடத் தவறவில்லை.

**தெய்வங்கள்**

முருகன்[131]

சபரிமலை ஐயப்பன்[132]

பிள்ளையார்[133]

சிவன்[134]

ஆதிசேடன்[135]

கண்ணபிரான்[136]

திருவாரூர் தியாகராசர்[137] ஆகிய தெய்வங்களைக் கலைஞர் உரைகளின் இடையே இணைத்துள்ளார்.

**முன்னோர்கள்**

**சங்ககால மன்னர்கள்**

நலங்கிள்ளி - நெடுங்கிள்ளி[138]

செங்குட்டுவன்[139]

குமணன்[140]

கரிகாலன் [142]

அதியமான்

பாரி[142]

சேரமான் கோவன்[143]

வழுதி[144]

பெருநற்கிள்ளி[145]

**தொல்காப்பிய காலத்தவர்**

அகத்தியர்[146]

பாணினி[147]

கௌடில்யர்[148]

பனம்பாரனார்[149]

**இலக்கியப் புலப்பாடு**

தொல்காப்பியப்பூங்கா படைத்த கலைஞர் பழந்தமிழ் இலக்கியங்களையும், தம் காலப் படைப்புகளையும், தம் படைப்புகளையும் நினைவூட்டும் வண்ணம்உரை படைத்துள்ளார் என்பதற்கு,

பழந்தமிழ் இலக்கிய இலக்கணங்கள்

புறநானூறு[150]

கலித்தொகை[151]

சிறுபாணாற்றுப்படை[152]

திருக்குறள்[153]

சிலப்பதிகாரம்[154]

நன்னூல்[155]

கலிங்கத்துப்பரணி[156]

நாலடியார்[157]

இராமாயணம்[158]

மகாபாரதம்[159]

திருவருட்பா[160]

**வடமொழி நூல்கள்**

தர்க்கசாத்திரம்[161]

பில்கணியம்[162]

**தற்காலத்திய இலக்கியங்கள்**

சத்திய சோதனை[163]

உலகச் சரித்திரம்[164]

பாண்டியன் பரிசு[165]

எதிர்பாராத முத்தம்[166]

தமிழச்சியின் கத்தி[167]

குடும்ப விளக்கு[168]

பரம்பரைகள்[169]

வெள்ளை மாளிகை[170]

நீதிதேவன் மயக்கம்[171]

இராவண காவியம்[172]

**தன் படைப்புக்கள்**

தென்னவன் காதை[173]

ரோமாபுரி பாண்டியன்[174]

**பழங்கதை**

நல்லதங்காள் கதை[175] போன்றவை அகச்சான்றுகளாகும்.

**வடசொற்கள்**

தொல்காப்பியர் காலத்தில் வடவர் நாகரிகம் தமிழ்நாட்டு மக்களோடு இணைந்துவிட்டது. தொல்காப்பியர் வடசொற்களைத் தவிர்க்க நினையாததுபோல், தொல்காப்பியப் பூங்கா படைத்த கலைஞரும் வடசொற்களை உரை நடுவே அமைத்துள்ளதற்கு,

பூர்வம்[176]

பூரிப்பு[177]

ஆதாரம்[178]

ஆனந்தம்[179]

பண்டிதர்[180]

மடாதிபதி[181]

மலிவு [182]

பத்திரிக்கை[183]

முகூர்த்தம்[184]

லக்னம்[185]

விவாகம்[186]

வைதீகம்[187]

மாங்கல்யம்[188]

அங்கீதம்[189]

அமர்க்களம்[190]

அமளி [191]

பைத்தியம்[192]

ரசிகை[193]

விஷயம்[194]

சந்தேகம்[195]

வக்கிரம்[196]

ஆலவட்டம்[197]

புத்தகம்[198]

பாதை[199]

பகிர்வு[200]

பாதம் [201]

சிசு [202]

வாதாடல்[203]

உத்தமம்[204]

காரியம்[205]

ரோஜா[206]

காயம்[207]

ஆசிரமம்[208]

திடம்[209]

பிரதிநிதி[210]

பஞ்சலோகம்[211]

குருக்கள்[212]

பீடம்[213]

ஆதிக்கம்[214]

உற்சவர்[215]

தகர்ப்பு[216]

உபதேசம்[217]

யாகம்[218]

தருணம்[219]

அற்புதம்[220]

கலாச்சாரம்[221]

காணிக்கை[222]

தெய்வீகம்[223]

அலங்காரம்[224]

பயம்[225]

கணித்தல்[226]

யோசனை[227]

நிம்மதி[228]

ஆபத்து[229]

மாருதம்[230]

கணிசமான[231]

இலட்சியம்[232]

பரலோகம்[233]

அதிதி[234]

பஞ்சாங்கம்[235]

சோகம்[236]

பரிதாபம் [237]

பூசாரி [238]

அருவெருப்பு[239]

நேயம் [240]

வியாபாரம்[241]

குமாஸ்தா[242]

அதிகாரி[243]

அஸ்திரம்[244]

சுபாஷ்[245]

பிரதமர்[246]

பிரியாவனம்[247]

வேதனை[248]

கோலம்[249]

சுயநலம்[250]

கஞ்சத்தனம்[251]

அகிம்சை[252]

லட்சோபலட்சம்[253]

பரிணாமம்[254]

தர்மம்[255]

மோகினி[256]

அநீதி[257]

வர்ணனை[258]

சப்தம்[259]

அடார்த்தி[260]

சூத்திரம்[261]

பத்தினி[262]

அசோகம்[263]

விரோதம்[264]

விகடம்[265]

சுதந்திரம்[266]

மங்கல்[267]

கலைஞரின் எழுத்துலகப் பயணத்தில் தொல்காப்பியப் பூங்கா ஒரு திருப்பு முனையாகும். தொல்காப்பிய இலக்கணத்தை மக்களிடம்

எடுத்துச் செல்வதற்கு 'எளிமை' விளக்க முறையைக் கலைஞர் கையாண்டுள்ளார். இலக்கியத்தை எளிமையாகப் புலப்படுத்த மிகுந்த புலப்பாட்டுத்திறன்கள் வேண்டும். கலைஞர் மக்களிடம் எடுத்துக்கூறும் முறையில் வெற்றி பெற்றவர். அவ்வகையில் இலக்கணச் சிந்தனைகளையும் எடுத்துச் சொல்ல தொல்காப்பியப் பூங்காவில் சிறப்புக்கவனம் செலுத்தியுள்ளார். தொல்காப்பியப் பூங்காவில் இடம்பெறும் இலக்கணப் புலப்பாட்டு நெறிகளை இவ்வியல் மதிப்பிடுகிறது.

# அடிக்குறிப்பு

1. கலைஞர் மு.கருணாநிதி, **தொல்காப்பியப்பூங்கா**, பக்.41-45.
2. தொல்காப்பியர், **தொல்காப்பியம்,** எழு.நூ.பா.1.
3. மே.நூ. பா.2
4. கலைஞர் மு.கருணாநிதி, **தொல்காப்பியப்பூங்கா**, பக்.46-50.
5. மே.நூ.பக். 51 - 54.
6. மே.நூ.பக்.55-60
7. மே. நூ. ப.60
8. தொல்காப்பியர், **தொல்காப்பியம்,** எழு,நூ.பா.19
9. மே.நூ.நூ.பா. 20
10. மே.நூ.நூ.பா. 21
11. கலைஞர் மு.கருணாநிதி, **தொல்காப்பியப் பூங்கா,** பக்.71-72.
12. மே. நூ.பக். 73 - 76.
13. எழு. நூ. பா. 69
14. எழு. நூ. பா.13
15. கலைஞர் மு.கருணாநிதி, **தொல்காப்பியப் பூங்கா,** பக்.87-89.
16. மே. நூ.ப. 90
17. மே. நூ.ப. 92
18. மே. நூ.பக். 91 - 93
19. கிளவி. நூ.பா.27
20. மே. நூ.நூ.பா.62
21. கலைஞர் மு.கருணாநிதி, **தொல்காப்பியப் பூங்கா,** பக்.99-102
22. மே.நூ.பக்.104 - 109
23. மே.நூ.பக். 110 - 114
24. மே. நூ.பக். 116 - 120
25. கிளவி. நூ.பா.12.
26. கலைஞர் மு.கருணாநிதி, **தொல்காப்பியப் பூங்கா**, ப.134
27. மே. நூ.ப. 135

28. பே. நூ.ப. 136
29. பே. நூ.ப. 137
30. பே. நூ.ப. 162
31. பே. நூ.ப. 164
32. பே. நூ.ப. 164
33. பே. நூ.ப. 165
34. பே. நூ.ப. 166
35. பே. நூ.ப. 199
36. பே. நூ.ப. 199
37. பே. நூ.ப. 200
38. பே. நூ.ப. 204
39. பே. நூ.ப. 205
40. பே. நூ.ப. 216
41. பே. நூ.ப. 238
42. பே. நூ.ப. 238
43. பே. நூ.ப. 238
44. பே. நூ.ப. 239
45. பே. நூ.ப. 240
46. பே. நூ.ப. 240
47. பே. நூ.ப. 242
48. பே. நூ.ப. 242
49. பே. நூ.ப. 242
50. பே. நூ.ப. 243
51. பே. நூ.ப. 244
52. பே. நூ.பக். 250 -256
53. பே. நூ.ப. 252
54. பே. நூ.பக். 258 - 259
55. பே. நூ.பக். 291 - 295
56. பே. நூ.ப. 296
57. பே. நூ.பக். 219 - 300
58. பே. நூ.ப. 306

59. மே. நூ.பக். 341 - 344
60. பொரு.நூ.பா.15
61. கலைஞர் மு.கருணாநிதி, **தொல்காப்பியப்பூங்கா,** பக்.351-357.
62. மே. நூ.ப. 364.
63. பொரு.நூ.பா.23
64. கலைஞர் மு.கருணாநிதி, **தொல்காப்பியப்பூங்கா,** ப.366.
65. மே. நூ.ப. 366
66. மே. நூ.பக்.361-367.
67. பொரு.நூ.பா.33
68. கலைஞர் மு.கருணாநிதி, **தொல்காப்பியப்பூங்கா,** ப.382.
69. மே. நூ.பக்.399-401.
70. மே. நூ.பக். 406-408.
71. மே. நூ.ப. 411
72. மே. நூ.ப. 411
73. மே. நூ.ப. 412
74. மே. நூ.ப. 412.
75. மே. நூ.ப. 413
76. மே. நூ.ப. 413
77. மே. நூ.ப. 413
78. மே. நூ.ப. 414-415
79. மே. நூ.பக். 415-416
80. பொரு.மெய்.நூ.பா.5
81. கலைஞர் மு.கருணாநிதி, **தொல்காப்பியப்பூங்கா,** ப.424.
82. பொரு.மெய்.நூ.பா.7
83. மே.நூ.நூ.பா.8
84. பொரு.உவமை.நூ.பா.4
85. கலைஞர் மு.கருணாநிதி, **தொல்காப்பியப் பூங்கா,** ப.468.
86. பட்டினப்பாலை பா.வரி
87. கலைஞர் மு.கருணாநிதி, **தொல்காப்பியப்பூங்கா,** பக்.465-471.
88 மே. நூ.பக்.482-488
89. மரபியல் நூ.பா.92

90. கலைஞர் மு.கருணாநிதி, **தொல்காப்பியப்பூங்கா,** ப.507
91. மே. நூ.ப. 99
92. மே. நூ.ப. 116
93. மே. நூ.ப. 190.
94. மே. நூ.ப. 268
95. மே. நூ.ப. 273
96. மே. நூ.ப. 279
97. மே. நூ.ப. 285
98. மே. நூ.ப. 340
99. மே. நூ.ப. 358
100. மே. நூ.ப. 383
101. மே. நூ.ப. 101
102. மே. நூ.ப. 102
103. மே. நூ.ப. 468
104. மே. நூ.ப. 104
105. மே. நூ.ப. 520
106. மே. நூ.ப. 106
107. மே. நூ.ப. 479
108. மே. நூ.ப. 130
109. மே. நூ.ப. 81
110. மே. நூ.ப. 494
111. மே. நூ.ப. 518
112. மே. நூ.ப. 139
113. மே. நூ.ப. 412
114. மே. நூ.ப. 66
115. மே. நூ.ப. 51
116. மே. நூ.ப. 51
117. மே. நூ.ப. 40
118. மே. நூ.ப. 72
119. மே. நூ.ப. 40
120. மே. நூ.ப. 150

121. மே. நா.ப. 40
122. மே. நா.ப. 40
123. மே. நா.ப. 40
124. மே. நா.ப. 48
125. மே. நா.ப. 36
126. மே. நா.ப. 362
127. மே. நா.ப. 362
128. மே. நா.ப. 127
129. மே. நா.ப. 128
130. மே. நா.ப. 95
131. மே. நா.ப. 131
132. மே. நா.ப. 46
133. மே. நா.ப. 47
134. மே. நா.ப. 55
135. மே. நா.ப. 73
136. மே. நா.ப. 94
137. மே. நா.ப. 18
138. மே. நா.ப. 224
139. மே. நா.ப. 40
140. மே. நா.ப. 48
141. மே. நா.ப. 432
142. மே. நா.ப. 467
143. மே. நா.ப. 540
144. மே. நா.ப. 510
145. மே. நா.ப. 510
146. மே. நா.ப. 510
147. மே. நா.ப. 517
148. மே. நா.ப. 515
149. மே. நா.ப. 527
150. மே. நா.ப. 67

151. மே. நூ.ப. 211
152. மே. நூ.ப. 184
153. மே. நூ.ப. 479
154. மே. நூ.ப. 107
155. மே. நூ.ப. 81
156. மே. நூ.ப. 522
157. மே. நூ.ப. 220
158. மே. நூ.ப. 273
159. மே. நூ.ப. 48
160. மே. நூ.ப. 109
161. மே. நூ.ப. 394
162. மே. நூ.ப. 527
163. மே. நூ.ப. 74
164. மே. நூ.ப. 106
165. மே. நூ.ப. 106
166. மே. நூ.ப. 107
167. மே. நூ.ப. 108
168. மே. நூ.ப. 315
169. மே. நூ.ப. 106
170. மே. நூ.ப. 106
171. மே. நூ.ப. 483
172. மே. நூ.ப. 108
173. மே. நூ.ப. 108
174. மே. நூ.ப. 38
175. மே. நூ.ப. 467
176. மே. நூ.ப. 416
177. மே. நூ.ப. 46
178. மே. நூ.ப. 48
179. மே. நூ.ப. 62
180. மே. நூ.ப. 80

181. மே. நா.ப. 81

182. மே. நா.ப. 95

183. மே. நா.ப. 109

184. மே. நா.ப. 110

185. மே. நா.ப. 112

186. மே. நா.ப. 112

187. மே. நா.ப. 112

188. மே. நா.ப. 112

189. மே. நா.ப. 116

190. மே. நா.ப. 116

191. மே. நா.ப. 118

192. மே. நா.ப. 118

193. மே. நா.ப. 124

194. மே. நா.ப. 124

195. மே. நா.ப. 124

196. மே. நா.ப. 126

197. மே. நா.ப. 149

198. மே. நா.ப. 157

199. மே. நா.ப. 161

200. மே. நா.ப. 200

201. மே. நா.ப. 165

202. மே. நா.ப. 168

203. மே. நா.ப. 170

204. மே. நா.ப. 182

205. மே. நா.ப. 182

206. மே. நா.ப. 183

207. மே. நா.ப. 190

208. மே. நா.ப. 193

209. மே. நா.ப. 196

210. மே. நா.ப. 199

211. மே. நா.ப. 223
212. மே. நா.ப. 223
213. மே. நா.ப. 224
214. மே. நா.ப. 224
215. மே. நா.ப. 224
216. மே. நா.ப. 227
217. மே. நா.ப. 230
218. மே. நா.ப. 243
219. மே. நா.ப. 245
220. மே. நா.ப. 220
221. மே. நா.ப. 245
222. மே. நா.ப. 246
223. மே. நா.ப. 258
224. மே. நா.ப. 258
225. மே. நா.ப. 280
226. மே. நா.ப. 282
227. மே. நா.ப. 291
228. மே. நா.ப. 302
229. மே. நா.ப. 328
230. மே. நா.ப. 338
231. மே. நா.ப. 343
232. மே. நா.ப. 354
233. மே. நா.ப. 364
234. மே. நா.ப. 374
235. மே. நா.ப. 383
236. மே. நா.ப. 383
237. மே. நா.ப. 389
238. மே. நா.ப. 392
239. மே. நா.ப. 392
240. மே. நா.ப. 395

241. மே. நூ.ப. 406

242. மே. நூ.ப. 407

243. மே. நூ.ப. 409

244. மே. நூ.ப. 410

245. மே. நூ.ப. 412

246. மே. நூ.ப. 413

247. மே. நூ.ப. 414

248. மே. நூ.ப. 414

248. மே. நூ.ப. 416

249. மே. நூ.ப. 418

250. மே. நூ.ப. 420

251. மே. நூ.ப. 420

252. மே. நூ.ப. 423

253. மே. நூ.ப. 423

254. மே. நூ.ப. 424

255. மே. நூ.ப. 424

256. மே. நூ.ப. 426

257. மே. நூ.ப. 434

258. மே. நூ.ப. 459

259. மே. நூ.ப. 475

260. மே. நூ.ப. 477

261. மே. நூ.ப. 485

262. மே. நூ.ப. 494

263. மே. நூ.ப. 494

264. மே. நூ.ப. 494

265. மே. நூ.ப. 498

266. மே. நூ.ப. 506

267. மே. நூ.ப. 520

# இயல் - 5

# காவிய புலப்பாட்டு நெறி

இலக்கியம் உருவாக கரு Theme தேவை. அக்கருவை சுமக்கும் உடல்தான் வடிவம் (form). கருப்பொருளை இலக்கிய வடிவத்தில் படிப்போர் மனங்கொள்ளும் வகையில் வெளிப்படுத்துவது புலப்பாட்டுத்திறன். இலக்கியப்படைப்பு வெற்றியடைவதற்கு கரு, வடிவம், வெளிப்படும் திறன் ஆகிய மூன்றும் அவசியமாகும்.

ஒரு படைப்பாளன் படிப்பதற்குச் சுவையூட்டும் வண்ணம் இலக்கியத்தைப் படைக்க வேண்டும். அவ்வாறு படைக்கும்பொழுது உவமை, கற்பனை, வருணனை போன்ற கூறுகள் அழகியல் கூறுகளாக அமையும். இக்கூறுகள் படைப்பாளனின் படைப்புத் திறனை விளக்கும். கலைநலன் தாய்காவியத்தில் அவை அமைந்த தன்மைகளை இவ்வியல் விளக்குகிறது.

**கவிதை விளக்கம்**

"கவிதை என்பது அழகுணர்ச்சியின் வெளிப்பாடு, உணர்ச்சியின் குமுறல், கற்பனையின் வார்ப்படம் கருத்தின் ஓட்டம். எனவே எங்கே அழகும், உணர்ச்சியும், கற்பனையும், கருத்தும் உள்ளனவோ அங்கெல்லாம் கவிதை இருக்கிறது. கவிதை மிகப்புலமை வாய்ந்த இலக்கிய வடிவம் சொற்கள் கவிதையின் விளக்கம். கவிதைக்கு அதன் உள்ளடக்கமே வார்ப்புள்ள பகுதி.[1] எல்லா வகையான அறிவிற்கும் கவிதை மையமாகவும், எல்லைக் கோடாகவும் அமைந்துள்ளது.[2] கவிதை படைப்பதற்கும், சுவைப்பதற்கும் பயிற்சி அவசியம்.[3]

**கலைஞரின் படைப்பு நோக்கம்**

*கலையார்வம் உடையவர்கள் தமது கலையுணர்விற்கும் வடிவம் கொடுப்பதில் நாட்டமுடையவர்களாக இருப்பார்கள். புறத்தில் தோன்றும் நிகழ்ச்சிகள் கலைஞரின் படைப்புலகில் பக்குவப்பட்டு மீண்டும் புத்துணர்வு பெற்றுப் புதுப்பொலிவுடன் வெளிப்படுகின்றன.*

*சமுதாயச் சிந்தனையுடன் நாடுகின்ற கலைஞர், தாம் கவிதை எழுதுவதற்குரிய காரணத்தை,*

> யாப்பின்றிப் போனாலும் போகட்டும் நம்நாடு. மொழி மனம் உணர்வெல்லாம் காப்பின்றிப் போதல் கூடாதெனும் கொள்கையொன்றால் வாய்ப்பின்றிப் போனாலும் செய்யுள் கற்கக் காய்ப்பின்றி நிற்கின்ற மரமாக ஆகாமல் நெஞ்சில் ஊறுகின்ற உணர்ச்சிகளை வரிகளாக்கிக் கொள்கை மாறுகின்ற கோடாரிகள் உணர்வதற்கு என்று சொல்வேன்[4]

*என்று குறிப்பிட்டுள்ளார்.*

*"கலை கலைக்காகவே எனக் கதைத்தோர் ஓய்ந்துவிட்டார்" எனக் கூறும் கலைஞர் கவிதைக் கலையைக் கொள்கை மாறிகளைத் திருத்தற்குரிய கருவியாகப் பயன்படுத்துவதாகக் குறிப்பிட்டுள்ளது நினைக்கத்தக்கது.*

**கலைஞர் கவிஞரே**

*"யாப்பிலக்கணம் கற்றவர்கள் இலக்கணப் பிழை இல்லாமல் செய்யுள் பாடலாம். ஆனால், அது கவிதையாக இருக்குமென்று சொல்ல இயலாது. சொல்லமைதி, பொருளமைதி, கவிதையெழில், யாப்பமைதி ஆகிய எல்லாம் சேர்த்து அமைவதே நல்ல கவிதை. இவற்றில் கவியெழிலைத் தவிர மற்றவற்றை இத்தகையன என்று*

எடுத்துக்காட்டலாம், கற்றுக் கொள்ளலாம். ஆனால், கவிதை எழில் என்பது அவரவர்களுடைய உள்ளுணர்வை ஒட்டி அமைவது என்று கூறுவர். கருவிலே திருவடையவர்களே நல்ல கவிஞராகிறார்கள்"[5] என்னும் கருத்து உண்மைக் கவிஞனுக்குரிய இலக்கணத்தைச் சுட்டியுள்ளது.

**கலைஞரின் கவிதைச் சிறப்பு**

"கலைஞரின் கவிதைகளைப் பாராட்டி 1969ம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 14ஆம் நாள் அமெரிக்காவிலே இருக்கின்ற உலகக் கவிஞர் பேரவை உலகப் பெருங் கவிஞர் என்கிற பட்டத்தை அவருக்கு வழங்கிச் சிறப்பித்தது."[6]

"கலைஞர் ஒரு புதிய மரபின் முன்னோடி, வசன கவிதை என்று உலகத்தில் அவர் ஒரு முடிசூடா மன்னர், தனிப்பாடல், காவியம், நாடகம் அனைத்தையும் வசன கவிதையில் எழுதிக் காட்டிய புதுமைப் பாவலர் புரட்சிக் கவிஞர் கலைஞருக்கு ஈடாகக் கூடியவர் கலைஞரே"[7]

**கதைக்கரு**

அதிகாரவர்க்கத்தை எதிர்த்துப் போராடும் தொழிலாளர்களின் செயல்பாடு தாய் காவியத்தின் கருவாகும்.




என்ற வரைபடம் தாய் காவியத்தில் கலைஞரின் திறன்களுக்குரிய நிலைக்களன்களாகும்.

**உவமைகள்**

கலைஞரின் படைப்பான கவிதை நடையில் கார்க்கியின்தாய் காவியத்தில் மொத்தம் 56 உவமைகள் இடம்பெறுகின்றன. அவை அனைத்தையும், தமிழ் மரபை ஒத்த உயர்ந்த உவமைகளாகக் கலைஞர் படைத்துள்ளார். இவ்வகையான உவமைகளை இருவகையாகப் பாகுபடுத்தலாம்.

1. கருத்துப் புலப்பாட்டு உவமை
2. இன்புறுத்தும் உவமை

கருத்துப் புலப்பாட்டு உவமை என்பது கருத்தை மையமாகக் கொண்ட உவமையாக அமைகிறது.

உவமையைப் படிக்கும்போதே படிப்பவருக்கு ஒருவித மகிழ்ச்சியைத் தருவதாக அமையும் உவமையே இன்புறுத்தும் உவமையாகும்.

**உவமை விளக்கம்**

ஒரு பொருளை அறியாத ஒருவனுக்கு அதனை அறிவிக்கும்பொழுது அதனோடு ஒத்த வேறொரு பொருளைக் காட்டி இதுபோலும் அது எனக் கூறும்போது அப்பொருளின் தன்மையானது மற்றவருக்கு விளங்கி விடுகிறது. இவ்வகை விளக்கிக் காட்டப்படும் பொருளே உவமையாகும்.

உவமையானது உயர்ந்த பொருளோடு உவமிக்கப்பட வேண்டும். அது இல்லாமல் கீழான பொருட்களை உவமையாகக் கொள்ளல் ஏற்புடையதன்று. உவமையானதைக் கூறும்போது அதைக் கேட்போர் மகிழ்ச்சியடையும்படி இருக்க வேண்டும். கூறும் உவமையும் பொருளும் ஒன்றோடு ஒன்று சேர்ந்ததாக இருக்கும் தன்மையாக அமைய வேண்டும்.

"உவமையணி கவிதையில் அல்லது ஒரு குறிப்பிட்ட இலக்கிய வகையில் பயன்படுகிறது. தெளிவாகத் தெரியாதனவற்றை நன்கு தெளிவுபடுத்திக் காட்டவும், தெரிந்ததைப் பயில் வார்க்கும் சுவையூட்டும் வண்ணம் அழகுறக் காட்டவும் உவமை பயன்படுகிறது."

**கருத்துப் புலப்பாட்டு உவமை**

கலைஞர் தாய் காவியத்தில் கருத்தைப் புலப்படுத்தும் வகையில் உவமைகளைக் கூறியுள்ளார்.

**வெளிர் வானம்**

நிலோவ்னா வீட்டில் இரகசியக் கூட்டம் நடைபெறுகிறது. அக் கூட்டத்திற்கு வந்திருந்த நிக்கோலாய் ஏதோ கேட்க அதற்கு நடாஷாவும் பியோடரும் கூறும் விதமாகக் கலைஞர்,

**நட்சத்திரங்கள் இல்லாத ஆகாயம் போல![8]**

என்ற உவமைத் தொடரை அமைத்துள்ளார்.

நட்சத்திரங்கள் இல்லாத ஆகாயம் எவ்வாறு அழகு இல்லாமல் வெளிர் வானமாக இருக்குமோ அதுபோல நடாஷாவும் பியோடரும் இல்லாத இடம் இருப்பதாக உவமை கூறப்பட்டுள்ளது.

**சந்தனத்தாய்**

தாய் நிலோவ்னா வாழ்நாளில் பாதி நாட்களை வேலை பார்த்துப் பார்த்தே, கழிக்கிறாள். அதோடு மட்டுமல்லாமல், தன்னுடைய மகன் நடத்தும் கூட்டத்திற்குத் தன்னால் முடிந்த உதவிகளைச் செய்து வருகிறாள் என்பதைக் கலைஞர்,

**தேய்க்கத் தேய்க்க தேய்ந்து மணம் தரும் சந்தனமாகத் தேய்ந்து**
**போனாள் அந்தத் தாய்[9]**

என்று குறிப்பிட்டுள்ளார்.

**மாணவனின் நடத்தை**

*மாணவர் ஆசிரியரிடம் நெருங்கி இருக்கவும் கூடாது, விலகியும் இருத்தல் கூடாது என்று கருதுவது தமிழ் இலக்கண மரபு. குளிர் எவ்வாறு காய்வோமோ அதுபோல ஆசிரியராக இருக்கும் பாவெலுக்கு இரைபின் மாணவனாய் இருந்தான் என்பதைக் கலைஞர்,*

> அணுகாமல் அகலாமல் தீக்காய்வது போல் ஆசிரியர் பாவெலுக்கு
> இரைபின் மாணவனாயிருந்துள்ளான்[12]

*என்று நன்னூல் தொடரை இணைத்துக் குறிப்பிட்டுள்ளார்.*

**குறைமாதக் குழந்தை**

*பாவெல் சிறைச்சாலையில் இருக்கும் நேரம் தாயானவள் மகனைப் பார்க்க வருகிறாள். அவள் வரும்போது மகனைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலைக் கலைஞர்,*

> குறைமாதத்தில் பிறந்துவிட்ட குழந்தையை நிறைமாதக் குழந்தை
> போல் வளர்ப்பதற்கு [13]

*எனச் சுவைபடத் தாயன்பை வெளிப்படுத்தியுள்ளார்.*

**படிக்காத அறிஞர்**

*அன்னை நிலோவ்னா படிக்காத பெண். அவளுடைய மகன் நடத்தும் கூட்டத்திற்குத் தன்னால் முடிந்த உதவிகளைச் செய்கிறாள். அவளை ஒரு படிக்காத அறிஞர் என்று கூறும் கலைஞர்,*

*அன்னை நிலோவ்னா அறிஞரைப் போலப் பேசலாம் (க.தா.கா.ப.156)*

*என்ற உவமைத் தொடரைப் படைத்துள்ளார்.*

*பாவெல் நடத்தும் கூட்டத்தில் உள்ளவர்கள் தொழிலாளர்களின் நலனுக்காகப் பல்வேறு செய்திகளைக் கூறுகின்றனர். அப்போது*

நிலோவ்னா கூறியதைக் கேட்டு மற்றவர்கள் கூறுவதாக உவமை அமைந்துள்ளது.

**வைகறைப்பொழுது**

சிறைக்குச் சென்றிருந்த ஆண்ட்ரி, பாவெல் இருவரும் வீட்டிற்குள் பேசிக் கொண்டு இருக்கின்றனர். இவர்களின் சத்தம் கேட்டுத் தாயானவள் வீட்டிற்குள்ளே சென்று பார்க்கும் விதத்தைக் கலைஞர்,

வைகறைப் பொழுதில்
ஒரு பொருளைப் பார்க்க
விழிகளைக் கசக்கிக்
கூர்மையாக்கிக் கொள்வது போல[14]

என்று உவமையில் அழகாகக் காட்டியுள்ளார்.

**தரிசான விவசாய நிலம்**

விவசாயிகளின் வயிராக்கியம் என்பது மிகவும் வாஞ்சையுடையது. அவர்கள் மனது வைத்தால் விவசாயம் நிலங்கள் அனைத்தும் தரிசாகிவிடும். இதனைக் கலைஞர்,

சாவுக்குப் பிறகு மிஞ்சும்
சாம்பலைப் போல[15]

என்று உவமையாகக் கூறியுள்ளார்.

**குற்றவாளிக் கூண்டு**

பாவெல் காவலர்களால் கைது செய்யப்பட்டு நீதிமன்றத்தில் ஆஜர் செய்யப்படுகிறான். நீதி விசாரணையின் முன்பு நீதிமன்றத்திற்குள் இருக்கும் நிலோவ்னா குற்றவாளிக் கூண்டைப் பார்க்கும் விதமாகக் கலைஞர்,

> குழந்தையாக அவனை இட்டுத் தாலாட்டிக் கொஞ்சிய தொட்டில் போலவே அந்தக் கூண்டு ஆடிக் கொண்டிருந்தது. [16]

என்று குறிப்பிட்டுள்ளார்.

**இன்புறுத்தும் உவமை**

கலைஞர் தாய் காவியத்தில் கூறும் உவமைகள் படிப்போர் மனத்தை இன்புறுத்துவதாக அமைந்துள்ளன.

**அதிகாரிகளின் அடக்குமுறை**

வேலை செய்யும் தொழிலாளி தொழிலாளர் வேலை செய்யும் போது அதிகாரிகள் வேண்டுமென்றே ஏதாவது ஒரு பொய்க் குற்றம் கூறித் தாக்குவதைக் கலைஞர்,

> மண்பானையைப் போல் வேலை செய்யும் தொழிலாளி மண்டைகளை உடைக்கிறான்[17]

என்று குறிப்பிட்டுள்ளார்.

உடைந்த மண்பானையை மக்கள் தெருவிலே போட்டு உடைப்பது போல் உயிருள்ள தொழிலாளர்களின் மண்டைகளை அதிகாரிகள் உடைப்பதை இங்கு உவமையாக அமைந்துள்ளது.

**கொலு பொம்மை**

நடாஷா என்னும் பெண் நிலோவ்னா வீட்டிற்கு வருகிறாள். அவள் வந்து அமர்ந்தவுடன் அவளை நிலோவ்னா பார்த்து ரசிப்பதைக் கலைஞர்,

> கொலு பொம்மைகளைப் பார்த்துப் பார்த்து இந்தியப் பெண்கள் மகிழ்வது போல்[18]

என்று உவமித்துள்ளார்.

இந்தியப் பெண்களானவர்கள் விஜயதசமியன்று வாரக் கணக்கில் தங்களால் இயன்ற பொம்மைகளை வரிசையாக அடுக்கி வைத்து அதைப் பார்த்து இரசித்துப் பார்ப்பர். இரஷ்யத்தாயும் அந்தப் பெண்ணைப் பார்த்து இரசிப்பதை உவமையாகக் குறிப்பிட்டுள்ளார்.

**அரசு உத்தரவு**

தொழிலாளர்களின் செயலை அடக்க அரசு உத்தரவு பிறப்பித்தலும் ஊரெங்கிலும் பறை சாற்றியதுடன் அதிகாரிகளுக்கும் உத்தரவு போட்டனர் என்பதை,

> அரசு உத்தரவு அவசரமாய் வந்தவுடன் புற்றீசல் போல அதிகாரிகள்
> புறப்பட்டுவிட்டனர்[19]

என்று குறிப்பிட்டுள்ளார்.

இத்தொடரில் புற்றீசலை உவமையாக அமைந்துள்ளது. அதிகாரிகள் புற்றீசலுக்கு உவமை ஆகின்றனர். ஈசலால் எந்த உரு காரியமும் செய்யமுடியாது என்பதைக் கலைஞர் குறிப்பாகச் சுட்டியுள்ளது நினைக்கத்தக்கது.

**கரிய உருவம்**

தாய் காவியத்தில் தொழிலாளர்கள் கூட்டம் நடத்திக் கொண்டிருக்கின்றனர். அவ்வேளையில் கூட்டம் நடக்கும் வீட்டின் வாசலில் திடீரென ஓர் அதிகாரியின் உருவம் தென்படுகிறது. அவனைப் பார்ப்பதற்கு எவ்வாறு இருக்கிறான் என்பதைக் கலைஞர்,

> திடுமென ஒரு கரிய உருவம்
> பருமனாய்க் காண்டாமிருகம் போல்[20]

என்ற உவமை மூலம் விளக்கியுள்ளார். கருமை மட்டுமல்ல, உருவமும் பருமனாக, அவலெட்சணமாக இருந்தது என்பதைக் காட்ட காண்டா மிருகம் உவமையாகின்றது.

**விலைவாசி உயர்வு**

தாய் நிலோவ்னாவும் மகன் பாவெலும் இயேசுநாதர் படத்தருகே சென்று அங்கு இருந்த ஒரு குழாயில் மெழுகைச் செருகி வைத்து, தீக் குச்சியால் பற்றவைத்தனர். அது எரிகின்ற விதத்தைக் கலைஞர்,

அழகாகக் கொழுந்துவிட்டு - அது
மிளகாய் பழம் போல நின்று கொண்டு எரிந்த போது[21]

எனக் கூறியுள்ளார். தீச்சுடருக்கு மிளகாய்ப் பழம் உவமையாகக் கூறப்பட்டுள்ளது நினைத்து இன்புறத்தக்க உவமையாகும்.

**உறுமி ஊளையிடும் உள்ளம்**

கூட்டம் முடிந்து நிக்கோலாய், வீட்டின் சமையலறையில் இருக்கிறான். அவ்வேளையில் அங்கு மற்ற தோழர்களுள் ஒருவன் நிக்கோலாய் தூங்கவில்லையா! எனக் கேட்டதற்கு, அவன் கூறும் பதிலாகக் கலைஞர்,

உங்களுக்கெல்லாம் தெரியாது ஓநாயைப் போல் என் உள்ளம்
உறுமி ஊளையிட்டுக் கொண்டுள்ளது[22]

என்று குறிப்பிட்டுள்ளார். மனம் அமைதியின்றிச் சிதைந்திருந்தது என்பதை ஊளைச்சத்தம் என்று குறிப்பிட்டுள்ளது ஆழம்பொதிந்தது.

**மக்கள் கூட்டம்**

கூட்டத்தை வழிநடத்தி வீதிகள் வழியாகப் போராட்டம் செய்துவரும் நிலோவ்னா, பாவெல், ஆண்ட்ரி, பியோடர்மாஜின் ஆகியோர் வருகின்றனர். அவர்கள் வருவதைக் காணவரும் மக்கள் கூட்டத்தைக் கலைஞர்,

மடையுடைத்துக் கொண்டு வெள்ளம் கரை புரளும்போது

தலைதூக்கி மீன்கள் துள்ளிக் குதிப்பதுபோல்[23]

என மீன்களை உவமையாகக் கூறியுள்ளார்.

**மிதக்கும் படகு பாவெல்**

பாவெல் மே தின ஊர்வலத்தின்போது கையில் செங்கொடியைப் பிடித்துக் கொண்டே வருகிறான். அவன் கூட்டத்தின் நடுவே வருவதைக் கலைஞர்,

மக்கள் கடலின் மத்தியிலே

ஒரு படகு போல

மிதந்து கொண்டு [24]

என படகை உவமையாகக் கூறியுள்ளார்.

**காலில்லாத பொம்மை**

நிலோவ்னா ஆலை வாசலில் உணவு விற்பது போல துண்டறிக்கை விநியோகிக்கிறாள். அங்குள்ள ஓர் அதிகாரிக்குத் தெரிந்து மேரியா என்னும் பெண்ணை அழைத்து நிலோவ்னாவை அறைக்குள் அழைத்துச் சென்று சோதனையிடச் சொல்கிறான். அப்போது தாய் சொல்லும் பாங்காகக் கலைஞர்,

காலில்லாத ஒரு பொம்மை

நடந்துசெல்ல முடியாமல்

நகர்ந்து செல்வது போல [25]

என்று குறிப்பிட்டுள்ளார். இதில் தாயின் நிலையை பொம்மை போல என்று கூறுவது இன்புறும் வகையில் அமைந்துள்ளது.

**கத்தும் தவளை**

இரையின் காவலர்களால் கைது செய்யப்பட்டு நிக்கோல்ஸ் கோபி நகரின் வழியாக அழைத்து வரப்படுகிறான். அவன் வரும் வழியில்

தொழிலாளிகளின் நலனாகப் பல்வேறுவிதமான செய்திகளைச் சத்தம் போட்டு கூறிக்கொண்டு வந்தாலும் கேட்பார் யாரும் இல்லை என்பதைக் கலைஞர்,

வானத்தை நோக்கித் தவளை கத்துவது போல
வரட்டுக் கூச்சல் தான்[26]

என்று தவளை கத்துவதை உவமையாகக் கூறியுள்ளார்.

**கற்பனை**

கலைஞர் தாம் காணும் எதையும் தமது கற்பனைத் திறத்தால் வருணித்து வாசகர் மனக் கண்முன் தன் படைப்பைச் சுவையுற நிறுத்த வல்லவர். சிதறிக் கிடக்கும் அழகுப் பொருட்களையெல்லாம் ஒன்று திரட்டி ஒப்பற்ற உருவமாக்கிக் காட்டும் திறமை படைத்தவர் கலைஞர். அவர் தாய் காவியத்தில் கற்பனையைத் திறம்பட பயன்படுத்தியுள்ளார்.

**ஆகாயப் பெருவெளி**

பாவெல் நடத்தும் கூட்டத்திற்குப் பலர் வருகின்றனர். இவர்களையெல்லாம் பார்த்த நிலோவ்னா தன் மகன் என்றும தவறான பாதையில் செல்லமாட்டான். இக்கூட்டத்தில் என் மகனும் ஒருவனாக இருப்பது பெருமைக்குரிய ஒன்றாகும் என்று நினைத்துப் பார்க்கிறாள். நிலோவ்னா பாவெலைப் பற்றி நினைப்பதைக் கலைஞர்,

அடடே : ஆகாயப் பெருவெளியில்

அந்தகார இருள் அரும்பு கட்டுகிறதே
இருட் கடலில் பிறை நிலாப்
படகொன்று மிதக்கத் தொடங்கி
திசை தடுமாறிக் கவிழ்ந்து
மூழ்கிப் போய் விடுகிறதே[27]

என்று படைத்துள்ளது கற்பனையின அச்சமாகும்.

**மலர்த் தோட்டம்**

*சாக்கடைக் காசுப் போராட்டத்தில் கலந்துகொள்ளும் பாவெல் வாலிபனாக இருக்கிறான். அவனைப் பலரும் பல்வேறுபட்ட நிலைகளில் நினைத்துப் பார்க்கின்றனர் என்பதைக் கலைஞர்,*

> வானத்து நிலவாகவும்
> வண்ண மலர்த் தோட்டமாகவும்
> கவிஞர்கள் கண்ணுக்குத் தெரிந்தான்
> உரிமை பறிப்போரை உருத் தெரியாமல் ஆக்கிட
> உறுமி வழியும் எரிமலையாகத் தெரிந்தான்
> ஏழைத் தொழிலாளர் கண்ணுக்கு[28]

*என்று நயம்பட உரைத்துள்ளார். இருவேறுபட்ட முரண் நிலைகளைப் பாவெல் கொண்டிருந்ததைக் கலைஞர் குறிப்பாகச் சுட்டியுள்ளது மகிழத்தக்கது.*

**மூன்று கோடி**

*சிறைச்சாலை ஓரமாக நிலோவ்னா நிற்பதாக நிக்கோலாயிடம் கூறுகிறாள். அதற்கு அவன் சிறையோரம் நிற்கும்போது காவலர்கள் உன்னிடம் வந்து கேட்டால் என்ன கூறுவாய் என்று கேட்டவனிடம் தாய்,*

> நட்சத்திரங்களை எண்ணுகிறேன் என்பேன் எத்தனை எண்ணினாய்? எல்லாவற்றையும் எண்ணிவிட்டேன். மொத்தம் மூன்று கோடியே மூன்று லட்சத்து மூன்றாயிரத்து முந்நூற்றி முப்பத்து மூணு! சந்தேகமிருந்தால் நீயே எண்ணிப்பார் என்பேன்[29]

*எனத் தாய் கூறுவதாகக் கற்பனைத் தொடரைக் கலைஞர் படைத்துள்ளார்.*

**உபநீதிபதி**

*பாவெல் மற்றும் அவனுடைய சகதோழர்கள் அனைவரையும் நீதிமன்றத்தில் ஆஜர் செய்கின்றனர். நீதிமன்றத்தில் உள்ள நீதிபதியைக் கலைஞர்,*

> கிழட்டு நீதிபதி தான் மூத்த நீதிபதியென்றால் அவர் அருகில் உழக்கு
> போல் ஒரு நீதிபதி; குள்ளருக்கும் குள்ளராக உபநீதிபதியொருவர் -
> இன்னொரு பக்கத்தில் வெளுத்த முகம் பழுத்த மீசையும் கொண்ட
> வேறொரு உபநீதிபதி[30]

*என்று தீட்டியுள்ளார். நீதிபதிகளின் பல்வேறுபட்டவர்களாகக் கற்பனையின் மூலம் விளக்கிக் காட்டியுள்ளது மகிழத்தக்கது.*

**கருப்பு, சிவப்பு**

*‘தாய்’ காவலர்களால் தாக்கப்பட்டுக் கீழே விழுவதைக் கலைஞர்,*

> தாயின் கண்கள் இருண்டன
> எதிரே கறுப்பும் சிவப்புமாக
> ஏதோ நிழலாடுவதைக் கண்டான்
> சுருண்டு விழச் சுழன்றாள்[31]

*என்று கூறும் கற்பனை சிறந்ததாக அமைந்துள்ளது. இத்தொடரில்தன் கட்சியின் கொடி வர்ணமான கருப்பு, சிவப்பையும் உணர்த்த முற்பட்டுள்ள கலைஞரின் கற்பனை வளம் குறிப்பிடத்தக்கது.*

**வருணனை**

*கலைஞர் வருணிப்பதில் வல்லவர். அவர் படைப்பான கவிதை நடையில் எழுதிய தாய் காவியத்தில் வருணனை சிறப்பாக இடம் பெற்றுள்ளது. கலைஞர் தாய் காவியத்தை,*

> என் நெஞ்சில் எப்போதும் மணம்வீசும் பூ
> மார்க்சிம் கார்க்கியாம் மனிதநேய மாண்பு

மன்பதைக்குத் தந்திட்ட சிகப்பு பூ! செம் பூ!

அன்னையென்றும் , தாய் என்றும அழைக்கப்படும் அற்புதப் பூ[32]

என அழகுபட வருணிப்பது அவரது வருணனைத் திறனுக்குச் சான்றாகும்.

**புள்ளின் கீதம்**

தாயும் மகனும் ஒருவரையொருவர் நன்கு புரிந்து வைத்திருந்தனர். அவர்கள் அன்பு வைத்திருப்பதைக் கலைஞர்,

இல்லை! கூட்டுக்கு வெளியே

தன் குஞ்சைக் கண்ட ஒரு புள்ளின் கீதம்!

புன்னகை தவழக் குவியும் இதழ்கள்

புல்லாங் குழலில் வெளிப்படுத்தும் நாதம்[33]

என்று வருணித்துக் காட்டியுள்ளார்.

**பாசறைக் கூட்டம்**

தொழிலாளர்கள் அடிக்கடி ஒன்று கூடிக் கூட்டம் நடத்தினர். பாவெலின் வீட்டைக் காவலர்கள் சோதனையிட்ட வண்ணம் இருந்தனர். கூட்டத்தை வேறு இடத்திற்கு மாற்றினர். அவ்விடத்தைக் கலைஞர்,

மாதா கோயில் பக்கமுள்ள

ஓர் அடர்த்தியான காடு

அந்தக் காட்டோரம்

இடிந்தும் இடியாமலும்

இயற்கையின் அருளால்

இன்னும் விழாவில்

நின்று கொண்டிருக்கிற

நீலவண்ணம் பூசிய மண்டபம்[34]

என மண்டபத்தை வருணித்துள்ளார்.

**மே தினம்**

மே தின ஊர்வலத்தில் பாவெல், ஆண்ட்ரி இருவரையும் கைது செய்து கொண்டு செல்கின்றனர். கைது செய்யப்பட்டு, கொண்டு சென்றவர்களைப் பற்றித் தாய் எண்ணிப் பார்த்தலைக் கலைஞர்,

பாவெலன் தாமிர நிற முகமும்
ஆண்ட்ரியின் புன்னகை பூக்கும் விழிகளும்
அகண்ட தோர் நதியினையொத்த மே தின
அணிவகுப்பு மாட்சியும்[35]

என்று குறிப்பிட்டு தாமிர நிறம் மற்றும் நதியை வருணித்துள்ளார்.

**இமைகள் மூடின**

ஈகோர் காவலர்களால் நடத்தப்பட்டு மருத்துவமனையில் இருக்கிறான். சில நாட்களில் அவனது உயிர் பிரிகிறது. அவன் உயிர் பிரிவதைக் கலைஞர்,

பின்னர் மெல்ல நகர்ந்து முகில்கள்
வண்ண நிலவை மறைப்பது போல்
இமைகள் மூடின[36]

என்று வண்ண நிலவை உயிர் மறைவதற்கு உரிய வருணனையாகும்.

**குலுங்கும் மலர்கள்**

பாவெல் சிறையில் இருக்கும் வேளையில் அவனைப் பார்ப்பதற்காகத் தாய் செல்கிறாள். அவளிடம் சாஷா பாவெலிடம் கொடுக்கச் சொல்லி கடிதம் ஒன்றைக் கொடுக்கிறாள். இதைத் தாயானவள் சாஷாவிடம் கேட்க, அதற்குச் சாஷா கூறும் பதிலாகக் கலைஞர்,

பழைய உலகத்தை மாற்றி
புதிய சமுதாயம் உருவாக்கப்

பூத்துக் குலுங்கும் மலர்களாக

வரலாறு தேர்ந்தெடுத்துள்ளது நம்மை[37]

என்று குறிப்பிட்டுள்ளார்.

கலைஞரின் தாய் காவியத்தில் கதையமைப்புக்கு ஏற்ற வருணனைகள் அமைந்துள்ளன.

**பழமொழிகள்**

பழமொழிகள் என்பவை மனித வாழ்வில் மனிதர்களால் அன்றாடம் தமது பேச்சுகளில் இடம்பெறும் ஒன்றாக இருக்கிறது. அனுபவத்தால் சான்றோர்கள் கண்டறிந்த அளவுகோல் பழமொழி. பழமையானது என்பதைக் குறிப்பதற்காக பழமொழி என்று பெயரிட்டுள்ளனர்.

தாயானவள் தன் குழந்தைக்கு என்ன வேண்டும்? என்று தெரிந்து வைத்திருப்பாள். குழந்தை அழும்போது அதற்குத் தேவையானவற்றைக் கொடுப்பாள். பாவெல் தான் நடத்தும் கூட்டத்திற்கு வரும் தோழர்களுடன் பேசும் பேச்சைக் கலைஞர்,

தாய் அறியாச் சூல் உண்டா

என்பது பழமொழியாயினும் - இந்தத்

தாய் அறியாச் சூல் போல சில

ரகசியங்களும் இக்கூட்டத்தில் உண்டு[38]

என்று குறிப்பிட்டுள்ளார்.

தாய்க்குத் தெரியாமல் பல்வேறுவிதமான தொழிலாளர்கள் பிரச்சினைகளைப் பாவெல் பேசுவது அவளுக்குத் தெரியும் என்பதைப் பழமொழியாகக் கூறியுள்ளார்.

**மலை பிளக்கும் கருவி**

பாவெல் நடத்தும் கூட்டத்திற்குப் பலர் வருவதோடு மட்டுமல்லாமல், அவர்கள் அனைவரும் துண்டறிக்கைகளையும் மக்களுக்குக் கொடுக்கின்றனர் என்பதை உணர்த்த,

சிற்றுளியும் மலை பிளக்கும்
சிறுதுளியும் பெருவெள்ளமாகும்[39]

என்ற பழமொழித் தொடரைக் கலைஞர் படைத்துள்ளார்.

தொழிலாளர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து போராடினால்தான் வெற்றி என்பது கிடைக்கும். சிறியோரானும் ஒன்றுபட்டால் வெற்றி பெறமுடியும் என்பதற்காக இப்பழமொழியைக் கலைஞர் கையாண்டுள்ளார்.

**பெருச்சாளியா? கோடாரிக் காம்பா?**

அதிகாரிகள் பாவெலின் வீட்டைச் சோதனை செய்கின்றனர். அப்போது இரைபின் என்பவன் காவலர்களை அடுக்களைப் பக்கம் சென்று பார்த்தால் ஏதாவது அகப்பை, சட்டி இருக்கும் எனக் கேலியாகக் கூறவே அதற்கு அதிகாரிகளின் பதிலில், கலைஞர்

இவன் என்ற சோற்று மூட்டையில் பெருச்சாளியா?
கூடவே இருந்து குழிபறிக்கும் கோடாரிக் காம்பா[40]

என்ற பழமொழிகளைக் கொண்டு விளக்கியுள்ளார்.

**இறகு போடா மயில்**

தொழிலாளர்களின் ஊதியத்தொகையை முழுமையாகக் கொடுக்காமல் ஏதாவது காரணம் கூறிப் பிடித்தம் செய்து விடுகின்றனர். அச்செயலைத் தொழிலாளர் ஒன்றுகூடிப் பேசி நிர்வாகத்தை பற்றி,

மயிலே மயிலே இறகு போடென்றால் போடாது[41]

என்று கூறுவதில் பழமொழி இடம் பெற்றுள்ளது. போராட்டம் தான் அநீதியை எதிர்க்கும் படை என்பதை இப்பழமொழி குறிப்பாகச் சுட்டியுள்ளது.

**அகத்தின் அழகு**

மனத்தில் நாம் என்ன நினைக்கின்றோமோ அதுதான் முகத்தில் தெரியும். அழகு என்பது உடல் தோற்றத்தில் அல்ல மனதில் தான் உள்ளது என்பதைக் கலைஞர்,

அகத்தின் அழகு முகத்தில் தெரியும் மன
அந்தப் பெண்மணி சாஷா சொன்னாளே[42]

என்று குறிப்பிட்டுள்ளார்.

சாஷா கூட்டத்தாரைப் பற்றிக் கூறும்போது இப்பழமொழித் தொடரைப் பேசியதாகக் கலைஞர் படைத்துள்ளார்.

**கடிக்கும் நாய்**

நிக்கோலாய் எப்போது பார்த்தாலும் மிகவும் கோபப்பட்டுக் கொண்டே இருந்தாலும் அவன் நல்லவன். கோபம் வரும் நேரத்தில் கடுமையாகப் பேசுவானே தவிர எதுவும் செய்யமாட்டான் என்பதைக் கலைஞர்,

குரைக்கிற நாய் கடிக்காது[43]

என்று நிக்கோலாவைக் கலைஞர் நாய் பற்றிய பழமொழியோடு இணைத்துக் குறிப்பிட்டுள்ளார்.

**இலக்கியப் புலமை**

கலைஞர் இலக்கியப் புலமை உடையவர். அவரின் படைப்புகள் அனைத்திலும் தமிழ் இலக்கிய மேற்கோள்கள் தானே வந்து இணையும்

கலைஞர் பரந்த நூல் புலமையுடையவர். அவர் தாய் காவியத்தில் சங்க இலக்கியம், பக்தி இலக்கியம், பாரதியார் கவிதைகள், பாரதிதாசன் கவிதைகள் ஆகியவற்றைத் திறம்பட விளக்கியுள்ளார்.

**திருக்குறள்**

கலைஞர் தாய் காவியத்தில் திருக்குறளையும் எடுத்துக் காட்டியுள்ளார். பாவெலைப் பற்றி தாய் நினைக்கும் விதமாக கலைஞர்,

ஈன்ற பொழுதினும் பெரிதுவக்கின்றது[44]

எனக் கூறும் அவள், பாவெலைப் பெற்றதற்காக மிகவும் மகிழ்ச்சி அடைவதையே கலைஞர்,

ஈன்ற பொழுதினும் பெரிதுவக்கும் தன்மகனை
சான்றோன் எனக்கேட்ட தாய்[45]

என்னும் திருக்குறளோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளார்.

**கையறு நிலை**

கையறு நிலை பற்றிய செய்தியைக் கலைஞர் குறிப்பிட்டுள்ளார். பாவெல் சிறுபிள்ளையாக இருந்தபோது தாய் நிலோவ்னாவை கணவன் அடிக்க அதனால் அவள் கோபப்பட்டு வருவதைக் கலைஞர்

கையறு நிலையில்லையில் குழந்தையுடன்
ஊர் நடுவே மக்கள் மத்தியில்[46]

என்று கையறு நிலையில் தாய் நிலோவ்னாவை ஒப்பிடுகிறார். கையறு நிலை என்பது ஆதரித்த மன்னன் இறந்தபோது, புலவர்கள் தன் ஆற்றாமையைப் பாடும் துறைக்குக் கையறு நிலை என்று பெயர்.

**ஔவையார் பற்றிய செய்தி**

கலைஞர் தாய் காவியத்தில் நிலோவ்னாவை ஔவையார் என்று குறிப்பிட்டுள்ளார். நிலோவ்னா தொழிலாளர்களின் நலனுக்காகத்

துண்டறிக்கைகளை எடுத்துக் கொண்டு ஊர் , ஊராகச் செல்கிறாள். அவள் செல்வதைக் கலைஞர்,

> முதுகிலே ஒரு சிறிய மூட்டையும்
> கையிலே ஒரு தடிக் கம்புடன் - இங்கே
> சங்க கால ஔவைபோல்[47]

என்று சங்க கால ஔவையாருடன் நிலோவ்னாவை ஒப்பிட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**சிலப்பதிகாரம்**

தாய் நிலோவ்னா, பாவெல் ஆகியோர் மே தின அணி வகுப்பு நடத்தப் போவதாக அறிக்கை விடுத்தனர். அணிவகுப்பு நடத்தக் கூடாது என அதிகாரிகள் கூற, இவர்கள் ஆணையை மீறி ஊர்வலம் செல்கின்றனர். பாவெல் மற்றும் இயக்கத் தொண்டர்கள் அனைவரையும் வண்டியில் ஏற்றிச் செல்கின்றனர். தொண்டர்களைப் பார்த்த தாய் நிலோவ்னா இருக்கும் நிலையைக் கலைஞர்,

> ஆவி குடிபோன வடிவு கொண்டு அரண்மனை வாயிலுக்கு வந்தாள் என கண்ணகி பற்றித் தமிழ்க் காப்பியம் கழறுமே; அது போலத் தான் உயிர் அற்ற உடல் ஒன்று நடப்பதுபோல அன்னை நிலோவ்னா[48]

என்று கண்ணகியுடன் நிலோவ்னாவை ஒப்பிட்டுக் கலைஞர் குறிப்பிட்டுள்ளார்.

**பாரதியார்**

பாரதியார் பாடலையும் கலைஞர் தாய் காவியத்தில் காட்டியுள்ளார். அனைத்தையும் தொழிலாளி செய்தான் என்பதைக் கூறும் விதமாகப் பாரதியின் பாடல் கூறும் கருத்தைக் கலைஞர்,

> காண்பதெல்லாம் தொழிலாளி செய்தான்; அவன் காணத் தகுந்தது
> வறுமையும் பூணத் தகுந்தது பொறுமையுமா?[49]

என்று தொழிலாளர்களின் நிலைமையைக் குறிப்பிட்டுள்ளார்.

**பாரதிதாசன்**

*பாரதிதாசன் நூல்களின் பெயர்களையெல்லாம் இணைத்துக் காதல் நினைவில் கவிப்பெண்ணைத் தவிக்க விட்டுப் பிரியும் காதலின் சோகக் கதையை உணர்ச்சி பொங்கச் சித்திரித்துள்ளார்.*

> இருண்ட வீட்டில் குடும்ப விளக்கேற்றி வைத்தார் இசையமுது பொழிந்து அதற்குப் பாண்டியன் பரிசு பெற்றார். குறிஞ்சித் திரட்டு கண்டு குயில் இதழ் நடத்தும்போது அழகின் சிரிப்பாலே தமிழியக்கம் கவர்ந்துவிட்டார். அமைதிக்கு நல்ல தீர்ப்பளித்தார் அவர். காதல் நினைவாலே கவிப்பெண்ணை வாட விட்டுச் சாவின், எதிர்பாரா முத்தத்தால் பிரிந்து விட்டார்.

*என்று கலைஞர் பாரதிதாசனைப் பற்றி, அவர் படைத்த இலக்கியங்களில் பெயர்களைச் சுட்டும் வகையில் தன் கவிதையை அழகுபடக் காட்டியுள்ளார். தாய் காவியத்தில் உழைப்பாளர்களின் நிலையாகப் பாரதிதாசன் கவிதையொன்றைக் கலைஞர்,*

> மழையைப் பிளந்தோர் புவி வாழவென்றே
> கடல் ஆழமும் தூர்த்தோர்
> அலை கடல் மீது பல்லாயிரம் கப்பல்கள் விட்டோர்
> பல தொல்லைகளுற்றே பாதாளம் சென்று
> பசும்பொன் எடுத்தோர்
> உலையில் இரும்பை உருக்கிப் பல இயந்திரம் பெருக்கி
> ஆடைகள் நெய்து பெரும்
> ஆற்றை வளைத்து நாற்றுகள் நட்டோர்
> அவரெல்லாம் எலியாக, முயலாக வாழுகின்றார்
> ஆனால் ஏமாந்த காலத்தில் ஏற்றம் கொண்டோர்
> புலி வேஷம் போடுகின்றார்!
> புல் அளவு மதிப்பேனும் உழைப்போர்க்குத் தருகின்றாரா?
> செப்புதல் கேட்பீர் இந்தச்
> செகத் தொழிலாளர்கள் மிகப் பலர் ஆதலின்
> கப்பல்களாக - இனித்

தொழும்பர்களாக மதித்திட வேண்டாம்!

இப்பொழுதே நீர் பொது இன்பம் விளைந்திட

உங்களின் சொத்தை ஒப்படைப்பீரே - எங்கள்

உடலில் இரத்தம் கொதிப்பேறு முன்பே ஒப்படைப்பீரே![50]

என்று உழைப்பாளர்களின் நிலையைக் காட்ட பாரதிதாசன் கவிதையை எடுத்தாண்டுள்ளார்.

பாரதிதாசன் பாடலுக்கு இசையமைத்துப் பாடினால் இப்பாட்டு இந்த உலகில் எந்தக் கோடியில் இருக்கும் உழைக்கும் தோழர்களையும் ஒன்று சேர்க்கும் என்ற கலைஞரின் எண்ணத்தைச்

சித்திரச் சோலைகளே!

உமை நன்கு திருத்த இந்தப் பாரினிலே

எத்தனை தோழர்கள் ரத்தம் சொரிந்தனரோ

உங்கள் வேரினிலே[51]

என்று பாவேந்தர் கவிதை அடிகள் சுட்டியுள்ளது. இப்பாடல் பின்னாளில் திரையில் ஒலித்தது குறிப்பிடத்தக்கது.

**எள்ளல்**

கலைஞருக்கு நகைச்சுவை உணர்வு கைவந்த கலையாகும். எள்ளலையும் நகைச்சுவையோடு கூறும் திறம் படைத்தவர். யார் ஆட்சி செலுத்தினாலும் கவலைப்படாத அப்பாவி மக்களும் நாட்டிலே ஆங்காங்கு இருக்கத்தான் செய்வர் என்ற கருத்தை,

. . . . . . . . .ரஷ்யாவை ஜார் ஆண்டால் என்ன? மோர் ஆண்டால் என்ன?[52]

என்று குறிப்பிட்டுள்ளார்.

பழங்காலத்து மக்கள் நிகழ்ச்சிகளையெல்லாம் உணர்ச்சியோடு கண்டனர். உணர்ச்சியூட்டிக் கூறினர். அவற்றை வழிவழியாகப்

பலர்க்கும் கூறி வந்தனர். மக்கள் உள்ளங்களில் அந்நிகழ்ச்சிகள் உணர்ச்சியோடு வாழ்ந்து நிலைத்தன. பிற்காலத்தில் வாழ்ந்த மக்கள் தத்தம் காலத்துப் பெரிய நிகழ்ச்சிகளையும் அவற்றோடு கூட்டிப் பெருக்கினர். பற்பல நிகழ்ச்சிகளின் கோவையாக அவை உருப்பெற்றன. உருப்பெற்றவை காவியம் ஆயின. காவியத்தில் வரும் பாத்திரங்களாக இடம்பெறுவோர் கதைமாந்தர்கள் ஆவர். கலைஞர் தாய்காவியக் கதைமாந்தர்களைப் படைத்துள்ள திறம் வியக்கத்தக்கது. கலைஞரின் காவியப் புலப்பாட்டுத் திறனுக்குப் பாத்திரப் படைப்பு அடித்தளமாகின்றது.

கலைஞர் கைவண்ணத்தில் தாய்காவியம் சிறப்படைகின்றது. கலைஞர் படைத்துள்ள ஓசை நயமும், கன்னித்தமிழ் நடையழகும் பயிலுவோரை ஈர்க்கும் தன்மையன. எதுகை மோனை நயத்துடனும், ஓசை உருபுடனும் கலைஞரின் கவிதை நடை அமைந்துள்ளது.

கற்பனைகள் உணர்ச்சி பெற்றுக் கவிதை சொற்களாகப் பாய்ந்திடும்போது இலக்கணக் கட்டுப்பாடு என்னும் கடிவாளத்தை என்னால் பயன்படுத்த முடியவில்லை என்பது கலைஞரின் கூற்று. அவர் நடைகள் யாப்புவடிவம் பெறாவிடினும் சொல்லும் முறையால் கவிதைகளாக உருமாற்றம் அடைகின்றன.

**இலக்கிய நடை**

> வியர்வைத் துளிகளை எழுத்தாய்க் கோத்து
> விரிவானம் நடுங்கிட அவன் பாடிய கீதம்
> வித்தகனாம் விளாடிமிர் லெனினைப்
> புரட்சிக்குத் தலைவனாக்கியது[53]

> கழிவுநீர்த் தேக்கங்களே
> காலமெல்லாம் உழைப்போரின் நீச்சல்குளம்[54]

எழிலார் மங்கையின் தோள்தழுவி - பூம்

பொழிலில் பொழுது போக்கும்

பூமான்கள் மத்தியில்

தொழிலாள இளைஞர்கள்[55]

*போன்ற தொடர்கள் இலக்கிய நடைக்குரிய அகச்சான்றுகள்.*

**செறிவு நடை**

எல்லோரும் ஒரே சாதி மனித சாதி என்ற

உண்மையை நிலைநாட்ட இவர்களைப்போல

ஒருசிலராவது முன் வந்தால் தானே

உருப்படும் உலகம்[56]

. . . . . . கண்ணியம் காத்துக்

கட்டுப்பாட்டுடன் வாழ்ந்தாலே

அவனை அனைவரும் அக்கறையுடன்

கவனிக்கத் தொடங்குவார்கள்[57]

அறிவு என்னும் சோப்பு நுரையால்

அறியாமை அகற்றி அகத்துக்கு ஒளிவழங்கி

சமதர்ம சமத்துவ சங்கொலித்து

ஜெகத்திற்கே நலம் சேர்க்கலாம்[58]

எஃடு துண்டொன்று எதிரியைவீழ்த்தும் ஆயுதமாவதற்கு

என்னபாடு படுகிறது உலைக்களத்து எரி நெருப்பில் - இந்த

அன்னைப் பட்டபாடும் அந்த எஃகு படும்பாடுதான்[59]

அந்தப்பாவிகள் மனிதர்களின் உடலை மட்டும்

வதைக்கவில்லை. அய்யோ அந்தத் தீயக்கரங்களால்

உன் தூய ஆன்மாவைத் தொடும் போது

துடித்துப்போகிறேன் கண்ணே துடித்துப் போகிறேன்[60]

*போன்ற தொடர்கள் செறிவு நடைக்குரிய அகச்சான்றுகளாகும்.*

**முரண்நடை**

*பாவெலும், நிலோவ்னாவும் செய்கின்றனர் என்பதைக் குறிக்க,*

புன்னகை கிளம்பியது

இருவர் முகத்திலும்

புறப்பட்டுச் சென்றன

புயலும் தென்றலும்[61]

*என்று முரண் நடையைச் சுட்டியுள்ளார். நிலோவ்னா மிதவாதி பாவெல் தீவிரம் படைத்தவன் என்பதால் தென்றலாகவும், புயலாகவும் கலைஞர் சுட்டியுள்ளார்.*

**விளக்கஉரை நடை**

நம்மிடமுள்ள பகுத்தறிவு ஒளியை நன்றாக மேலும் தூண்டிவிட்டுக் கொள்ள வேண்டும் அறியாமை இருளை விரட்ட நம்மை நாமே அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும் உண்மையான தீர்மானமும், தீர்ப்பும் ஒவ்வொருவர் உள்ளத்திற்கும் வேண்டும்[62]

கல்யாணப் புறாக்களாகப் பறப்பதெப்படி என்பதையே கற்றுக்கொள்ள அவர்கள் விரும்புவார்கள். கடுகளவு இடம் கொடுத்தால் போதும் - முதலில் கட்டுப்பாடு மூட்டைக்கட்டிப் பயணப்பட்டு விடும் கடமை உணர்வு களம்புகுதல் தியாகம் எல்லாமே கடைசிவரை காத்திராமல் கல்லறைக்குள் அடங்கிவிடும்[63]

*போன்ற தொடர்கள் விளக்க உரைநடைக்குரிய அகச்சான்றுகள்.*

**உணர்ச்சி நடை**

*பாவெல்லின் பேச்சினைக் குறிக்குமிடத்து கலைஞர்*

பாறைகள் பத்துநூறாக

ஒரே நேரம் வெடிப்பதுபோல

பாவெல் வார்த்தைகளை

வெடித்தான் கொதித்தான்[64]

என்றும், சிறைவாழ்வு பொதுநலவாதிக்குச் சுகம் தருவது என்பதை விளக்க,

பிறைநுதலில் பெண்ணுக்கு வியர்வை அரும்புகட்டும்

முதலிரவில் பெறுகின்ற இன்பத்தைவிட

சிறை நுழைவில் ஆயிரமடங்கு அதிகம் பெறலாமெனும்

சிறுத்தை உள்ளம் கொண்ட செம்மலன்றோ பாவெல்[65]

என்றும் பிறருக்காக மரணத்தைத் தழுவுவோர் சரித்திரமாக மாறுவர் என்பதை,

மரணத்தைப் பரிசாகப் பெற்ற

மாமனிதர் வரலாறாய் வாழுகின்றார்[66]

என்றும் கலைஞர் குறிப்பிட்டுள்ளார். இத்தொடர்கள் உணர்ச்சி நடைக்குரிய அகச்சான்றுகள்.

**எதுகைத் தொடை நடை**

வெற்றி பெறுவாய் என்று

நெற்றியில் முத்தமீந்தாள்[67]

தாய் மகிழ்வது பழைய வரலாறு

சேய்கள் மகிழும் தாயைப் படைக்கின்றோம்[68]

என்ற தொடர்கள் மோனைத் தொடையில் அமைந்துள்ளன.

**கவித்துவ நடை**

தாய் மகன் பாசத்தை வெளிப்படுத்தும் தன்மையில்

கண்களை மெல்ல மூடியிருந்த அவன் கன்னத்தில்

காம்பில்லா மல்லிகை மொட்டொன்று விழுந்தது

கண்ணீர்த் துளிக்குக் காம்பில்லை அல்லவா[69]

என்ற தொடர்களைக் கலைஞர் படைத்துள்ளார்.

மானேஜரின் கோபம் உள்வாங்கி உள்ளது என்பதை உணர்த்த,

பாவெல் அவரைப் பார்த்தான்

அவன் அமைதியான முகத்தில்

சூறாவளிக் காற்று சூல் கொண்டிருந்தது[70]

என்று நுட்பமாகச் சுட்டியுள்ளார். மேற்குறித்த தொடர்கள் கவித்துவ நடையில் அமைந்ததற்குரிய அகச்சான்றுகள்.

**பாத்திர வருணனை நடை**

நடாஷா என்பவளின் உடலை,

இளமைத்துள்ளல்

இனிய குரல்

எடுப்பான தோற்றம்

உருண்டு திரண்டு

உள்ளத்தைக் கவரும் உடற்கட்டு[71]

என்று கலைஞர் வர்ணித்துள்ளார்.

போலீஸ்காரரின் உருவத் தோற்றத்தை,

கரிய தாடியும் கறுப்புக் கண்ணாடியும்

கரடி போல் கை, காது புருவங்களில்

கனத்த ரோமமும் மண்டியிருக்கும்

மாமிசமலை[72]

ஆலை மேலாளரை

பனைமரம் போல் உயரமும்

பானைவயிறும் படைத்த[73]

**வடசொற்கள்**

| | |
|---|---|
| மேதை[74] | ஆரோக்யம்[92] |
| மூலதனம்[75] | சித்திரவதை[93] |

| | |
|---|---|
| கீதம்[76] | அபாயம்[94] |
| வித்தகன்[77] | பாதாளம்[95] |
| பாலபாடம்[78] | கபாலம்[96] |
| சங்கமிக்கும்[79] | ஈனம்[97] |
| உல்லாசம்[80] | மார்க்கம்[98] |
| உற்சாகம்[81] | தாமதம்[99] |
| பிரமுகர்[82] | ஆத்மா[100] |
| ஜீவன்[83] | கஷ்டம்[101] |
| சயனித்து[84] | வசீகரம்[102] |
| மௌனம்[85] | ரட்சிப்பு[103] |
| நிதானம்[86] | அருள்பாலிப்பு[104] |
| பலூம்[87] | ஜெபம்[105] |
| ஆஸ்தி[88] | விவாகம் |
| ஜெகம்[89] | சுபமுகூர்த்தம்[106] |
| சாம்ராஜ்ஜியம்[90] | பிரார்த்தனை[107] |
| பிரம்மச்சாரி[91] | பிரசவம்[108] |
| பிரசுரம்[109] | நஷ்டம்[118] |
| பிரகடனம்[110] | சாதனை[119] |
| உபசாரம்[111] | சொப்பனம்[120] |
| சப்தம்[112] | பரவசம்[121] |
| கண்ணியம்[113] | பிரகாசம்[122] |
| கோஷ்டி[114] | திலகம்[123] |
| மயானம்[115] | அவமானம்[124] |
| விமோசனம்[116] | சாபம்[125] |
| சாதனம்[117] | |

| **திசைச் சொற்கள்** | **ஆங்கிலச் சொற்கள்** |
|---|---|
| அட்டகாசம்[126] | சோஷியலிஸ்ட்[132] |
| வக்கணை[127] | பூட்ஸ்[133] |
| கேளிக்கை[128] | போலீஸ்[134] |
| கருகருப்பு[129] | மானேஜர்[135] |
| வதந்தி[130] | அதிகாரி[136] |
| எஜமான்[131] | |

| **இரட்டைக்கிளவி** | **அடுக்குத் தொடர்** |
|---|---|
| மிக மிக[137] | மாறிமாறி[144] |
| கிடு கிடு[138] | நித்தம் நித்தம்[145] |
| குறுகுறுப்பு[139] | சிந்தித்து சிந்தித்து[146] |
| முணுமுணுப்பு[140] | திரும்பத் திரும்ப[147] |
| படிப்படியாக[141] | தனித்தனி[148] |
| பரபரப்பு[142] | பார்த்துப் பார்த்து[149] |
| தழுதழுப்பு[143] | |

கலைஞரின் கவிதை நடையில் கார்க்கியின் தாய்க்காவியத்தில் 25 பாத்திரங்கள் பங்கு பெற்றுள்ளனர். ஆண் பாத்திரங்கள் 21, பெண் பாத்திரங்கள் 4. தாய் காவியத்தில் அதிக இடம் பெறுவோர் ஆண்பாத்திரங்கள் காவியத்தில் பாத்திரங்கள் இடம்பெறும் பாங்கினை அடிப்படையாகக் கொண்டு தாய்க்காவியத்தின் பாத்திரங்களை

1. தலைமைப் பாத்திரம்
2. துணைமைப் பாத்திரம்
3. சார்புப் பாத்திரம்

என்று மூன்று பிரிவாகப் பிரிக்க இயலும்.

**தலைமைப் பாத்திரம்**

தலைமைப் பாத்திரம் காவியம் முழுவதும் நிறைந்து நிற்பதாக இருக்க வேண்டும். அறிமுகப்படுத்தும் நிலையில் வளர்ச்சி பெற்றது முழுமை நிலை அடைதல் வேண்டும். அந்த வளர்ச்சியின் வழியே அவர்களது உள்ளம், உணர்ச்சி, சிக்கலை அணுகுகின்ற முறை, தனிப்பட்ட இலக்கியக் கொள்கை போன்றவைகள் விளக்கப்படும். தலைமைப் பாத்திரம் என்பது ஒரு குறிப்பிட்ட காவியத்தில் பெரும் செயல்களைச் செய்பவர்களாகவும் இருப்பர். அச்செயல்களின் அடிப்படையாக அவர்தம் செயல்திறனும் பண்புகளும் பால் வேற்றுமைகளைக் கடந்து படிப்போர் உள்ளத்தில் நிறைந்தவர்களாக இருப்பார்கள். வரலாற்று நாவலுக்கும், காப்பியத்திற்கும் உள்ள தொடர்பைத் திறனாய்வாளர்கள் எடுத்துக்காட்டுவர். தண்டியலங்காரம் தன்னிகரற்ற தலைவன் என்ற குறிப்பைத் தருகிறது. அந்தத் தலைவன் தான் தலைமைப் பாத்திரமாகும். இயங்கும் கதை அடிப்படையில் தலைமையை வற்புறுத்தாமல் பண்பு அடிப்படையில் வற்புறுத்துவதைக் கருத்தில் கொள்ளுதல் வேண்டும்.

கலைஞரின் தாய்க்காவியத்தில் பெண் தலைமை மாந்தராக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

கலைஞரின் திரைப்படைப்புகளில் பெண் அடிப்படையாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. பராசக்தி, மறக்கமுடியுமா போன்றவை. பெண்ணை மையமிட்ட காவியம் என்பதால்தான் பூம்புகார் என்ற பெயரோடு திரைஇலக்கியத்தைக் கலைஞர் படைத்துள்ளார்.

**பெண் தலைமை மாந்தர்**

காவியத்தில் தலைமைக் கருத்தை ஏற்று வரும் பெண் பாத்திரங்கள் பெண் தலைமை மாந்தர் ஆவர். நிலோவ்னா என்ற பெண் இத்தாய்க் காவியத்தின் தலைமை மாந்தராவார்.

**நிலோவ்னா**

இவளின் முழுப்பெயர் பெலேகேயா நிலோவ்னா என்பதாகும். தாய் காவியக் கதையில் வருபவர்களுள் தாய் என்று குறிப்பிடும் பாத்திரம். இவளை ஒரு படிக்காத மேதை என்றே தாய் காவியம் குறிப்பிடுகிறது.. இவள் படிப்பின் வாசனையைக்கூடக் கண்டதில்லை. இருந்தும் இக்கதையில் தாயானவளின் பங்கு மிகவும் போற்றத்தக்கதாக இருக்கிறது. நிலோவ்னா தொழிலாளர்களில் நலனுக்காக மிகவும் பாடுபடுகிறாள். அவள் பல்வேறு துன்பங்களை அனுபவிக்கிறாள். ஆனாலும் இதையெல்லாம் பொருட்படுத்தாத தாய் தன்னால் முடிந்த உதவிகளையெல்லாம் செய்கிறாள் மகன் நடத்தும் முதலாளிகளுக்கு எதிரான போராட்டத்திலும் ஈடுபடுகிறாள்.

நிலோவ்னாவின் கணவர் பெயர் மைக்கேல். அவர் எப்பொழுது பார்த்தாலும் குடித்துவிட்டு, தான் உண்டு தன்னுடைய வேலை உண்டு என்று இருக்கிறார். மைக்கேல் சிறிது காலத்தில் இறந்துவிட, தாயானவள் எவ்வாறு இருக்கிறாள் என்பதைக் கலைஞர்,

> குடிகார நாயகன் போன பின்னே
> நிம்மதி சிறிதுமில்லை நிலோவ்னாவிக்கு?
> நித்த நித்தம் நெஞ்சம் கனக்க
> பித்தம் கொண்டு பிதற்றியவளுக்கு
> பிள்ளை பெவெல் தான்ஓர் அறுதல்[150]

என்று பெண்படும் துயரைச் சுட்டியுள்ளார்.

பாவெல்தான் இவளின் ஒரே நம்பிக்கை. இவன் முதலாளிகளுக்கு எதிராக ஓர் அமைப்பை ஏற்படுத்தி அதில் அவனே தலைவனாக இருக்கிறான். இதைப் பார்த்த தாய் நிலோவ்னாவுக்கு முதலில் அச்சமாகத் தோன்றுகிறது. இருந்தாலும் தன்னுடைய மகன் எப்போதும் தீய வழியில் செல்லமாட்டான் என்ற நம்பிக்கை அவளுக்கு அதிகமாக இருந்தது. அவள் மகனான பாவெல் மீது அளவுக்கு அதிகமாகப் பாசம் வைத்திருந்தாள். ஒருமுறை பாவெல் வீட்டிற்கு மது அருந்திவிட்டு வந்தவன் வாந்தி எடுத்துவிடுகிறான். தாயானவள் மகன் மீது கோபம் கொள்ளாமல் அவனுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து அவனைக் குணப்படுத்துகிறாள்.

நிலோவ்னா எல்லோரிடமும் மிகவும் அன்பாக இருக்கிறாள். சில நேரங்களில் பாவெல் நடத்தும் கூட்டத்திற்கு அரசு என்ன தீங்கு செய்யப் போகிறதோ? என்ற அச்சம் தாயின் மனத்தை வேதனைப்படுத்தியது. தாயானவள் துண்டுப் பிரசுரங்களைத் தொழிற்சாலைக்குக் கொண்டு சென்று அங்கு உணவு விற்பது போல விநியோகிக்கிறாள். அத்துண்டுப் பிரசுரங்களை வாங்கிப்படித்து தொழிலாளர்கள் பயனடைந்தனர். பாவெல் சிறையில் அடைபட்டு இருக்கும் நேரம் நிலோவ்னா அருகில் இருக்கும் ஊர்களுக்கெல்லாம் சென்று துண்டுப்பிரசுரத்தை விநியோகிக்கிறாள். வாங்கிப்படித்து விவசாயத் தொழிலாளர்கள் பயனடைந்தனர். இச்செயல் தாயின் துணிவினை வெளிப்படுத்துகிறது. தாயானவள் துண்டுப்பிரசுரத்தை ஊர்ஊராக எடுத்துச் செல்வதைக் கலைஞர்,

> முதுகிலே சிறு மூட்டையுடன்
> கையிலே ஒரு தடிக்கம்புடன்
> சங்ககால ஔவை போல நிலோவ்னா[151]

என்று குறிப்பிட்டுள்ளார்.

நிலோவ்னா ஒருமுறை அருகில் உள்ள நகருக்குத் துண்டுப் பிரசுரங்களைக் கொண்டு செல்லத்திட்டம் தீட்டினாள். அதன்படி மாறுவேடம் பூண்டு காவலர்களின் கண்ணிற்குத் தெரியாமல் செல்வதை, நிக்கோலாய் சோபியா இருவரும் பாராட்டுகின்றனர்.

தாயானவள் போராட்டத்திற்கு வருவதற்கு முன்னால் வீட்டுக்குள் மெழுகுவர்த்தியாக ஒளிவிடுவாள், உருகுவாள் என ஆண்ட்ரி நடாஷாவிடம் அறிமுகப்படுத்துகிறான். தாய் பாவெலின் நண்பர்கள் அனைவருக்கும் பிடித்தமானவளாக இருக்கிறாள். அவள் போராட்டத்தில் ஈடுபடும்போது பாவெல், ஆண்ட்ரி இருவரின் அருகிலேயே அவர்களுக்குப் பாதுகாப்பாகச் செல்கிறாள். தாயில்லாத ஆண்ட்ரிக்கு நிலோவ்னா தான் இனிமேல் தாய் என்று கூறுகிறாள். ஆண்ட்ரி தாயைப் பற்றிக் கூறும்போது திறமையின் மறு உருவம் என்று பாராட்டுகிறான். நிலோவ்னாவை அனைவரும் தாய் என்று அழைக்கின்றனர். அதற்கு அவள் நான் இதுவரை அச்சொல்லிற்குத் தகுதியானவளா? என்று எனக்குத் தெரியாது, இனி அந்த நிலையை அடைய முயற்சி செய்வேன் என்கிறாள். பாவெல் சிறையில் அடைபட்டு இருந்த நேரம் அவனை மீட்க ஐவான், நிக்கோலாய் இருவரும் செல்லத் தயாரானார்கள். அப்போது தாய் நானும் உங்களுடன் வருகிறேன் என்றாள். ஆனால் ஐவான் தாயை வரவேண்டாம் என மறுக்கவே தாயானவள்,

> குஞ்சுகளைக் கொல்லவரும் வான்பருந்தை
> கோழியும் சூழ்ந்தெதிர்க்கும்
> தொல்புவி இஃதென்ற புரட்சிக் கவிதையை
> கேட்தில்லையாநீ எனவே
> இந்தத் தாய்க் கோழி வந்தே தீரும்[152]

என்று கூறுகிறாள்.

மேதின ஊர்வலத்தில் கலந்துகொள்ள, பாவெல், ஆண்ட்ரி இருவரும் தயாரானார்கள். அப்போது தாய் நானும் உங்கள் பேரணியில் கலந்து கொள்கிறேன் என்கிறாள். அதற்குத் தாய்,

> புலியின் குகை என்வயிறு குகை, புலியின் கூடவே வருகிறது
> புலியின்கூடவே குகை வருவதை
> புராதன வரலாறுகளிலும் படிக்கவில்லை
> புரட்சி இலக்கியங்களிலும் படிக்கவில்லை
> புதிய வரலாறு புரட்சி இலக்கியம் நாம் படைப்போம்
> வா மகனே வா[153]

என்கிறாள்.

பேரணியில் தாயானவள் கலந்து கொள்ளும் நேரம், ஜோசிமோவ் என்ற நொண்டித்தொழிலாளி தாயின் அருகில் வந்து ஓ, நீதானா? துண்டுப் பிரசுர விநியோக துரைசானியம்மா எனக்கேலி பேசினான். பேரணியில் கலந்து கொள்ளும்போது அவள் எவ்வாறு நடக்கிறாள் என்பதைக் கலைஞர்,

> பூனை உடலுக்கு யானைபலம்
> வந்ததுபோல் அன்னை நடந்தாள்[154]

என்பார்.

பேரணியானது நடைபெற்றுவரும் நேரம் பாவெல் செங்கொடியைக் கையில் பிடித்தபடி வருகிறான். அவன் அருகில் தாயும் வருகிறாள். அவளைப் பார்த்து கூட்டத்தில் இருந்த ஒருவன் உங்கள் அனைவரையும் குதிரைப்படை வளைக்கப் போகிறது என்றான். இதற்குத் தாயானவள் வளைக்கட்டுமே,

> நான் தாய் எட்டடி பாய்வேன் - என்பிள்ளைகள்
> பதினாறு அடி பாய்வார்கள்[155]

என்று கூறுகின்றாள்.

பேரணியைக் கலைத்த போலீசார் ஆண்ட்ரி, பாவெல் இருவரையும் கைது செய்து சென்றனர். இதைப்பார்த்த அன்னையின் மனம் வேதனைப்படுகிது. இதை அறிந்த சிஜோவ் தாயிடம்,

**உனக்காகவும் உன் மகனுக்காகவும்**
**அவன் நடத்திடும் இந்த**
**உயிருள்ள இயக்கத்துக்காகவும்**
**உழைப்பாளர் உலகமே**
**கடமைப்பட்டிருக்கிறது - எனவே**
**கவலையை மறந்திடு**[156]

என்று கூறிப் புகழ்ந்துரைக்கிறான்.

தாயானவள் ஜார்படையின் தாக்குதலில் சுருண்டு விழுகிறாள்

**குருதி வெள்ளத்தில் எங்களை**
**மிதக்கவிட்டாலும் - எங்கள்**
**கொள்கையைக் குலைக்க முடியாது**[157]

என்று தாய் நிலோவ்னா வீரமுழக்கம் செய்கிறாள் தாயின் உயிர் போகும் நிலையிலும், அவள்தான் கொண்ட கொள்கையில் இருந்து மாறாதவளாகப் படைக்கப்பட்டுள்ளாள். உறுதி, கொள்கைப்பற்று, பொது நலவிருப்பம் ஆகியவை பெண்களிடமிருந்தால் நாடு முன்னேறும் என்பதை தாய் பாத்திரத்தின் வாயிலாகக் கலைஞர் புலப்படுத்தியுள்ளார்.

**துணைமைப் பாத்திரங்கள்**

காவியத்தின் மாற்றங்களையும், விளைவுகளையும் உண்டாக்கும் பாத்திரங்களே துணைமைப் பாத்திரங்கள் எனப்படுவர்.

ஒரு காவியத்தில் இடம் பெறுகின்ற அனைத்துப் பாத்திரங்களின் ஒருமித்த நட்பே அதன்முழு வெற்றிக்குக் காரணமாக அமைய முடியும். இதற்குத் துணைமைப் பாத்திரங்களின் நடிப்புச் சித்தரிப்பு மிக இன்றியமையாததாகிறது.

தாய் காவியத்தில் 5 பாத்திரங்கள் மட்டும் துணைமைப் பாத்திரங்களாக இடம்பெற்றுள்ளனர். அவர்கள் பெயர்கள் பின்வருமாறு.

1. பாவெல்
2. ஆண்ட்ரி
3. நிக்கேலாய்
4. நடாஷா
5. இரைபின்

இவர்களின் பங்களிப்பு தாய்காவிய வளர்ச்சிக்குப் பெரிதும் துணை செய்கின்றது.

**பாவெல்**

தாய் நிலோவ்னாவின் ஒரே மகன்தான் பாவெல். அவனுக்கு பங்கானது தாய் காவிய வளர்ச்சிக்கு மிகவும் உறுதுணையாக இருக்கிறாள். இவன் சிறு பிள்ளையாக இருக்கும்பொழுது தந்தையின் கொடுமைக்கு ஆளாகிறான். எனவே அன்னையின் அன்பில் தான் வளர்ந்து வந்தாள். ஒருமுறை பாவெலின் தந்தை, தாய் நிலோவ்னாவை அடிக்க, அதைப் பார்த்துக் கொண்டிருந்தவனுக்குத் தந்தை மீது கோபம் வந்துவிடவே தான் வைத்திருந்த சுத்தியலை அவரின் தலைமீது விட்டெறிகின்றான். இதைப்பார்த்த தந்தை இருவரின் மேல் கோபம் கொண்டு வீட்டைவிட்டுத் தனியே சென்று வாழ்ந்தார். தனித்து இருந்தவர் குடித்தே இறந்தும் போகின்றார். தாயின் வேண்டுகோளுக்கு இந்த பாவெல் தன் தந்தை வேலைபார்த்த ஆலையிலே வேலை கிடைக்கின்றது. அவன் தொழிற்சாலையில் வேலைபார்க்கும்போது அங்கு தொழிலாளர்களுக்கு இழைக்கப்படும் கொடுமையைப் பார்க்கிறான். கொடுமையைப் போக்கவும் தொழிலாளர்கள் நல்வாழ்வு வாழவும் ஏதேனும் செய்ய வேண்டுமென நினைக்கிறான். ஒருமுறை

வீட்டில் இருக்கும் நேரம் தாய் பாவெலிடம் தொழிலாளர்களைப் பற்றி கேட்டதற்கு அவன்,

நானும் நீயும் வாழ்ந்துவிடலாம்
நானிப்போது என்னையும்
உன்னையும் பற்றி சிந்திக்கவில்லை
நம்மைவிடப் பெரிய விஷயம் பற்றி
நண்பர்களுடன் சிந்தித்துக் கொண்டுள்ளேன்[158]

என்று கூறுகிறான். இதைக்கேட்ட தாய்க்கு எதுவும் புரியவில்லை. பாவெல் ஒருநாள் இரவு வீட்டில் உள்ள அறையில் தாய்க்குத் தெரியாமல் ஏதோ ஒரு புத்தகத்தைப் படிக்கிறான். இதைப் பார்த்த தாய் என்ன புத்தகம் எனக் கேட்கிறாள். உடனே பாவெல் தாயிடம் இது அரசால் தடை செய்யப்பட்ட புத்தகம் எனக் கூற, இதைக்கேட்ட தாய்க்கு இதனால் என்ன நடக்கப் போகிறதோ என்ற அச்சம் அவள் மனதை உறுத்தியது. தடை செய்யப்பட்ட அந்தப் புத்தகத்தில் தொழிலாளர்களுக்கு நேரிடும் கொடுமைகள் சுட்டிக்காட்டப் பட்டிருந்தன. பாவெல் இப்புத்தகத்தைப் பற்றிக் கூறும்போது,

இனியும் பல புத்தகங்கள்
வெளிவரும் நிச்சயமாய்
இவற்றைப் படிப்போர்
பாட்டாளிச் சேனையிலே
பயமறியா தோழராவார்[159]

என்கிறான்.

தொழிலாளர்களின் நிலையை,

பல லட்சம் பேர் பாடுபடும் பாட்டாளிகள்
ஊமைகளாய் இருக்கின்றார் - அந்த
ஊமைகளைப் பேசவைக்கத்தான்
இந்தப் புத்தகங்கள்[160]

என்று தாயிடம் பாவெல் கூறுகிறான். அவன் ஒருபோதும் உயர்பதவிக்கோ, பட்டத்திற்கோ ஆசைப்பட்டது இல்லை. இதனைப் பாவெல்,

> தீ பரவாமல் தடுப்பதும்
> தீயோரை ஒழிப்பதும் தான் என் குறிக்கோள்
> தீரச் செயல் ஒன்று புரிய வேண்டும்
> என்பதல்ல என் திட்டம்[161]

என்கிறான்.

பாவெல் தொழிலாளர் நலனுக்காக ஒரு கூட்டத்தை நிறுவி அதை வழி நடத்த தானே முன்வருகிறான். இவ்வாறு கூட்டம் இருப்பதை அறிந்த தாய் கலக்கமடைகிறாள். இதற்கு மகனானவன்,

> இந்தப் பயம்தான் நம்மை ஆட்டி படைக்கிறது
> அதிகாரம் பண்ணுவோர்க்கு[162]

எனக்கூறி தாயின் மனத்தைத் தேற்றுகிறான். ஒருமுறை கூட்டம் நடைபெறும் நேரம் பாவெல் எழுந்து,

> எப்போதும் வயிறு நிரம்புவதிலேயே குறி என்றால்
> ஒருபோதும் மிருகங்களைவிட
> மனிதன் உயர்ந்தோனாக மாட்டான்
> தொழிலாளிகள் முட்டாள்களல்ல என்பதை
> முதலாளிகளுக்கு மெய்ப்பிக்காத காரணத்தால்
> நரகத்தில் நம்மைத் தள்ளி நம்மீது குதிரையேறும் அந்த
> நாசகாரர்களுக்கு நம் தன்மானத்தை உணர்த்த வேண்டும்.[163]

எனக் கூட்டத்தினரிடையே வார்த்தைகளை மழையாகப் பொழிகிறான். பாவெல் ஒருமுறை கூட சிறைசெல்லவோ காவலர்களுக்கோ அஞ்சியது கிடையாது. அவன் இல்லத்தில் துண்டறிக்கை சோதனை போட வந்த காவலர்கள் அங்கு இருந்த, ஆண்ட்ரி, நிக்கோலாய் இருவரையும் கைது செய்துகொண்டு சென்றனர். இதைப் பார்த்துக் கொண்டிருந்த பாவெல், அன்னையிடம்,

அவர்களாக வந்தார்கள்
இருவரையும் பிடித்துப் போனார்கள்
இழிவுபடுத்திவிட்டனர் உன்னையும்
ஆம் அம்மா இழிவுபடுத்திவிட்டார்கள்
அவர்கள் என்னையும் கைது செய்யாமல்
இழிவுபடுத்தி விட்டார்கள்[164]

எனக் கூறுகிறான்.

ஆலை நிர்வாகச் சீர்கேட்டினால் சாக்கடைக்காசுப் போராட்டம் என்ற ஒன்றைப் பாவெல் தலைமை தாங்கி நடத்துகிறான். அவ்வாறு நடக்கும் கூட்டத்தார்கள் பாவெலைக் காண வருதலைக் கலைஞர்,

பரந்து விரிந்து அலைமோதிக் கொண்டிருந்த
பாட்டாளி மக்கள்கடல்
பாவெல் முகம் கண்டவுடன்
புயலில் எழும்பும் விதமாக
அவனைச் சூழ்ந்து கொண்டது[165]

என்று குறிப்பிட்டுள்ளார்.

முதலாளிகளுக்கு எதிரான மே தின ஊர்வலத்தை நடத்த பாவெலும் அவனுடைய நண்பர்களும் தீர்மானிக்கின்றனர். அவ்வாறு தீர்மானித்து பாவெல் மேதின ஊர்வலத்திற்குச் செல்லத் தயாராகிறான். அவன் செல்வதை,

பிறைநுதலில் பெண்ணுக்கு வியர்வை அரும்பு கட்டும்
முதலிரவில் பெறுகின்ற இன்பத்தைவிட
சிறைநுழைவில் ஆயிரம் மடங்கு அதிகம் பெறலாமெனும்
சிறுத்தையுள்ளம் கொண்ட செம்மலன்றோ பாவெல்[166]

என்பர் கலைஞர். பாவெலின் மனஉறுதி வெளிப்பட்டுள்ளது.

மேதின ஊர்வலத்தில் பாவெல் செங்கொடியைப் பிடித்தபடிச் செல்கிறான். அவனைச் சுற்றிப் பெரிய கூட்டமே செல்கிறது. கூட்டத்தின் நடுவே செல்லும் பாவெல் முதலாளிகளுக்கு எதிரான பாடலாக,

> உலகப் பாட்டாளி மக்களே
> ஒன்றுபடுவோம் வாரீர்
> உழைப்போர்க்கே இவ்வுலகமென்று
> உரிமை முரசம் ஒலிப்போம் வாரீர்[167]

என்ற பாடலை பாடிக்கொண்டே செல்கிறான். தொழிலாளர்களை ஒன்று சேர்த்து முதலாளிகளுக்கு எதிராகப் போராடிய பாவெலை, சிறையில் அடைத்தனர். பிறகு நீதி விசாரணைக்குப் பாவெலையும் அவனது தோழர்களையும் அழைத்துச் செல்கின்றனர். நீதி விசாரணையின்போது பாவெல்,

> இதைத் தேசத் துரோக மென்றோ
> இராஜத் துரோக மென்றோ
> இழித்துரைத்து அழித்துவிட முடியாது
> உங்களைப் போன்றோர் அழித்துச் சுடுகாடாக்கிய இந்த
> உலகத்தை சோஷலிசம் கைப்பற்றும்
> நிச்சயம் அது நிறைவேறியே தீரும்[168]

என்று கூறி நீதிமன்றத்தின் கடைசிவாதமாக முடிக்கிறான். முடிவில் நீதிமன்றத் தீர்ப்பாக நாடு கடத்தல் தண்டனை அனைவருக்கும் வழங்கப்படுகிறது.

பாவெல் கொள்கைப் பிடிப்பும், உறுதியும், போராட்டக் குணமும் கொண்ட பாத்திரமாகப் படைக்கப்பட்டுள்ளான். ஒவ்வொரு இளைஞனும் பாவெலைப் போல இருத்தல் வேண்டும் என்பது கலைஞரின் எண்ணம்.

**ஆண்ட்ரி**

ஆண்ட்ரி என்றும் கோகோல்

என்றும் அழைப்பார்கள் என்னை[169]

என அறிமுகப்படுத்திக் கொள்ளும் இவ் இளைஞனும் தாய் காவிய வளர்ச்சிக்குத் துணை செய்கிறான். தாய்க்காவிய அன்னை நிலோவ்னாவுக்கு இவனும் ஒரு பிறவா மகனாக இருக்கிறான். அன்னை சொல்லுக்கு மாறாமல் நற்பண்பு உடையவனாகவும், அனைவரிடத்திலும் அன்புடையவனாகவும் திகழ்கிறான். நாளடைவில் நிலோவ்னா, பாவெல் இருவரின் பேச்சுக்கும் இணங்கி இவர்கள் வீட்டிலேயே தங்கிவிடுகிறான். பாவெல் நடத்தும் போராட்டத்திற்குத் தக்க உறுதுணையாக இருக்கும் ஆண்ட்ரி பலமுறை சிறைச்சாலைக்கும் சென்றான். ஒருமுறை போராட்டம் நடத்தப்போவதாக, கூட்டத்தின் சார்பாக அறிவித்தனர். அறிவிப்பைக் கேள்விப்பட்டு அரசு அதிகாரிகள் பாவெலையும், ஆண்ட்ரியையும் கைது செய்ய இவர்கள் வீட்டிற்கு வருகிறார்கள். அங்கு வந்து பார்க்கும் காவலர்கள் பாவெல் இல்லை என்றதும், ஆண்ட்ரியைக் கைது செய்ய ஆண்ட்ரியைத் தேடுகின்றனர். இதற்கெல்லாம் அஞ்சாதவன் அவர்களின் முன்வந்து,

இதோ இங்கே தான் இருக்கிறேன்

இது எனக்குப் பழக்கப்பட்ட விஷயம் தானே

என்றவாறு எதிர்வந்து நின்றான்

எதற்கும் அஞ்சாமல் ஆண்ட்ரி[170]

என்று கூறுகிறான்.

ஆண்ட்ரி அஞ்சாமை பண்புடையவன். அவன் ஒருபோதும் சிறை செல்வதற்கோ அல்லது போலீசாரின் மிரட்டலுக்கோ அடிபணிந்ததே கிடையாது. தொழிலாளர்கள் அவர்களின் கோரிக்கைகளை வேண்டி சாலையில் அணிவகுத்துச் செல்கின்றனர். போலீசார் இவர்களின் அணி

வகுப்பிற்குத் தடைவிதித்து எச்சரிக்கை விடுக்கின்றனர். தடையை மீறி, தொழிலாளர்கள் செல்லவே அவர்களின் மீது போலீசார் தடியடி நடத்தி ஊர்வலத்தைக் கலைத்தனர். ஆண்ட்ரியின் இல்லத்திற்கு வந்த அதிகாரிகள் வீடு முழுவதும் துண்டுப்பிரசுரத்தைத் தேடினார்கள். கடைசியில் துண்டறிக்கை எதுவும் கிடைக்காமல் போகவே அதிகாரிகள் மிகுந்த கோபமடைகின்றனர். ஆனால் அப்படி எதுவும் இல்லாமல் போகவே உயர் அதிகாரியான ஒருவர் போக்கிரிப் பயலுகளாக என்று கூற, உடனே ஆண்டரி

> போக்கிரிகளையே நாங்கள்
> இப்போது தான் பார்க்கிறோம் [171]

என்று காவல் அதிகாரிகளைக் கேலி செய்கிறான்.

ஆண்ட்ரி எந்த அதிகாரியின் பேச்சுக்கும் அச்சம் இல்லாமல் மக்கள் நலனுக்காகப் பாடுபடும் இயல்புடையவன். அவன் நிலோவ்னாவின் அன்புக்குப் பாத்திரமாக இருப்பதோடு மட்டுமல்லாமல் பாவெல் சிறை சென்றபோதெல்லாம் அன்னையிடம் அளவற்ற அன்புடையவனாக இருக்கிறான் என்பதை,

> அன்னைநிலோவ்னா அழுதழுது
> கண்ணீர் அருவி கன்னத்தில் வழிந்திட
> அதைத் துடைப்பதற்கு கைநீட்டி
> அருகில் நின்றான் ஆண்ட்ரி[172]

என்ற தொடர்கள் சுட்டியுள்ளது.

பாவல், சிறைசென்றுவிட, அவனையே எப்போதும் நினைத்தவாறு இருக்கின்றாள் தாயின் நிலை கண்ட ஆண்ட்ரி

> அவன் தான் நான் என்று
> இன்னும் நீ நினைக்கவில்லையா?
> பால் கொடுத்து நீ வளர்த்த மகன் பாவெல்

பாசம் பொழிந்து நீ வளர்த்த மகன் ஆண்ட்ரி அதனால்

பாவெலுக்குப் பதிலாகத்தான் வந்திருக்கிறேன்[173]

என்று கூறி அன்னையிடம் அன்பாக நடந்து கொண்டவன். ஆண்ட்ரி, பாவெலின் இயக்கத்தில் சேர்ந்து முதலாளிகளுக்கு எதிராகப் போராடினான் எனக்கூறி, அதிகாரிகள் நீதிமன்றத்தில் ஆஜர்படுத்தினர். அங்கு நீதிபதியின் கேள்விக்கு ஆண்ட்ரி,

ஓ அப்படியா? நான் உங்களை

நீதிபதிகளாக அல்ல

பிரதிவாதிகளாகவே நினைத்துவிட்டேன்[174]

என்று கேலி பேசுகின்றான்.

அவனுக்கு நீதிமன்றத்தில் என்ன தீர்ப்பு வழங்கினாலும் பரவாயில்லை என்றிருந்தான். தன் உயிரே போகும் நிலையிலும் கொள்கையினின்று மாறாமல் இருக்கும் பாத்திரமாக ஆண்ட்ரி அமைந்துள்ளான்.

**நிக்கோலாய்**

இவர் விவசாய நிறுவனமொன்றில் ஆசிரியராக வேலைப் பார்ப்பவர். இவரும் தாய் காவிய வளர்ச்சிக்குத் துணை செய்பவராக விளங்குகிறார். பாவெலின் வீட்டில் நண்பர்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து முதலாளிகளுக்கு எதிராகக் கூட்டம் ஒன்றை நடத்துகின்றனர். கூட்டத்தில் நிக்கோலாய்,

களம் அமைத்துப் போராடும்

காலம் வந்துவிட்டதென்றால் பிறகேன்

கையைக் கட்டிக்கொண்டு

உட்கார்ந்திருக்க வேண்டும்[175]

என்று பேசுவது, அவர் ஒரு சிறந்த காரியவாதி என்பதைக் காட்டுகின்றது.

தாய்க்கு இவன்மீது முதலில் கோபமாக இருக்கிறது. சில நாட்களில் நிக்கோலாயின் நல்ல மனத்தைத் தெரிந்து கொண்டதாய் அவனிடம் அன்புடையவளாக மாறுகிறாள். பாவெலின் இல்லத்தில் பாசறைக் கூட்டம் நடக்கும் நேரம் அதிகாரிகள் துண்டறிக்கை ஏதேனும் கிடைக்குமென்ற ஆவலில் சோதனையிட வருகின்றனர். சோதனையின் போது அவர்கள் அங்கு இருக்கும் புத்தகங்கள் அனைத்தையும் கர்வத்துடன் தூக்கி எறிகின்றனர். இதைப் பார்த்த நிக்கோலாய்,

கண்யமான சோதனையா நடத்துகிறீர்?

நல்ல கூத்து

புத்தகத்தை இப்படி எறிவது தான்

போலீஸ் அதிகாரிக்கு அழகோ?[176]

எனக் கேட்கிறான்.

போலீஸ் அதிகாரிகளை எதிர்த்துப் பேசியதால் நிக்கோலாயைச் சிறையிலடைத்தனர். சிறைச்சாலையில் நிமிடத்திற்கு நிமிடம் அதிகாரிகளுடன் தகராறு செய்கிறான். சில நாட்களில் சிறையிலிருந்து விடுதலையானவன் துண்டறிக்கை மற்றும் புத்தகங்களை அச்சிட்டுத் தொழிலாளர்களுக்கு விநியோகிக்கிறான். நாம் போராட்டத்தைத் தொடங்க இன்னும் எவ்வளவு காலம் தான் தாமதிப்பது என்றவன்,

நமது காரணங்களைப் பலப்படுத்திக் கொள்வதற்கு முன்பு

நமது மூளையைத் தான்

முதலில் பலப்படுத்திக் கொள்ள வேண்டும்[177]

என ஆண்ட்ரியிடம் கூறுகிறான். நிக்கோலாய் முரடனாக மட்டுமல்லாமல் நகைச்சுவை உணர்வு கொண்டவனாகவும் இருக்கிறான். ஒருமுறை சாலையில் குதிரை வண்டியை ஓட்டி வருகிறான். அப்போது நிலோவ்னா அவனை நோக்கிப் புது உத்தியோகாமா எனக் கேட்க அதற்கு நிக்கோலாய்,

குதிரைவண்டி பழைய உத்தியோகத்தான்

கழுதை தான் உழைப்பின் சின்னம்

அதைப்பூட்டி ஓட்டினால்

அதுதான் புது உத்தியோகம்[178]

எனக் கூறும்போது அவனுடைய நகைச்சுவை உணர்வு வெளிப்படுகிறது. போர்க்குணம் கொண்ட நிக்கோலாய்க்கு, பாவெலுடன் சேர்ந்து போராட்டத்தில் ஈடுபட்டதன் காரணமாக நாடு கடத்தல் தண்டனை கொடுக்கப்படுகிறது.

**நடாஷா**

நடாஷாவின் பங்கும் தாய் காவிய வளர்ச்சிக்குப் பெரும் உறுதுணையாக இருக்கிறது. நடாஷாவைப் பற்றி பாவெல் அன்னையிடம்,

அவள் ஓர் ஆசிரியை அம்மா

மாஸ்கோவில் ஒரு மாளிகைச் சீமானின் புதல்வி - இந்த

மார்க்கத்தை அவள் தேர்ந்தெடுத்த காரணத்தால்

ஆஸ்தி பாஸ்தி எதுவுமில்லையென்று

அவளை விரட்டினர்

அவளும் அவற்றை

ஒரு பொருட்டாக கருதவில்லை[179]

என்று அறிமுகப்படுத்துகிறான். அவள் குடும்பச் சூழலை,

தந்தையோ குபேரன் - தனயனோ குடிகாரன்

தமக்கையின் கணவனோ வயதான கஞ்சன்

தாயை நினைத்தால்தான் தீராத்துயரம் இந்த

நடாஷா இருந்து நடத்த வேண்டிய குடும்பம்[180]

என்று விவரிக்கிறான்.

நடாஷா மீது தாய்க்கு அன்பு ஏற்படுகிறது. பாவெல் நடத்தும் கூட்டத்தில் சேர்ந்து அவளால் முடிந்த உதவிகளைச் செய்கிறாள். துண்டறிக்கைகளை வெளியிடுகிறாள். மேதின ஊர்வலத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைக் கூட்டத்தினர் செய்யும்போது நடாஷாவும் அதில் கலந்து கொள்கிறாள். ஒரு முறை பாவெலின் இல்லத்தில் விருந்து நடைபெறுகிறது. விருந்தில் ஏராளமானோர் கலந்து கொண்டு தொழிலாளர்களின் நிலை பற்றிய கருத்துக்களை விவாதிக்கிறார்கள். அவ்வாறு விவாதிக்கும் நேரம் நடாஷா, தோழர்களே என்று தொடங்கி,

> ஒன்று விடாமல் நாம் உலக விஷயம் அனைத்தையும்
> உணர்ந்து கொள்ள வேண்டும்
> நம்மிடமுள்ள பகுத்தறிவு ஒளியை
> நன்றாக மேலும் தூண்டி விட்டுக்கொள்ள வேண்டும்.
> அறியாமை இருளை விரட்ட நம்மைநாமே
> அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும்
> உண்மையான தீர்மானமும் தீர்ப்பும்
> ஒவ்வொருவர் உள்ளத்துக்கும் தேவை
> உண்மையை அறிந்து கொள்வது போலவே
> பொய் என்பது என்னவென்றும்
> புரிந்து கொள்ள வேண்டும்[181]

என்று உரையாற்றுகிறாள்.

இவள் பேச்சைக்கேட்டு அன்னை வியக்கிறாள். ஆண்ட்ரி நன்று, நன்று எனத் தலையாட்டுகிறான். தாயானவள் மாஸ்கோவில் இருக்கும் தொழிலாளர்களுக்குத் துண்டறிக்கை கொடுக்க வேண்டும் எனக் கூற, இதைக் கேட்டுக் கொண்டிருந்த நடாஷா அச்சகத்திற்குச் சென்று எவருக்கும் தெரியாமல் துண்டறிக்கை அச்சிட்டுக் கொடுக்கிறாள். நடாஷாவின் போராட்டத் தொண்டு குறிப்பிடத்தக்கது.

**இரைபின்**

இவன் கொல்லுப்பட்டறைத் தொழிலாளி. பாவெலின் இல்லத்தில் நடக்கும் சோதனையின்போது காவலர்களுக்குச் சாதகமாகப் பதில் கூறுபவனாக இருக்கிறான். இல்லத்தில் காவலர்கள் பல இடங்களில் தேடிப்பார்த்தும் எவ்விதத் தடயமும் கிடைக்காமல் நிற்கின்றனர். அப்போது,

> **அடுக்களையில் தேடினால்**
>
> **அகப்பை கரண்டி ஏதாவது**
>
> **ஆவணங்கள் கிடைக்கக் கூடும் எஜமான்**[182]

என்று கூறுகிறான்.

இரைபின் கூறியவுடன் வெர்யாகோவ் என்பவன் அதிகாரியிடம் எஜமான் இவன் தடைசெய்யப்பட்ட கூட்டத்தில் இவனும் ஓர் உறுப்பினர் என்றான். அதிகாரி இரைபின் மீது கோபம் கொண்டு,

> **அப்போதே நினைத்தேன் நான்**
>
> **தப்பாது என் கணக்கு இந்தக்**
>
> **கோடாரிக் காம்பைத் தூக்கி ஒரு**
>
> **குப்பைத் தொட்டியில் போடுங்கள்**[183]

என்று கூறுகிறான். இரைபின் நிலோவ்னாவின் வீட்டிற்குச் செல்கிறான். அவளிடம் என் பெயர் ‘இரைபின் மைக்கேல் ஐவானோவிச்’ என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு, அன்னையிடம் இனிமேல் என்னை இரைபின் என்றே அழைத்தால் போதும் என்கிறான். அன்னை இரைபினைப்பார்த்து நலமா எனக் கேட்க

> நலம் என்ன வேண்டிக் கிடக்குது நலம்
>
> பணம் இல்லாமல் நலமாவது பலமாவது
>
> பிறப்பதற்கும் பணம் தேவை - உயிர்
>
> துறப்பதற்கும் பணம் தேவை[184]

எனக் கூறுகிறான்.

பணம் எதற்கு எனக்கேட்கும் அன்னையிடம் இரைபினானவன், பணத்தைப் பெற்றுத்தான் தொழிலாளர்களைத் தூண்டிவிடும் துண்டறிக்கை வெளியிட வேண்டும் என்கிறான். அன்னையிடம் பாமரரை ஏமாற்றி வாழ்பவன் படித்தவனும் பணக்காரனுந்தானே? எனக் கூறுகிறான்.

தொழிலாளர்களின் நலனுக்காக இரைபின் மிகவும் பாடுபடுகிறான்.

# அடிக்குறிப்புகள்

1. *மெ.சுந்தரம்,* **கலைஞரின் கவிதைச் சிற்பம்**, *ப.26.*
2. *மே. நூ.ப. 42*
3. *மே. நூ.ப. 45*
4. *கலைஞர் மு.கருணாநிதி,* **கலைஞரின் கவிதைகள்,** *ப.16.*
5. *மீசு இளமுருகு பொற்செல்வி,* **கருணாநிதி யார்?** *ப.25*
6. **கலைஞர் மணிவிழா மலர்,** *ப.74.*
7. *நாஞ்சில் கி.மனோகரன்,* **தமிழகத்தலைவர்,** *ப.31*
8. *கலைஞர் மு.கருணாநிதி,* **கார்க்கியின் தாய் காவியம்**, *ப.39.*
9. *மே.நூ.ப. 53*
10. *மே.நூ.ப. 56*
11. *மே.நூ.ப. 65*
12. *மே.நூ.ப. 82*
13. *மே.நூ.ப. 145*
14. *மே.நூ.ப. 174*
15. *மே.நூ.ப. 203*
16. *மே.நூ.ப. 348*
17. *மே.நூ.ப. 25*
18. *மே.நூ.ப. 19*
19. *மே.நூ.ப. 64*
20. *மே.நூ.ப. 20*
21. *மே.நூ.ப. 151*
22. *மே.நூ.ப. 158*
23. *மே.நூ.ப. 216*
24. *மே.நூ.ப. 222*
25. *மே.நூ.ப. 234*
26. *மே.நூ.ப. 307*
27. *மே.நூ.ப. 47*
28. *மே.நூ.ப. 84*

29. மே.நூ.பக். 343 - 344
30. மே.நூ.ப. 350
31. மே.நூ.ப. 382
32. மே.நூ.ப. 2
33. மே.நூ.ப. 175
34. மே.நூ.ப. 205
35. மே.நூ.ப. 231
36. மே.நூ.ப. 277
37. மே.நூ.ப. 338
38. மே.நூ.ப. 53
39. மே.நூ.ப. 63
40. மே.நூ.ப. 74
41. மே.நூ.ப. 88
42. மே.நூ.ப. 160
43. மே.நூ.ப. 204
44. மே.நூ.ப. 49
45. மே.நூ.ப. 49
46. மே.நூ.ப. 246
47. மே.நூ.ப. 240
48. மே.நூ.ப. 229
49. மே.நூ.ப. 94
50. மே.நூ.பக். 19 -20
51. மே.நூ.ப. 52
52. மே.நூ.ப. 6
53. மே.நூ.ப. 1
54. மே.நூ.ப. 4
55. மே.நூ.ப. 4
56. மே.நூ.ப. 62
57. மே.நூ.ப. 79
58. மே.நூ.ப. 80
59. மே.நூ.ப. 75

60. மே.நா.ப. 76
61. மே.நா.ப. 163
62. மே.நா.ப. 41
63. மே.நா.ப. 58
64. மே.நா.ப. 20
65. மே.நா.ப. 213
66. மே.நா.ப. 26
67. மே.நா.ப. 97
68. மே.நா.ப. 125
69. மே.நா.ப. 26
70. மே.நா.ப. 96
71. மே.நா.ப. 34
72. மே.நா.ப. 77
73. மே.நா.ப. 85
74. மே.நா.ப. 1
75. மே.நா.ப. 1
76. மே.நா.ப. 1
77. மே.நா.ப. 1
78. மே.நா.ப. 2
79. மே.நா.ப. 3
80. மே.நா.ப. 8
81. மே.நா.ப. 4
82. மே.நா.ப. 5
83. மே.நா.ப. 5
84. மே.நா.ப. 5
85. மே.நா.ப. 7
86. மே.நா.ப. 7
87. மே.நா.ப. 11
88. மே.நா.ப. 12
89. மே.நா.ப. 51

90. மே.நூ.ப. 58
91. மே.நூ.ப. 58
92. மே.நூ.ப. 14
93. மே.நூ.ப. 18
94. மே.நூ.ப. 18
95. மே.நூ.ப. 19
96. மே.நூ.ப. 21
97. மே.நூ.ப. 30
98. மே.நூ.ப. 30
99. மே.நூ.ப. 32
100. மே.நூ.ப. 33
101. மே.நூ.ப. 34
102. மே.நூ.ப. 35
103. மே.நூ.ப. 36
104. மே.நூ.ப. 36
105. மே.நூ.ப. 36
106. மே.நூ.ப. 40
107. மே.நூ.ப. 47
108. மே.நூ.ப. 115
109. மே.நூ.ப. 62
110. மே.நூ.ப. 62
111. மே.நூ.ப. 67
112. மே.நூ.ப. 69
113. மே.நூ.ப. 71
114. மே.நூ.ப. 74
115. மே.நூ.ப. 74
116. மே.நூ.ப. 98
117. மே.நூ.ப. 108
118. மே.நூ.ப. 116
119. மே.நூ.ப. 116

120. மே.நூ.ப. 117
121. மே.நூ.ப. 120
122. மே.நூ.ப. 374
123. மே.நூ.ப. 374
124. மே.நூ.ப. 96
125. மே.நூ.ப. 125
126. மே.நூ.ப. 2
127. மே.நூ.ப. 35
128. மே.நூ.ப. 40
129. மே.நூ.ப. 50
130. மே.நூ.ப. 58
131. மே.நூ.ப. 73
132. மே.நூ.ப. 49
133. மே.நூ.ப. 69
134. மே.நூ.ப. 71
135. மே.நூ.ப. 55
136. மே.நூ.ப. 73
137. மே.நூ.ப. 4
138. மே.நூ.ப. 15
139. மே.நூ.ப. 44
140. மே.நூ.ப. 47
141. மே.நூ.ப. 76
142. மே.நூ.ப. 77
143. மே.நூ.ப. 92
144. மே.நூ.ப. 6
145. மே.நூ.ப. 8
146. மே.நூ.ப. 13
147. மே.நூ.ப. 25
148. மே.நூ.ப. 25
149. மே.நூ.ப. 39
150. மே.நூ.ப. 8
151. மே.நூ.ப. 240
152. மே.நூ.ப. 342

153. மே.நூ.ப. 216
154. மே.நூ.ப. 222
155. மே.நூ.ப. 223
156. மே.நூ.ப. 230
157. மே.நூ.ப. 383
158. மே.நூ.ப. 13
159. மே.நூ.ப. 21
160. மே.நூ.ப. 23
161. மே.நூ.பக். 23 - 24
162. மே.நூ.ப. 29
163. மே.நூ.ப. 42
164. மே.நூ.பக். 75 - 76
165. மே.நூ.ப. 92
166. மே.நூ.ப. 213
167. மே.நூ.ப. 223
168. மே.நூ.பக்.361-362
169. மே.நூ.ப. 31
170. மே.நூ.ப. 72
171. மே.நூ.ப. 74
172. மே.நூ.ப. 125
173. மே.நூ.ப. 127
174. மே.நூ.ப. 364
175. மே.நூ.ப. 43
176. மே.நூ.ப. 156
177. மே.நூ.ப. 157
178. மே.நூ.பக்.170 - 173
179. மே.நூ.ப. 44
180. மே.நூ.ப. 48
181. மே.நூ.ப. 41
182. மே.நூ.ப. 73
183. மே.நூ.ப. 74
184. மே.நூ.ப. 138.

# இயல் - 6

# கலைஞரின் பிற திறன்கள்

உலகில் தோன்றிய மனிதர்களிடம் அனைத்துத் திறன்களும் உண்டு. ஒரு சிலரே அத்திறன்களைத் திறமையாக வெளியிட்டு இறவாப் புகழ் பெறுகின்றனர். அவ்வரிசையில் கலைஞர் குறிப்பிடத்தக்கவர். கலைஞர் அவர்களின் தனித்திறன்களைக் தொகுப்பது இவ்வியலின் நோக்கம்.

தம் வாழ்நாளில் கலைஞர் தூக்கத்திற்குச் சிறப்பிடம் தருவதில்லை. அவருடைய புகழுக்குக் காரணமாக விளங்குவது அவருடைய கடுமையான உழைப்பு.

சிலப்பதிகாரத்தைக் கருணாநிதி இன்றைய நடைமுறைக்கு ஏற்ப அமைத்துத் தந்துள்ளார் எனில் அவ்விலக்கியத்தைப் பல நூறு முறையாவது படித்திருத்தல் வேண்டும்.

கடுமையான உழைப்பில் ஈடுபட்ட கலைஞர் அவர்களுக்கு உடல் வளம் நிறையாது. வீரம் சொட்ட பேசுபவர் வீட்டிற்கு வந்ததும் மருந்துச் சொட்டுக்கள் உள்ளே செல்லும்.

பொதுவாழ்வில் மிகச் சிறு பிற்காலத்திலேயே அடியெடுத்து வைத்த நான் பூ மழைகளை மட்டுல்ல, புயல்களையும், பூகம்பங்களையும் தாங்கித் தாங்கி அனைத்தையும் ஒன்று போல் சமமாகக் கருதும் உணர்வினை இயல்பாகவே பெற்றிருந்த காரணத்தினால் தான் பெரியாருக்குத் தொண்டனாகவும், அண்ணாவுக்குத் தம்பியாகவும்

இருக்கக்கூடிய தகுதியைப் பெற முடிந்தது[1] என்ற கலைஞர் வாக்கு, அவரது தனித்திறன்களுக்குரிய அடிப்படையைச் சுட்டியுள்ளது.

படிப்பறிவும், பட்டறிவும், பகுத்தறிவும் ஒருவடிவு பெற்றது போல் விளங்கியவர் கலைஞர். ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்களுக்குத் தூங்காமை, கல்வி, துணிவுடைமை ஆகிய மூன்று பண்புகள் நிறைந்திருக்க வேண்டும் என்று பழந்தமிழர் கண்ட மரபிற்கேற்ப கலைஞர் வாழ்ந்து வருகின்றார்.




என்ற வரைபடம் கலைஞரின் தனித்திறன்களை ஓரளவு அடைவுபடுத்த முயன்றுள்ளது.

**மதிநுட்பம்**

தந்தை பெரியார் மறைந்தபோது, அவருக்கு அரசு மரியாதை தரும் என்று கலைஞர் கூறியதும் அதிகாரிகள் தவித்தனர். அரசுப் பொறுப்பில் இல்லாதவர்களுக்கு அரசு மரியாதை அமையுமானால், மத்திய அரசின் பகைக்கு ஆளாக நேரிடும் என்று அதிகாரிகள் கூற, காந்தியடிகள் எந்த அரசுப் பொறுப்பில் இல்லாதபோது அரசு மரியாதை தரப்பட்டது போல் பெரியாருக்கும் அரசு மரியாதை வழங்கப்படும். இது பெரியாரின் அரசு என்று கலைஞர் கூற விவாதம் அடங்கியது. மத்திய அரசும் மறுப்பு வெளியிடவில்லை.

குடிமக்கள் காப்பியமான சிலம்பில் கலக்கின்றது. பாண்டிய நாட்டுப் பொற் கொல்லனால், அச்சமுதாயத்திற்கே இழிவுகிட்டுகின்றது. கலைஞரால் அதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. பூம்புகார் திரைக் காவியத்தில் பொற்கொல்லனையும் கோவலன் போல குற்றமற்ற மனிதனாகக் காட்டிய நற்செயல் பொற்கொல்லர் சமுதாயத்தின் மீது இளங்கோவடிகள் சுட்டிய பழியைக்கலைஞர் மாற்றி அமைத்துச் செய்த புதுமை நினைக்கத்தக்கது.

கலைஞர் கட்டுரையாளர், இதழாசிரியர், சிறுகதை ஆசிரியர், நாவலாசிரியர், நாடக ஆசிரியர், நடிகர், திரைப்பட வசனகர்த்தா, கவிஞர், சொற்பொழிவாளர், அரசியலறிஞர் என்ற பன்முக ஆற்றல் பெற்றவர். இவற்றில் நடிப்புத்துறையைத் தவிர மற்றவற்றில் கலைஞர் வெற்றி முரசு கொட்டியவர். இந்நிலை தமிழகத்தில் யாருக்கும் கிடைக்கப்பெறாத ஒன்றாகும்.

**அரசியல் திறன்**

முறை செய்து காப்பாற்றுபவன் மன்னன் (இறைவன்) என்னும் மொழிக்கேற்ப, மக்களின் குணங்களை அறிந்து களைந்துள்ளவர்கள் அரசியல் தனித்திறம் பெற்று விளங்குகின்றனர்.

கலைஞர் பொதுப்பணி அமைச்சராய் இருந்தபொழுது

கலைஞரின் அரசியல் திறனை நேரில் பார்க்கும் வாய்ப்பு ஏற்பட்டது. தஞ்சையில் உள்ள பஞ்சாலை ஊழியர்களின் போராட்டம் உச்ச கட்டத்தை அடைந்தது. அந்நூற்பாலை தனியார்க்குச் சொந்தமானது. அதிகாரிகளின் அளவில் பேச்சு வார்த்தை தோல்வி அடைந்துவிடுகின்றது. கலைஞர் பஞ்சாலை முதலாளிகளை, இராஜா ரெஸ்ட் ஹவுஸிற்கு வரச்சொல்கின்றார். முதலாளிகளும் வந்தனர். கலைஞர்

முதலாளிகளைப் பார்த்து, தொழிலாளர் பிரச்சினைகளைத் தீர்க்கிறீர்களா? இல்லை அதை அரசு எடுத்துக்கொள்ள செய்யட்டுமா? என்று கேட்டதும், அமைச்சரான கலைஞரின் வார்த்தைகளை எதிர்ப்பார்க்காத முதலாளிகள் பயந்து பிரச்சினைக்கு முடிவுகட்ட ஒத்துக் கொண்டனர். போராட்டம் ஒரு நொடியில் வாபஸானது. பிரச்சினைகளை நேரடியாக அணுகும் முறை கலைஞருக்கு முன்னும் இருந்ததில்லை பின்னும் இருந்ததில்லை.

**இலக்கியத்திறன்**

ஆன்மீகத்தையும், ஆத்மாவையும் பேசிக் கொண்டிருந்த திரை இலக்கியத்தில், பகுத்தறிவு சமூகப் பிரச்சாரம் தொடங்கிய பெருமை கலைஞருக்குரியது என்பதை,

> ஆன்மீகத்தையும்
> ஆத்மாவையும்
> பேசிக் கொண்டிருந்த
> திரையுலகில்
> நுழைந்தபோது தான்
> பகுத்தறிவுக் கொடி
> பட்டொளி வீசிப் பறந்தது
> உன்னால் தான்
> திரை கொட்டகைகளில்
> சமூக நீதி பிரச்சாரமே
> தொடங்கி வைக்கப்பட்டது[3]

என்ற கவிதை அடிகள் சுட்டியுள்ளது.

**பேச்சுத் திறன்**

உரையின் நடுவே உவமைகளும், மேற்கோள்களும் மழையாய் உதிரும் பேச்சுக்குத் தமிழகத்தில் இன்னும் மதிப்புண்டு. எதிரியை

வசைபாட எண்ணினாலும் தரம் குறையாதத் தொடர்களால் நயமாகச் சுருக்கென தைக்குமாறு பேசுவது கலைஞருக்குக் கைவந்த கலை.

கலைஞரின் கவிதை அடிகளை அவரே சொல்லும் போது சந்தக் கவிதைகளும், மரபுக் கவிதைகளும் மௌனமாகிப் போவதை ஆய்வாளர் கவியரங்குகளில் அனுபவித்துள்ளார்.

கலைஞர் மு.கருணாநிதி தமிழ்க்கவிதைத் தேரைப் புதிய திசையில் ஓட்டிச்செல்லும் சாரதி[4] என்று டாக்டர் சி.இலக்குவனார் கூறும் கருத்து உண்மையின் பாற்பட்டது.

மனிதனின் ஆற்றல்கள் பல்வேறு வகைகளிலும் துறைகளில் காணப்படுகின்றன. பொதுவாக ஒரு தனிமனிதனுக்கு ஒருதுறையில் மட்டும் திறமையும், மேன்மையும் காணப்படுகின்றன. சங்கீதக் கலை, விஞ்ஞானத் துறை, ஓவியம், கவிதை முதலிய தனித்துறைகளில் மேதைகள் பலர் உள்ளனர். ஒரு துறையில் மேன்மை அடைந்தவரிடம் மற்றத்துறைகளில் திறமையோ, ஈடுபாடோ குறைவாகக் காணப்படும். ஒரு சிலர் மட்டும் பல துறைகளிலும் மேன்மை படைத்துத்துண்டா? விளக்காக விளங்குவர். இவர்களுள் கலைஞரும் ஒருவர்.

மனிதனின் மூளை ஓர் நுட்பமான கருவி. எல்லா எண்ணங்களும் திறமைகளும் கற்பனைகளும் 1/2 கிலோ கிராம் கருவியில் அடங்கியுள்ளன. மூளை ஒன்றாக இருப்பினும், அது வலப்புறம், இடப் புறம் என இருவகையில் செயல்படுகின்றது. கணிதம், கரிசனம், ஆளும் திறமை கண்காணிப்பு, பேச்சு நிறைதத்துவம் ஆகியவை இடதுபக்க மூளையிலும், கனவு, ஓவியம், கவிதை கற்பனை ஆகியவை மூளையின் வலதுபக்க பகுதியிலும் அமைந்துள்ளன. கலைஞருக்கு இரண்டு பக்க

அமைப்புகளும் செயல்படுகின்றன. ஒருபுறம் ஆட்சித் திறமை, மறுபுறம் கவிதைக்கலை. இதுமிக்க அரிய செயலாகும்.

கலைஞரின் கவிச்சுவையும், நகைச்சுவை உணர்வும் பொதுவானவை. குழலுக்கு என்ப பளீச்சென்று நகைச்சுவையும், பொருள் திறனும் உள்ள சுருக்கமான பதிலைக் கொடுப்பதில் வல்லுநர். இத்திறமையில் கலைஞரைத் திறன் சத்திய மூர்த்தியுடனும், மணந்த பிரிட்டீஷ் பிரதமர் சர்ச்சிலுடனும் ஒப்பிடலாம்[5] என்பர்.

நகைச்சுவையால் ஒரு கடினமான சூழலை நொடிப் பொழுதில் களையும்சக்தி அற்புதமானது.

யார் உதவி செய்தாலும் எவ்வளவு சிறிய உதவியாக இருந்தாலும் அதை மறக்காமல் மிகப்பெரிய உதவியாக மனத்தில் கொள்ளும் இயல்புடையவர். கலைஞர் அரசியல்வாதிகளிடம் இல்லாத இப்பண்பு கலைஞரிடம் இருப்பது குறிப்பிடத்தக்கது.

கலைஞர் தமிழ்மீது வைத்த பற்றைவிடக் கழகத்தின் மீது வைத்துள்ள பற்றை விட தாய் அஞ்சுகம் அம்மையாரிடம் அளவு கடந்த பற்று வைத்திருப்பவர். தம் அன்னையிடம் கொண்டுள்ள பற்றை அறிஞர் அண்ணாவின் தாய் தொத்தாவிடமும் கொண்டிருந்தார்.

கலைஞரின் தாய்ப்பற்று, பின்னாளில் தாய்மொழிப்பற்று, தாய் இனப் பற்று என்று வளர காரணமாயிருந்தது.

**செயல்திறன்**

ஏட்டளவில் இருந்த கலப்பு மணத்தையும், இளம் விதவை சமுதாயத்தினரால் ஒதுக்கப்பட்ட மறுமணத்தையும் ஊக்குவித்த திறத்தை, தொழுநோயாளிகளுக்கும், பிச்சைக்காரர்களுக்கும் விடுதிகட்டிய தன்மையை,

> கலப்பு மணம் செய்து சாதிக்
> காழ்ப்புகளை நீக்கிக் கைம்பெண்
> மறுவாழ்வு பெறவே மீண்டும்
> மன்றலினை நடத்தி கூத்து
> நிலமீது தொழுநோய் பெற்றோர்
> நிலைமாற்ற விடுதி கட்டி
> நலம்பெறவே பிச்சைக்காரர்
> நலத்திட்டம் சொலில் தந்தாய்[6]

என்ற கவிதை அடிகள் சுட்டியுள்ளது நினைக்கத்தக்கது.

**வெற்றித் திறன்**

ஐந்துமுறை முதல்வராகப் பதவி ஏற்ற முதல்வர் இந்தியாவில் கலைஞர் ஒருவர் மட்டும் என்பது குறிப்பிடத்தக்கது.

பத்துத் தேர்தல்களில் தோற்காத தனித்தலைவராக விளங்குபவர் கலைஞர். இவர் தலைமையில் அமைந்த அரசு இருமுறை கலைக்கப் பட்டாலும், கலைஞர் என்றும் தோல்வியைத் தழுவாத தலைவராக இன்றும் விளங்கி வருவது நினைக்கத்தக்கது.

மனித நாகரிகத்தின் அவமானச் சின்னமான கைரிக்ஷா இந்தியாவில் இன்னும் கல்கத்தா, பாட்னா, டில்லி ஆகிய நகரங்களில் இருக்கச் செய்கின்றது. என்றாலும், சென்னையில் கலைஞர் 30

ஆண்டுகளுக்கு முன்பாகவே நீக்கிவிட்டது. கலைஞரின் கருணைத் திறனுக்கோர் 16 வயதில் பத்திரிகை உலகில் புகுந்த கலைஞரைப் போல் வேறு ஒருவரை இணையாகக் கூறமுடியாது. 1941 ஆம் ஆண்டு முரசோலி என்ற கையெழுத்துப் பிரதி நடத்தியவர் கலைஞர்.[7]

சங்க இலக்கியப் புலவர்களுக்கு நவீன இலக்கியம் வருவதில்லை. நவீன இலக்கியவாதிகளுக்குச் சங்க இலக்கியம் தெரியாது. புதுக்கவிதை எழுதுவோருக்கு மரபுக்கவிதை வராது. மரபுக்கவிதைகள் பலருக்குப் புதுக்கவிதைவராது.

கலைஞருக்குச் சங்க இலக்கியத்தில் எவ்வளவு புலமையோ அவ்வளவு புலமையையும், இலக்கியம், திருக்குறள் முதல் திரைப்படப் பாடல்கள் வரை பரவி உள்ளது.

கலைஞரின் இலக்கியத்திறன் நான்கு தலைமுறைகளைக் கண்டுள்ளது. நான்கு தலைமுறையினராலும் ஆன கலைஞரது திறன் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது வியக்கத்தக்கது.[8]

நான்கு தலைமுறையினரின் நாகரிகம், பண்பாடு, பழக்க வழக்கம், மொழி, நடை, சிந்தனை, தொழில் நுட்பம் ஆகியவற்றை உள்வாங்கி கலைஞரது படைப்புகள் வெளியிடுவதால் நிலைத்து நிற்கின்றன.

**பொறுமைத்திறன்**

கலைஞரின் நிலைத்த திறனுக்கு உரிய காரணிகளாக எதையும் தாங்கும் இதயம், அரசியல் நாகரிகம், மாற்றாரை மதிக்கும் மாண்பு, பொதுநலம் வேட்டல், ஏழை எளியோர் நலம் பேணல், கலையைக்

கண்ணாக மதிக்கும் பண்பு, எதையும் அறிவோடு செயல்படுத்தும் தன்மை, ஓய்வறியா உழைப்பு ஆகியவற்றைக் கூறுதல் சிறப்புடைத்து.[9]

கலைஞரின் பேச்சைக் கேட்டு ஒவ்வொரு கழகத் தொண்டனும் பேச்சாளனாக மாறினான். அவர் எழுத்தாற்றலைக் கண்டு ஒவ்வொரு வீட்டிலும் ஓர் எழுத்தாளன் தோன்றினான். கலைஞரின் திறனுக்கு இது செயல்பாடு தனிச்சான்றாகும். தமிழகத்தில் வேரூன்றி இருந்த காங்கிரஸ் ஆட்சியை மாற்றியது. அண்ணா கலைஞர் ஆகியோரின் பேச்சுதான் என்பது நிதர்சன உண்மையாகும்.

கலைஞரின் தனித்திறன்களில் தனியிடம் பெறுவது சமத்துவத் திட்டம் அமைத்ததாகும். சாதி சமயப் பிணக்குகள் நீக்கும் திட்டமாக இத்திட்டம் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

உலகில் உள்ள தமிழர்கள் அனைவரையும் கணிப்பொறி அறிவியல் உலகத்தின் மூலம் இணைக்கும் பரிணாம வளர்ச்சி தோன்றியுள்ளது. அறிஞர்கள் போற்றும் இத்திட்டத்தை உருவாக்கிய பெருமை கலைஞரைச் சாரும். உலகம் முழுதும் ஆதிக்கம் செலுத்திய ஆங்கில மொழிக்கு இணையாக, கணிப்பொறி உலகில் தாய்த்தமிழை உயர்த்தி வரலாறு படைத்தது நினைக்கத்தக்கது. காலத்துக்கு ஏற்ப நடவடிக்கை எடுக்கும் தனித்திறன் பொறைவர் கலைஞர்.

**நன்றித்திறன்**

நண்பரை மறக்காத நன்றியுணர்வு கலைஞரின் வாழ்வில் பிரிக்க முடியாத பண்பாக அமைந்துள்ளது. டி.கே.சீனிவாசன் என்பவர் கழகத்திலிருந்து எதிர்கட்சியான அ.இ.அ.தி.மு.க.விற்குச் சென்றவர் அவர் மறைந்ததும், பழைய நட்பை எண்ணி மறைவு நிகழ்ச்சியில் கலந்து

கொண்டதோடு மட்டுமின்றி, படத்திறப்பு விழாவிலும் கலந்து கொண்டு மரியாதை செலுத்திய பண்பு தனித்திறனுக்குப்பட்டது.[10]

கலைஞரின் தனித்திறன்கள் யாரிடமும் தானமாகப் பெற்றதில்லை. பாரம்பரியமாக வந்ததுமில்லை. தனித்திறன்களை அவர் ஒரு சுயம்புவாக உழைத்துத் தேடிச் சேர்த்த செல்வமாகும்.

தன் சார்பாக நடைபெறும் விழாக்களில் உண்டியல் வைத்து அதில் சேரும் பணத்தை முதல்வர் நிதியில் சேர்க்கும் தன்மை குறிப்பிடத்தக்கது. வசூல் செய்வதை வழக்கமாகக் கொண்டிருப்பவர் கலைஞர்.

முதறிஞர் இராஜாஜி அரசியல் சாணக்கியர் என்பதோடு ஊழலற்ற முறையில் கட்சிக்கு அப்பாற்பட்டதாக அரசு நடைபெற வேண்டும் என்ற கொள்கை கொண்டவர்.

கர்மவீரன் காமராஜர் எந்த ஒரு திட்டமும் ஏழை எளிய மக்களுக்கு நன்மையளிக்கக்கூடியதாக இருக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தார்.

பெரியார் பக்தவச்சலம் சட்டசபை நிகழ்ச்சியின்போது, உறுப்பினர்களின் வாதங்களைக் கேட்டுக் கொண்டிருந்தார். உறுப்பினர்களின் பேச்சுக்களைக் கேட்காமல், கோப்புக்களைப் பார்த்து குறிப்பு எழுதிய வண்ணமிருப்பார். நிர்வாகத்தில் வேகமும் திறமையும் பெற்றவராக விளங்கியவர்.

அறிஞர் அண்ணா குறுகிய கால ஆட்சி செய்தவர் எனினும், தமிழன் முன்னேற்றத்திற்கென பல திட்டங்களைத் தீட்டினார். சென்னை ராஜ்ஜியம், தமிழ்நாடு என்று பெயர் மாற்றம் செய்தவர்.

கலைஞர் மேற்கூறிய அனைத்துத் திறன்களையும் கொண்டிருந்தவர்.

**நினைவுத்திறன்**

கலைஞர் அவர்களின் நினைவாற்றல் வியக்கத்தக்கது. எதிர்த் தரப்பினரின் வாதங்களை அவர்களுடைய பழைய வாக்கு மூலங்களைக் கொண்டே உடைக்கும் திறம் படைத்தவர்.[11]

**பாராட்டும் திறம்**

நல்ல பண்பைப் பெற்றவர்கள் எதிரணியிலிருந்தாலும் திறந்த மனத்தோடு பாராட்டும் கலைஞரின் தனித்திறம் வியக்கத்தக்கது. அரசியல் கருத்து வேறுபாடு ஆயிரம் இருப்பினும் மக்களுக்காக உழைக்கும் உண்மைத் தலைவர் என்பதால் காமராசருக்குப் பிறந்த நாள் வாழ்த்து கூறும் முகமாக,

> **ஆயிரம் உண்டு கருத்து மோதல் - எனினும் அழியாத்தொண்டு மறந்திடப்போமோ கருத்திருக்கும் உன் உடல் என்றாலும் - நெஞ்சில் கருத்திருக்கும் காலமெல்லாம் உழைப்பதற்குக் கதராடை மனிதனை அலங்கரிக்கும் கதறுகின்ற ஏழைகளைக் கரம் அணைக்கும் தனிமனிதன் வாழ்வல்ல உன் வாழ்வும் தன்மானச் சரித்திர உதயத்தின் அத்தியாயம்**[11]

என்று குறிப்பிட்டுள்ளது மகிழத்தக்கது.

**தன் வரலாறு எழுதிய தனித்திறன்**

மார்க்கோ போலோவும், யுவான் சுவாங்கும் குறிப்பு எழுதி வைக்கவில்லை எனில் இந்திய நாட்டு வரலாறு வெளி உலகிற்குக் கிட்டாமல் போயிருக்கும். தமிழ்நாட்டு வரலாறு கிட்டாததற்குக் காரணம் எழுதி வைக்காததுதான்.

இதிகாசப் புனைக் கதைகள் கற்பனை கலந்ததால் அவற்றில் முழுமையாக உண்மை இருப்பதில்லை.

ஐம்பெருங்காப்பியங்களும், கல்வெட்டுக்களும் தருகின்ற செய்திகளால் ஓரளவு வரலாறு கிடைத்துள்ளது.

இராகுல சாங்கிருத்தியாயன் எழுதிய வால்காவிலிருந்து கங்கை வரை என்ற நூல் கங்கையோடு நின்றுவிட்டது.

நாட்டைப் பற்றிய வரலாறு ஒரு பக்கமிருந்தாலும், மனிதருள் மாணிக்கங்களாக அறிவு ஜீவிகளாக விளங்கிய சிந்தனையாளர்கள் பலருடைய வரலாறு வெளி உலகத்திற்குத் தெரியாமல் போய்விட்டது. சங்க இலக்கியங்கள் முழுமையாக கிடைக்கவில்லை. கிடைத்த இலக்கியங்களைப் படைத்த ஆசிரியர்களின் வரலாறு தெரியாததால் பாட்டு வரிகளால் பெயரிட்டு அழைக்கப்பட்டன. வள்ளுவர் வரலாறும், தொல்காப்பியர் வரலாறும் கிடைக்கவில்லை.

புதுவையில் வாழ்ந்த ஆனந்தரங்கம்பிள்ளை எழுதிய நாட்குறிப்பு வரலாற்றுப் பெட்டகமாக விளங்குவது குறிப்பிடத்தக்கது.

பெரியாரின் வரலாற்றை அவர் காலத்திலேயே சாமி சிதம்பரனார் எழுதி வைத்துவிட்டார்.

அறிஞர் அண்ணா, சர்பி.டி.தியாகராயர், டாக்டர் சி.நடேசனார், டி.எம்.நாயர், ஜி.டி.நாயுடு போன்றவர்களின் வரலாறு தெரியாமல் போய்விட்டது.

காந்தியடிகள் சத்திய சோதனையில் தன் வரலாற்றை அமைத்துள்ளார். நேரு கடிதங்களின் வாயிலாக வரலாற்றுச் செய்திகளைப் படைத்துள்ளார்.

திரு.வி.க. வ.உ.சிதம்பரனார், நாமக்கல் கவிஞர், உ.வே.சாமிநாதய்யர் தங்களது வாழ்விற்குச் சுவடுகளைப் படைத்துள்ளனர். மறைமலை அடிகளின் வரலாற்றை அவர் மகன் மறை மாணிக்கவாசகமும், சோமசுந்தர பாரதியார் வரலாற்றைப் பேராசிரியர் சாம்ப சிவனாரும் எழுதியுள்ளனர்.

இவ்வரிசையில் கலைஞர் தன்வரலாற்றை நெஞ்சுக்கு நீதி என்ற நூலாகப் படைத்துள்ளது குறிப்பிடத்தக்கது.

கலைஞர் தான் பிறந்த 1924 ஆம் ஆண்டு முதல் 1991 ஆம் ஆண்டு வரையிலான வரலாற்றை மூன்று தொகுதிகளாகப் படைத்துள்ளார். கலைஞனோடு திராவிடக் கழகம் இணைத்துள்ள தன்மை தான் இந்நூலில் பெரிதும் இடம் பெற்றுள்ளது.

இந்தியாவில் முதல் முறையாகப் பிற்படுத்தப்பட்டோருக்கான தனித்துறையும், தனி அமைச்சவையும் உருவாக்கி 30%, இட ஒதுக்கீடு தந்தது கலைஞரின் தனித்திறனாகும்.[13]

'A good man is one who fighty evil' என்று கூறுவது பொது மரபு. தீமைகளை எதிர்ப்பவனே நல் மனிதன் என்பது இதன் பொருளாகும். கலைஞரின் தனித்திறன்களில் தீமையை எதிர்க்கும் துணிவும் இணைந்துள்ளது.

**உறுதித்திறன்**

இந்திரா காந்தி அம்மையார் நெருக்கடி பிரகடனத்தைக் கொண்டு வந்த போது, முதலமைச்சர் பதவியிலிருந்த கலைஞர் கடுமையாக எதிர்த்தார். எதிர்த்த தன் விளைவு ஆட்சி கலைக்கப்பட்டு பதவி இழந்தார். பதவி இழந்த பின்னும் எதிர்ப்பை விட்டுவிடாதது குறிப்பிடத்தக்கது.[14]

தொண்டர்களைத் தம் வாழ்வின் பாதுகாப்புச் சுவராக எண்ணும் அரசியல் தலைவர்களுக்கு நடுவே கலைஞர் தொண்டர்களை மறவாத இயல்புடையவராக விளங்கிவருவது மகிழத்தக்கது.

வேற்றுமொழிதாக்கத்தின்போது தமிழைக் காக்கும் பொருட்டு உயிரைத்தியாகம் செய்தவர்களை, மொழிப் போர்த்தியாகிகள் என்றழைத்து அவர்கள் குடும்பச் செலவுக்கு மாதந்தோறும் மூவாயிரம் ரூபாய் ஓய்வூதியம் வழங்கியும், அவர்களது வாரிசுகளுக்குத் தொழிற்கல்வி பயில இடஒதுக்கீடு அளித்திருக்கும் கலைஞரின் திறம் வியக்கத்தக்கது.

மக்களைக் கவரும் திட்டங்களைச் சொல்லிச் செயல்படுத்துவதில் கலைஞர் தனித்திறன் படைத்தவர்.

அறுபத்தாறு இலட்சம் மாணவ கண்மணிகளுக்கு இலவசப் பாட நூல் வழங்கியது.

ஊனமுற்றோர் உலகில் வாழ செயற்கை கை, கால் பொருத்த ரூபாய் பத்தாயிரம் உதவித் தொகை வழங்கியது.

சமீபத்தில் கழக வெற்றிக்கு மூலமாக அமைந்தது இலவச வண்ண தொலைக்காட்சிப்பெட்டி என்பது உண்மையாகும்.

மக்களின் பொழுதுபோக்கு அம்சங்களில் திரைப்படம் தனியிடம் பெற்றுள்ளது. 1969 ஆம் ஆண்டு ஆட்சி பொறுப்பேற்ற கலைஞர், தமிழ்நாடு தியேட்டர் கார்ப்பரேசன் என்ற அமைப்பினை ஏற்படுத்தி, திரையரங்கம் கட்ட நிதியுதவி பெறும்வகை செய்தார். இந்திய கண்டத்தில் அதிக திரையரங்குகள் தமிழ்நாட்டில் அமைய முன்னோடியாகக் கலைஞர் இருந்துள்ளது குறிப்பிடத்தக்கது.[15]

மக்களைக் கவருவதில் கலைஞரின் தனித்திறன் குறிப்பிடத்தக்கது.

எழுத்துலகிலும், பேச்சு உலகிலும் சிறந்து விளங்கும் கலைஞர் தன் எழுத்தைப் பற்றி,

எழுதும்போதே பிழைகள் வராமல் தான் எழுதுவேன் பெரும்பாலும் பிழையே வராது..... அப்படி ஒரு வேளை பிழை வந்துவிட்டாலும் அடிக்கவோ, திருத்தி போடவோமாட்டேன் அந்தத் தவறைச் சரிசெய்கிற வகையில் அடுத்த வரியினை அமைத்துவிடுவேன்[16] என்று தரும் விளக்கம் அவருடைய எழுத்துத் திறனுக்குரிய அடிப்படையைச் சுட்டியுள்ளது.

கலைஞரை யாரும் உருவாக்கவில்லை. தன்னைத் தானே உருவாக்கிக் கொண்டார் என்பதே உண்மை.

தன்னைப் பற்றிய குறையை முறைப்படி வெளியிடும் திறம் கலைஞரின் தனித்தன்மையாகும். கலைஞர் மரபுக்கவிதைத் துறையைத் தேர்ந்தெடுக்காது வசனக்கவிதை வடிவைத் தேர்ந்தெடுத்ததற்கு உரிய காரணத்தை,

> **இலக்கணம் என்னும் தாய்ப்பால் அருந்தாமல் பசி எழுந்தபோதெல்லாம் புதுக்கவிதைப் புட்டிப்பால் குடித்திடும் குழந்தை நான்**[17]

*என்ற தொடர்களால் சுட்டியுள்ளார். தான் முறைப்படி கவிதை இலக்கணம் படிக்கவில்லை என்பதை வெளிப்படையாகக் கூறும் திறம் நினைக்கத்தக்கது.*

*கலைஞரின் உளவியலை ஆராயும்போது கவிஞனே முன்வந்து நிற்கின்றான். கலைஞரின் வெற்றித் தோல்விக்குக் கவிஞன் தேவைப்படுகின்றான்.*

> **கவி எழுத நேரம் இல்லை எனினும்**
> **கலை உள்ளம் எனை விடுவதில்லை**[18]

*என்ற கலைஞரின் எண்ணம் அவர் மனத்தில் நிறைந்துள்ள கலை உணர்வை வெளிப்படுத்தியுள்ளது.*

# அடிக்குறிப்புகள்

1. *கலைஞரின் வாழ்த்துச் செய்தி,* **கலைஞரின் பவளவிழா மலர்.**
2. *நாஞ்சிலார், ஆற்றலின் அகவை 76,* **கலைஞரின் பவளவிழா மலர்.**
3. *கவிஞர் தமிழ்த்தாசன்,* **கலைஞரின் 77 வது பிறந்தநாள் சிறப்பு மலர்,** *ப.33.*
4. *டாக்டர் சி.இலக்குவனார்,* **கலைஞரின் மணிவிழா மலர்** *(1984),ப.320*
5. *பி.இராமமூர்த்தி,* **பல்துறை வித்தகர், கலைஞர் பவளவிழா மலர்.**
6. *பாவலர் கருமலைத் தமிழாழன்,* **மணக்கின்ற கொள்கைப் பூவே,** *கலைஞர் பவளவிழா மலர்*
7. *வ.முல்லைவேந்தன்.* **எங்கள் முதல்வர் எல்லாவற்றும் புலவர், கலைஞர் பவளவிழா மலர்.**
8. *மேலது.,*
9. *கு.பிச்சாண்டி,* **ஓய்வறியாச் சூரியனின் பவளவிழா,** *கலைஞர் பவளவிழா மலர்*
10. *டி.கே.எஸ்.இளங்கோவன்,* **உருகிவக் கிழுந்தவன் கை, கலைஞர் பவளவிழா மலர்.**
11. *ஐ.சண்முகநாதன்,* **ஒரு பத்திரிக்கையாளன் பார்வையில் கலைஞர், கலைஞர் பவளவிழா மலர்.**
12. *கே.கே.எஸ்.பெ.ஆன்.,* **கலைஞர் பவளவிழா மலர்.**
13. *சி.நல்லரசு,* **கலைஞரின் சமுதாய நலப்புரட்சித்திட்டங்கள், கலைஞர் பவளவிழா மலர்.** ,
14. *வ.செ.குழந்தைசாமி,* **எட்டும் தூரத்தில் சிகரம், கலைஞர் பவளவிழா மலர்.**
15. *ஒ.எல்.அழகப்பன்,* **கலைஞரும் கலை உலகமும், கலைஞர் பவளவிழா மலர்.**
16. **கலைஞர் பவளவிழா மலர்**
17. *கலைஞர் மு.கருணாநிதி,* **கலைஞர் கவிதைகள்,** *ப.316*
18. *மேலது., ப.214.*

# முடிவுரை

கலைஞரின் புலப்பாட்டுத்திறன் என்னும் தலைப்பில் மேற்கொண்ட ஆய்வின் முடிவுகள் இனிவருமாறு.

கலைஞர், எழுத்து, சொல் ஆகிய கலைகளில் தனிப்பெறும் ஆற்றல் படைத்தவர். கலைஞரின் படைப்புக்கள் சமுதாய எண்ணங்களைப் புலப்படுத்தும் களன்களாகப் படைக்கப்பட்டிருப்பதால் கலை, கலைக்காகவே என்னும் கோட்பாட்டைக் கலைஞர் கைக்கொண்டவர்.

- ❖ அரசியல் ஈடுபாடு கலைஞரின் கல்வியைத் தடைசெய்தது.
- ❖ ஆளுமைக்குப் பிறப்பும், சூழலும் காரணங்களாகும்.
- ❖ கலைஞரது தமிழ் 'கலை இலக்கிய உலகில்' தனிவழித்தடம் பதித்துள்ளது.
- ❖ கலைஞர் தன் பதினான்காம் வயதில் அரசியலில் ஈடுபட்டவர்.
- ❖ அண்ணா, பட்டுக்கோட்டை அழகிரி ஆகியோரின் பேச்சும், மூவலூர் இராமாமிர்தம்மையாரின் நிருவாகத்திறனும், நகர தூதன் வார இதழின் ஆசிரியர் திருமலைச்சாமியின் எழுத்தாற்றலும் இந்தி எதிர்ப்புப்போருக்கு உரமூட்டின.
- ❖ எழுத்து, பேச்சு, நாடகம் ஆகியவற்றைக் கலைஞர் பகுத்தறிவுப் பிரச்சாரத்திற்குப் பயன்படுத்தியவர்.
- ❖ கலைஞரின் எழுத்துப்பணி பதினைந்தாம் வயதில் தொடங்கியது. கலைஞர் முதன் முதலாகப் படைத்தது கிழவன் கனவு என்பதாகும்.
- ❖ மூடநம்பிக்கை ஒழிப்பு, சாதி ஒழிப்பு, மொழிப்பற்று ஆகியவை கலைஞர் படைப்புக்களின் அடிநாதம்.
- ❖ போராட்டமே கலைஞர் வாழ்வு.

- ❖ இயற்கை நுண்ணறிவும், கடும் உழைப்பும் கலைஞரின் மூலதனங்கள்.
- ❖ இந்நூற்றாண்டு கலைஞர் தமிழ்க் காலம்.
- ❖ கலைஞரின் தமிழ்ப்பற்றை, சங்கத்தமிழ் என்னும் நூல் காட்டியுள்ளது.
- ❖ தொல்காப்பியப் பூங்கா என்னும் தலைப்பு குறிப்புப்பொருள் தொல்காப்பியப்பூங்காவில் அமைந்துள்ள உள் தலைப்புகள் எளிமையின் வெளிப்பாடு.
- ❖ தாய் காவியம், நாவலைக் கவிதை வடிவில் வெளியிட்ட புதுமை, முறையில்லா அதிகார வர்க்கத்தை இளைஞர்கள் தட்டிக்கேட்க வேண்டும் என்ற உள்ளீட்டுக் கருத்து வரவேற்கத்தக்கது.
- ❖ புலப்பாட்டு நெறி 18 ஆம் நூற்றாண்டில் சிறப்பிடத்தைப் பிடித்தது.
- ❖ புலப்பாட்டு நெறியின் தந்தை, கோரஸ்
- ❖ புலப்பாட்டுத் திறன் தமிழில் தனித்து வளரவில்லை, என்றாலும் அதன் கூறுகள் தமிழில் உண்டு. புலப்பாட்டுத் திறன் என்பது கருத்தைத் தெளிவாக விளங்க வைத்தலாகும்.
- ❖ பேச்சு அல்லது எழுத்தால் கேட்பவரை, படிப்பவரைத் தன்வயப்படுத்தும் கலை புலப்பாட்டு நெறி.
- ❖ தமிழில் சொல்லும் முறை, தொகை, உரை மரபுகள் புலப்பாட்டு நெறியின் கூறுகள்.
- ❖ தண்டியலங்காரம் சுட்டும் வைதருப்ப நெறி புலப்பாட்டுத் திறனாகும்.
- ❖ தொல் காப்பியரின் உத்திவகை புலப்பாட்டு நெறியாகும்.
- ❖ தொல்காப்பியப்பூங்காவில் கலைஞரின் உரைவிளக்கப் புலப்பாட்டு நெறியை நாடகவிளக்கம், பாடம் நடத்தல் முறை, தன்னுணர்வு, கதை சொல்லல், விரிவுரை அமைவு, அகத்துறை உணர்வு, காட்சி விளக்கம், பாத்திரத்தின் வாயில், உலக வரலாறு

சமுதாயக்குறை, ஓவியக் காட்சி, உரையாடல், சீர்திருத்தம், திருவிழா அறிவியல், எளிய விளக்கம், பழைய நாடகப் புலப்பாடு, எழுத்திநடை, ஆரிய மறுப்பு,கவிதை விளக்கம், தமிழ் வழி உயர்வு தாழ்வு மறுப்பு, விளக்கக் குறிப்பு, தருக்கம்,வாழ்வியல் தத்துவம், சமுதாயச் சிந்தனை, சொற்பொருள் விளக்கம், எதிர்நிலைப் பாத்திரவாயில், நகைச்சுவை, மரபு மாற்றல், வரலாறு, நடப்பியல், புதுமைவிளக்கம், தன் படைப்பை இணைத்தல், பிறர் உரையை எடுத்தாளல், தன்னை வியத்தல், தலைப்பு, தெய்வம், முன்னோர்களைச் சுட்டல், பழைய இலக்கியம், வடசொற்கள் ஆகிய நாற்பத்தொரு களன்களின் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளனர்.

- எல்லா வகையான அறிவிற்கும் கவிதை எல்லைக் கோடு.
- தாய் காவியத்தில் 56 உவமைகளைக் கலைஞர் படைத்துள்ளார்.
- கலைஞரின் தாய்ப்பற்றின் வெளிப்பாடே தாய் காவியம்.
- கலைஞரின் உரைநடை அவர் கையாண்ட புலப்பாட்டு நெறிகளுக்குரிய சான்று.
- உத்தி வகையை அறுதியிட்டுக் கூறமுடியாது. படைப்பாளர்களின் எண்ண ஓட்டத்திற்கேற்ப உத்தி அமையும்.
- கலைஞர் படைப்புக்களில் நாடகக் கலையின் முனைப்பு நிரம்ப அமைந்துள்ளன.
- தூக்கத்திற்கு மதிப்பளிக்காமை, உழைப்பு ஆகியவை கலைஞரின் தனித்திறன்களில் உயர்நிலையை அடைந்துள்ளன.
- கூர்த்த மதி, விரைந்த செயலாக்கம், நினைவாற்றல், பகையைப் பாராட்டும் திறன், விரிவடைத்தல், சொற்சிலம்பம், நகைச்சுவையோடு குறைகூறும் பாங்கு தனித்திறன் வரிசையில் அமைவன.
- ஆட்சித்திறனும் தமிழ்மொழி வளமும் கலைஞரின் திறன்களில் தனியிடம் பெற்றவை.

# துணைநூற் பட்டியல்


**மூலநூல்கள்**

*கருணாநிதி.மு.கலைஞர்* — **தொல்காப்பியப் பூங்கா**
*தமிழ்க்கனி*
*சென்னை, 2003.*

*கருணாநிதி.மு.கலைஞர்* — **கலைஞரின் கவிதை நடையில் கார்க்கியின் தாய்காவியம்**
*தமிழ்க்கனி*
*சென்னை, 2004.*

**துணைநூல்கள்**

*அறவாணன்.க.ப.* — **தொல்காப்பியக் களஞ்சியம்**
*பாரி, சென்னை, 1975.*

*இராமலிங்கத் தம்பிரான்.கொ (ப.ஆ.)* — **தண்டியலங்காரம்**
*கழகம்*
*சென்னை, 1992. (பதினெட்டாம் பதிப்பு)*

*இலக்குவனார்.சி.* — **தொல்காப்பிய ஆராய்ச்சி**
*வள்ளுவர்*
*புதுக்கோட்டை, 1971.*

*இராமநாதன் செட்டியார், வே.பா.கரு.* — **தொல்காப்பியச் செல்வம்**
*அண்ணாமலை பல்கலைக்கழகம்*
*சிதம்பரம், 1965.*

*இராமலிங்கம்.மா* — **இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்இலக்கியம்**
*தமிழ்ப் புத்தகாலயம்*
*சென்னை, 1973.*

இளமுருகு பொற்செல்வி.மீ.சு. **கருணாநிதி யார்?**
காதலர் பண்ணை
பெரியகுளம், 1951.

கருணாநிதி,மு.கலைஞர் **கவிதைகள்**
பாரதி, சென்னை, 1995.

கருணாநிதி மு.கலைஞர் **மேடையில் வீசிய பூங்காற்று**
பாரதி, சென்னை, 1990.

கருணாநிதி மு.கலைஞர் **குறளோவியம்**
பாரதி, சென்னை, 1985.

கருணாநிதி மு.கலைஞர் **சங்கத்தமிழ்**
ராக்போர்ட், சென்னை, 1987.

கருணாநிதி மு.கலைஞர் **கலைஞரின் கவிதைகள்**
தமிழ்க்கனி, சென்னை, 1977.

கருணாநிதி மு.கலைஞர் **16 கதையினிலே**
திருமகள் நிலையம்
சென்னை, 1997.

கருணாநிதி மு.கலைஞர் **முத்துக்குளியல்** I & II
பூம்புகார், சென்னை 2000.

கதிர்வேல்பிள்ளை.கதிர் **தமிழ்மொழி அகராதி**

கிருஷ்ணமூர்த்தி,கோ **தொல்காப்பிய ஆய்வின் வரலாறு**
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை, 1990.

கைலாசபதி.க. — **கவிதைக் கலை**
பாட்டாளிகள், சென்னை, 1976.

சஞ்சீவி.ந. — **இலக்கியத்தலைவர் கலைஞர்**
அருள் வாழ்வு
சென்னை 1989

சண்முகசுந்தரம்.சு.டாக்டர் — **கலைஞர் கலை இலக்கியத்தடம்**
காவ்யா
பெங்களூர் 1999.

சச்சிதானந்தன் — **மேலை இலக்கிய அகராதி**
மாக்மில்லன்
சென்னை 1983.

சாமுவேல்.ஜி — **ஷெல்லியின் கவிதைக்கலை**
மணி, சென்னை, 1988.

சிங்காரவேலு முதலியார் — **அபிதான சிந்தாமணி**
சென்னை.

சுப்பிரமணியன் ச.வே. — **காப்பியப் புனைதிறன்**
தமிழ்ப் பதிப்பகம்
சென்னை, 1982.

சுப்பிரமணியன்.க.நெல்லை — **மேலைநாட்டுப் புலப்பாட்டு நெறி**
உமா, திருநெல்வேலி, 1987.

சுந்தரம்.பொ. — **கலைஞரின் கவிதைச்சிற்பம்**
தமிழ் ஆராய்ச்சியாளர் பேரவை
சென்னை, 1971.

தமிழண்ணல் — **ஆய்வியல் அறிமுகம்**
*மீனாட்சி, மதுரை, 1986.*

தமிழண்ணல் — **தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகள்**
*மீனாட்சி, மதுரை, 1982.*

தமிழரசி — **தமிழ் இலக்கிய உத்திகள் ஓர் அறிமுகம்**
*கற்பகம், சென்னை, 2002.*

தெட்சிணாமூர்த்தி,பி. — **புலப்பாட்டு நெறி**
*இலஞ்சியார், திருநெல்வேலி, 1984*

மாதவன்.சிவ. — **பாரதியார் கவிதைகளில் அணிநலம்**
*சுந்தரம், தூத்துக்குடி 2003.*

மனோகரன்.கி.நாஞ்சில் — **தமிழகத்தலைவர் கலைஞர்**
*பூம்புகார், சென்னை 1988.*

வலம்புரி ஜான் — **வரலாற்றில் கலைஞர்**
*பானு சென்னை, 1978.*

வில்வம், ஏ.கே. — **அஞ்சுகச் செல்வன்**
*தென்னக வெளியீடு*
*சென்னை, 1989.*

**கலைக்களஞ்சியம்**

**கலைக்களஞ்சியம்**
*ஐந்திணை*
*சென்னை, 1987.*

**வாழ்வியற்களஞ்சியம்** *(தொகு.ஆறு)*
*தமிழ்ப் பல்கலைக்கழகம்*
*தஞ்சாவூர், 1988.*

*அகராதி* **கழகத் தமிழகராதி**
*கழகம்*
*சென்னை 2003 பதினெட்டாம் பதிப்பு.*

*விழா மலர்கள்* **கலைஞர் மணிவிழா மலர்**
*முரசொலி அறக்கட்டளை*
*சென்னை.*

**கலைஞர் பவளவிழா மலர்**
*முரசொலி அறக்கட்டளை*
*சென்னை.1998.*

**கலைஞர் 77வது பிறந்த நாள் விழாமலர்**
*முரசொலி அறக்கட்டளை*
*சென்னை.2000.*

*இதழ்கள்* **மன்றம் (மாத இதழ்)**
*மன்றம் (13 - 1948)*
*முரசொலி (நாளிதழ்)*
*சென்னை.*
*கல்கி (வார இதழ்)*
*சென்னை.*

**ஆய்வேடு**

*அருணாசலம்.மு. புலவர்* **கலைஞரின் தொல்காப்பியப்பூங்கா**
*முனைவர்பட்ட கணினி தட்டச்சுப்படிவம்*
*தேசியக் கல்லூரி*
*திருச்சி 2006.*

பெண்ணரசி.ப.

**கலைஞர் மு.கருணாநிதியின் படைப்புக்களில் சங்கஇலக்கியக் கூறுகள்**
முனைவர் பட்ட ஆய்வேடு
(கணினி தட்டச்சு)
அரசர் கல்லூரி திருவையாறு, 2004.

ஜோதி ரவீந்திரன், அ.

**கலைஞர் மு.கருணாநிதியின் கருத்துப் புலப்பாட்டுநெறி**
(கணினி தட்டச்சுப் படிவம்)
வெ.ப.சு. தமிழியல் ஆய்வு மையம்
மதிதா இந்துக்கல்லூரி
திருநெல்வேலி, டிசம்பர் 2002.

**ஆங்கில நூல்கள்**

Edward P.S. Collett — **Classical Rhetoric**
Formaodern student
Oxford University, New York 1971.

George Saintsbury — **A History of English Criticism**

Richerd L.Graves — **Rhetoric and Composition**

Richards I.A. — **The Philosophy of Rhetoric**
Oxford University, New York.

John D.Jumpced — **Retheloric / Peter Dix on**
The critical Idiom
Fakenham Norfolk 1971.

William Berton — **Encyclopaedia Britanica**
Vol.23, 1969.
The new Encyclopaedia Britanica
Vol.2, 1989.
Text food, Methodology and Rhetoric
Directorate of Distance Education
Madurai Kamaraj University, Madurai.

